14th March 1959]

(ஆ) இவர்களுள், ஹரிஜனங்கள் எத்தனை பேர் ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) The Production-*cum*-Service Centre for the manufacture of hurricane lanterns at Palni has not yet commenced production.

(*b*) The question does not arise.

MR. SPEAKER : Questions are over.

**[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]**

## II.—PRIVILEGE MOTION *RE* INCORRECT PUBLICATION OF PROCEEDINGS IN THE "DINAMANI".

MR. SPEAKER : Subsequent to Sri K. Anbazhagan raising the issue of privilege over the 'Dinamani' publishing an incorrect report of the proceedings of the House, the Paper has issued a correction in its issue, dated 13th March 1959. They have also published the news just after the Editorial thereby giving prominence to the correction. They have published a correct version of the proceedings that took place that day. Besides, they have also stated that the headline using the word " நயவஞ்சகம் " is wrong. They have expressed their regret for the same. Further, they have also expressed regret for the incorrect news. In my opinion this may be accepted as unconditional apology and the regret expressed by the Paper may be accepted. The matter may, therefore, be dropped.

## III.—VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1959-60—*cont.*

### DEMAND XXIV—LABOUR INCLUDING FACTORIES

MR. SPEAKER : We shall now take up Demand XXIV, Labour including Factories. The Hon. Minister may move the Demand.

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, on the recommendation of the Governor, I move—

" That the Government be granted a sum not exceeding Rs. 30,29,700 under Demand XXIV—Labour including Factories."

கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மான்யக் கோரிக்கையில், சென்ற ஆண்டு தொழிலாளர்கள் சம்பந்தமாக என்னென்ன காரியங்கள் செய்யப்பட்டிருக்கின்றன என்பதை ஒரு புத்தக ரூபமாக வெளியிட்டிருக்கிறேன். ஏனென்றால் இதைப் பற்றி ஆரம்பத்திலேயே விவரித்து சொல்லவேண்டுமென்று சொன்னால் அதற்கு குறைந்தது முக்கால் மணி நேரமாவது பிடிக்கும். அதற்குப் பிறகு கனம் அங்கத்தினர்கள் சொல்கிற வாதங்களுக்குப் பதில் சொல்லவேண்டுமென்று சொன்னால் அதற்கும் ஒரு முக்கால் மணி நேரமாவது பிடிக்கும். ஆகவே, இருக்கிற அவகாசத்தில் ஒன்றரை மணி நேரத்தை நானே எடுத்துக்கொள்ளக் கூடாதென்று இதையே எனது பேச்சாக அச்சடித்து கனம் அங்கத்தினர்களுக்கு வழங்கியிருக்கிறேன். இது சம்பந்தமாக கனம் அங்கத்தினர்கள் கூறுகிற யோசனைகள் எல்லாவற்றிற்கும் இறுதியில் பதில் சொல்கிறேன் என்று சொல்லிக்கொண்டு இந்த மான்யக் கோரிக்கையை பிரேரேபிக்கிறேன்.

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் பக்கிரிசாமி கொண்டு வந்திருக்கும் வெட்டுப்பிரேரணையை எதிர்க்கட்சியினர் எல்லோரும் ஆதரிக்கிறார்கள் என்று சேட்டேன். ஆகவே, பக்கிரிசுவாமி அவர்களை அதை பிரேரேபிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

[14th March 1959

SRI S. PAKKIRISAMI PILLAI : Sir, I move—

"That the allotment of Rs. 30,29,700 under Demand XXIV—Labour including Factories—be reduced by Rs. 100."

MR. SPEAKER : How long will the Minister take for his reply?

THE HON. SRI R. VENKATARAMAN : Forty-five minutes.

MR. SPEAKER : I understand that the Opposition has selected Mr. P. S. Chinnadurai to speak at the end before the Minister's reply. I will give him and Mr. Pakkirisami Pillai twenty minutes each. Others will have ten minutes each.

SRI S. PAKKIRISAMI PILLAI : சபாநாயகர் அவர்களே, இந்த மானியக் கோரிக்கைமீது ரூபாய் நூறு அளவிற்கு ஒரு வெட்டு வேண்டுமென்று பிரேரேபிக்கும்போது அதன் நோக்கம், அரசாங்கத்தால் இன்று அனுஷ்டிக்கப்பட்டு வரும் கொள்கைகளைப் பற்றி எடுத்துக் காட்டுவதற்காகத்தான். இந்த ராஜ்யத்தில் முதலாளிகள் தொழிலாளர்களைச் சுரண்டிக் கொண்டிருக்கும் நிலை, அன்னிய ஆதிக்கத்தின்கீழ் எப்படியிருந்ததோ அப்படியேதான் இன்றும் இருக்கின்றது. தொழிலாளர்களை முதலாளிகள் சுரண்டுவதில் இருந்து, தொழிலாளர்களை அந்த சுரண்டலில் இருந்து முழுவதும் மீட்கும்படியானதொரு நிலையை வகுப்பதற்குவேண்டிய தீவிர நடவடிக்கைகளை இந்த அரசாங்கம் எடுக்கவில்லை என்பதை சுட்டிக் காட்டும் வகையில் நான் பல உதாரணங்களை எடுத்துச் சொல்லக் கடமைப் பட்டிருக்கிறேன். அன்னிய ஆட்சி இருந்தபோது இந்தச்சட்டங்கள் இயற்றப் பட்டன. அந்தச் சட்டங்களிலுள்ள ஷரத்துக்களில் மாறுதல்கள் இன்னும் அதிகமாக செய்யப்படவில்லை. காலத்திற்கு ஏற்ற மாதிரியாக அண்டை அயல் நாடுகளில் தொழிலாளர்களுக்குப் பலவித சலுகைகள் கொடுக்கப் பட்டு பெரிய பெரிய மாறுதல்கள் அங்கெல்லாம் ஏற்படுத்தப்பட்டு வருகின்றன என்பதைப் பார்த்திருந்தும்கூட மிதவாதக் கொள்கையில், முதலாளித்துவ மனப்பான்மையில் இந்த அரசாங்கம் தன் காரியங்களை இன்னும் நடத்திக்கொண்டு போகிறதைப்பார்த்து நாம் வெட்கித் தலை குனியவேண்டிய நிலையில் இருக்கிறோம். சாதாரணமாக தொழிலாளர்களின் நியாயமான குறைகளைப் போக்க வேண்டும், அவர்களுக்கு நியாயம் கிடைக்க வேண்டும், முதலாளிகள் செய்யும் அக்கிரமங்களிலிருந்து தொழிலாளர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கவேண்டுமென்று லேபர் ஆபீஸரைக் கண்டு அவர்கள் ஒத்துழைப்பைப் பெற்று கன்ஸிலியேஷன் செய்யப்படவேண்டுமென்றால், லேபர் ஆபீஸர் சிபார்சு செய்து அரசாங்கத்திற்கு அனுப்பும் ரிப்போர்ட் அதிகாரிகள் கையில் போகும்போது முதலாளிகள் அவர்களுக்கு வேண்டியவர்களாக இருப்பதால் கோர்ட்டிற்குப்போனால் எந்த நிலையில் அது போய் நிற்கும் என்று பரிசீலனை செய்து கடைசியில் மந்திரிகளுக்கு அனுப்பும்போது தொழிலாளர்கள் கேட்பது நியாயம் என்று தெரிந்தாலும் சில கேஸ்களில் அதை மறுத்து விடுகிறார்கள், கோர்ட்டிற்கு விடுவதற்கு. அப்படிக் கோர்டிற்கு போனாலும் கூட கோர்ட்டில் இருக்கும் நீதிபதிகள் பல கேஸ்களில் முதலாளித்துவ மனப்பான்மையில் தீர்ப்பு கொடுக்கும் ஒரு நிலைதான் இருக்கிறது. அப்படி தொழிலாளர்களுக்கு சாதகமாக ஏதாவது நன்மை கிடைத்துவிட்டால் முதலாளிகள் ரிட் போட்டு தடைசெய்துவிடுகிறார்கள். இப்படி ஒவ்வொருயிடத்திலும், தொழிலாளர்கள் நன்மையடைவதற்குப் பெரிய தடைகள் இருக்கின்றன. இம்மாதிரியான ஒரு நிலைமை இன்னும் நீடிக்காமல் இருப்பதற்கு அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள். சாதாரணமாக நல்ல வழியிலே, நேர்மையான வழியிலே தொழிலாளர்கள் நடத்தப்படவேண்டுமென்றாலும் கூட, அவர்களுக்கு நியாயம் கிடைப்பது கஷ்டமாகத்தான் இருந்துகொண்டு வருகிறது. முதலாளிகள் பல அக்கிரமங்கள் செய்கிறார்கள்.

14th March 1959] [Sri S. Pakkirisami Pillai]

ஏதோ கொஞ்சம் எதிர்த்துப் பேசினல் "டிஸ்மிஸ்" செய்து விடுகிருர்கள். ஒருவர் "டிஸ்மிஸ்" செய்யப்பட்டதை எதிர்த்து மற்ற தொழிலாளர்கள் எதிர்ப்பு காட்டுவார்களேயானல், ஒரு நாள் வேலே நிறுத்தம் செய்வார்களேயானல், அத்தனே பேர்களும் முதலாளியினல் "டிஸ்மிஸ்" செய்யப்படும்படியான நிலேயிலே இப்பொழுது இருந்துகொண் டிருக்கிருர்கள். அம்மாதிரி டிஸ்மிஸ் செய்யப்பட்ட பிறகு, அந்த விஷ யத்தை கோர்ட்டுக்கு எடுத்துக்கொண்டு போனல், அங்கே சட்டப்படி அது சரி என்று தீர்ப்பு கிடைக்கிறது. உதாரணமாக ராஜஸ்தானில் ஒரு நீதிபதி, "ஸ்டாண்டிங் ஆர்டருக்கு" விரோதமாக திடீரென்று வேலே நிறுத்தம் செய்யப்பட்டதால், அதன் விளேவாக தொழிலாளர்கள் "டிஸ்மிஸ்" செய் யப்பட்டது சரி என்று தீர்ப்பு கூறியிருக்கிருர். இதற்கு மேல் "சுப்ரீம்" கோர்ட்டுக்கு அப்பீல் செய்ததில், திடீரென்று வேலே நிறுத்தம் செய்த தால் இம்மாதிரி டிஸ்மிஸ் செய்தது நியாயம்தான் என்று சொல்லி விட்டார்கள். எந்த விதமான சூழ்நிலேயில் தொழிலாளிகள் இம்மாதிரி நிலேமைக்கு வந்தார்கள், எந்தவிதமான சூழ்நிலேயில் வேலே நிறுத்தம் செய்யப்பட்டது, அதாவது 'எக்ஸ்டர்னல் ஸர்கம்ஸ்டான்ஸஸ்' என்ன என்பதைப்பற்றி நீதிபதிகள் ஆலோசிப்பது இல்லே. அங்கு இருக்கும்படி யான சூழ்நிலேயைப்பற்றி ஆலோசிக்காமல், ஏதோ புஸ்தக ரீதியிலே, சட்ட ரீதியிலே, நிலேமையைக்கண்காணித்துத்தான் இம்மாதிரி தீர்ப்புக்கொடுக் கிருர்கள். இதைப் பார்த்துத்தான் எல்லா முதலாளிகளும் யாராவது ஒரு தொழிலாளி கொஞ்சம் எதிர்த்தால் உடனே அவனே டிஸ்மிஸ் செய்துவிடுகிருர் கள். அம்மாதிரி ஒரு தொழிலாளி, "டிஸ்மிஸ்" செய்யப்பட்டதை எதிர்த்து மற்ற தொழிலாளிகள் போராட்டம் நடத்தினல், அவர்கள் எல்லோரையுமே டிஸ்மிஸ் செய்துவிடும் பழக்கத்தை இப்பொழுது எல்லா இடங்களிலும் கொண்டுவந்திருக்கிருர்கள். இப்பொழுது மேட்டூர் தொழி லாளிகளேப் பொறுத்த வரையில் ஸ்டாண்டிங் ஆர்டருக்கு விரோதமாக நாம் ஒன்றும் செய்ய முடியாது என்று நீதிபதி தீர்ப்பு கிடைத்திருக்கிறது. வண்டலூர் மோட்டார் தொழிலாளர்கள் பல கஷ்டங்களுக்கு உள்ளானது இதன் விளேவாகத்தான். அதேமாதிரியான ரீதியில்தான் அடையார் என்ஜினியரிங் தொழிலாளிகள் முதலாளிகளுடைய அக்கிரமம் தாங்காமல் வேலே நிறுத்தம் செய்தார்கள். ஒரு நாள் வேலே நிறுத்தம் செய்ததற்கு போலீஸ்காரர்கள் அந்த இடத்தைச் சுற்றி வளேத்துக்கொண்டு, தொழி லாளர்கள் அத்தனே பேர்களேயும் பலாத்காரமாக போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துக்கொண்டுபோய் "லாக் அப்பில்" வைத்திருந்தார்கள். அதன் பேரில் அவர்களுக்கு நான் ஜாமீன் கொடுத்து அழைத்துக்கொண்டு வரவேண்டிய நிலேயில் இருந்தது. ஒருவர் ஏதாவது அக்கிரமமாக, கண் டிப்பாக உத்தரவு போட்டால், அக்கிரமமாக ஏதாவது நடவடிக்கை எடுத் தால், அதை எதிர்ப்பதோ, அல்லது கொஞ்சம் தங்கள் எதிர்ப்பு எண் ணத்தைக் காணபிப்பதோ ஒவ்வொரு மனிதனுக்கும் சகஜம். அம்மாதிரி யான நிலேயிலே, ஒரு "போலீஸ் அல்லது ராணுவ டிஸிப்பிளின்" தொழி லாளர்களிடையே இருக்கவேண்டுமென்ற நிலேயிலே தொழிற்சாலேகள் இயங்குமேயானல், அம்மாதிரியானநிலேமை நம் நாட்டை எந்த வழிக்குக் கொண்டுபோகும் என்று நாம் சொல்லுவதற்கு முடியவில்லே. எந்த வழியிலாவது தொழிலாளிகள் இப்படி அடக்கி ஒடுக்கப்படுவார்களேயானல், அது பெரிய ஒரு ஆபத்தான நிலேமைக்குத்தான் கொண்டுபோய்விடும். பிலாய், ரூர்கேலா என்ஜினியரிங் தொழிலாளர்கள் அடக்கப்பட்டுவிட்டார் கள். அவர்கள் தொழிற்சங்கம் ஒன்றும் செய்ய முடியவில்லே. ஏதோ உற்பத்திப் பெருக்குக்கு எதிராக, நாட்டின் நலனுக்கு எதிராக அவர்கள் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிருர்கள் என்ற காரணத்தைக் கொண்டு வந்து அவர்கள் ஒடுக்கப்பட்டுவிட்டார்கள். அதே மாதிரி இப்பொழுது திருச்சி. . .

MR. SPEAKER: இந்த சபையில் நம் ராஜ்யத்திலுள்ள ஸ்தாபனங் களேப்பற்றி மட்டும் பேச வேண்டும். பிலாய், ரூர்கேலா தொழிற்சாலே களேப்பற்றி பாராளுமன்றத்தில் பேசலாம். அவைகளேப்பற்றி இந்த சபை யில் பேசுவது நல்லது அலல.

SRI S. PAKKIRISAMI PILLAI: நான் உதாரணமாகத்தான் சொன்னேன்.

[14th March 1959

**MR. SPEAKER** : உதாரணமாகக்கூட சொல்லுவது நல்லது அல்ல. மற்ற ராஜ்யங்களிலுள்ள தொழிற்சாலைகளைப்பற்றி இங்கு என் பேசவேண்டும்?

**SRI S. PAKKIRISAMI PILLAI** : உங்கள் கட்டளைக்கு அடிபணிகிறேன். இருந்தாலும், . (சிரிப்பு.)

**MR. SPEAKER** : கட்டளைக்கு அடி பணிகிறேன் என்று சொல்லிவிட்டு, "இருந்தாலும்" என்று சொல்லுவது நல்லது அல்ல. அது சபாநாயகருடைய தீர்ப்பைப்பற்றி ஏதோ சொல்ல ஆரம்பிப்பது போல் இருக்கிறது.

**SRI S. PAKKIRISAMI PILLAI** : மந்திரிகள் இந்த மாதிரியான . . .

**MR. SPEAKER** : மந்திரிகளைப்பற்றி பேசப்போகிறீர்களா ? "இருந்தாலும்" என்று சொன்னது என்னுடைய தீர்ப்பைப்பற்றி ஏதோ சொல்ல வருவது போல் இருந்தது. வேண்டுமென்றால் மந்திரியைப்பற்றி சொல்லுங்கள்.

**SRI S. PAKKIRISAMI PILLAI** : இம்மாதிரியான நிலைமை நம்முடைய ராஜ்யத்திலே கூட இருக்கிறது. அம்பத்தூர் ஸைகிள் பாக்டரி தொழிலாளர்களின் கோரிக்கைகள் லேபர் ஆபீஸர் விசாரணைக்கு வந்து, பிறகு அது அரசாங்கத்தார் பரிசீலனைக்கு வந்தது. அநேக மாதங்கள் ஆகியும்கூட இன்னும் அது பற்றி தீர்ப்போ, பதிலோ கொடுக்கப்படவில்லை. கோரிக்கைகளை ஒப்புக்கொள்ள முடியாது என்று சொல்லக்கூடிய நிலை வருமோ என்றுகூட சந்தேகமாக இருக்கிறது. அந்த மாதிரியான நிலையிலே இந்த விஷயத்தில் முடிவு சொல்லாமல் இத்தனை நாட்களாக வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இம்மாதிரியான நிலையிலே, இம்மாதிரி மனப்பான்மையினால் அங்கே தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தார்கள். அதனால் அநேகம் பேர்கள் "டிஸ்மிஸ்" செய்யப்பட்டார்கள். தொழிலாளர்கள் தங்களுக்கு நியாயம் நேர்மையான ஒரு நிலையிலே கிடைக்க வேண்டும் என்று எதிர்பார்த்தாலுங்கூட, தொழிலாளர்களுக்கு பல தடைகள் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. இதனால் தொழிலாளர்கள் மனது கசிந்து, கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும்படியான ஒரு நிலை இருந்துகொண்டிருக்கிறது.

"பேர் வேஜஸ் ஆக்ட்" என்பதை 1949-ம் ஆண்டில் திட்டவட்டமாக வெளியிட்டிருக்கிறார்கள். டாக்டர் அக்ராய்டு ஆராய்ச்சி செய்த பிரகாரம் சத்து உள்ள உணவை தொழிலாளர்கள் குடும்பம் வாங்குவதற்குப் போதுமான சம்பளத் தொகையை அவர்களுக்குக் கொடுத்து, அதோடு கூட "ஸப்ஸிடைஸ்டு ஹௌஸிங் ஸ்கீம்"படி இப்பொழுது 12 ரூபாய், 10 ரூபாய் வீட்டு வாடகை கொடுப்பதையும் சேர்த்து 3 பேர்கள் இருக்கும்படியான குடும்பத்தைக் காப்பாற்றக்கூடிய நிலைமையில் அவர்களுக்கு "பேர் வேஜஸ்" நிர்ணயிக்க வேண்டும். அம்மாதிரி இன்னும் அரசாங்கம் நிர்ணயிக்க முன்வரவில்லை. அப்படி நிர்ணயிக்கப்படும்பொழுது, இப்பொழுது கொடுக்கும்படியான சம்பளத் தொகையில் 5 சதவிகிதமோ, 10 சதவிகிதமோ அதிகமாகக் கொடுக்கவேண்டி வரலாம். அதுபற்றி யோசிப்பதற்கு நம்முடைய ராஜ்ய அரசாங்கம் இன்னும் முன்வரவில்லை. அம்மாதிரி அதிகச் சம்பளம் கொடுப்பதற்கு தொழிற்சாலைகளின் முதலாளிகளுக்கு சக்தி இருக்கிறது. அவர்களுக்கு நிறைய லாபம் கிடைக்கிறது. ஏஜன்ஸி கமிஷன் மூலம் லட்சக்கணக்கான பணத்தை அவர்கள் சம்பாதிக்கிறார்கள். மற்றும் பல முதலாளிகள் பணத்தைக் கொள்ளை அடிக்கும்படியான நிலையில் கொழுத்துக்கொண்டிருக்கிறார்கள். அம்மாதிரி நிலைமையை அவர்கள் வைத்துக்கொண்டிருப்பதற்கு அனுமதிக்கப்படுகிறதே தவிர, தொழிலாளர்களுக்கு லாபத்திலிருந்து பங்கு கிடைப்பதற்கு எந்த விதமான வழிவகையும் செய்யப்படவில்லை. தொழிலாளிகளை நல்ல மாதிரியான நிலைமைக்குக் கொண்டுவருவதற்கு அரசாங்கம் இன்னும் எந்தவிதமான நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளவில்லை, எந்தவிதமான முயற்சியும் எடுத்ததாகத் தெரியவில்லை.

14th March 1959] [Sri S. Pakkirisami Pillai]

நைனிடாலில் சமீபத்திலே ஒரு முக்கூட்டு மகாநாடு நடந்தது. அதன் பிரகாரம் " இம்ப்ளிமெண்டேஷன் " கமிட்டி ஒன்று அமைக்க ஏற்பாடு செய்தார்கள். அதாவது அந்த மகாநாட்டில் என்னென்ன தீர்ப்பு கொடுத்தார்களோ, அங்கே என்னென்ன அக்ரிமெண்டு செய்துகொண்டார்களோ, அதையெல்லாம் முதலாளிகள் செய்தார்களா என்று பரிசீலனை செய்வதற்கு, அந்தத் தீர்ப்புகளை அமுல் நடத்தி தொழிலாளர்களுக்கு உதவி செய்யவேண்டுமென்ற நோக்கத்தோடு இம்மாதிரி கமிட்டி அமைக்கப்படவேண்டுமென்று தீர்மானம் செய்தார்கள். இந்த முக்கூட்டு மகாநாட்டின் தீர்ப்புகளை அமுல் நடத்துவதற்கு நம்முடைய ராஜ்யத்தில் இம்மாதிரி ஒரு கமிட்டி அமைக்கப் பட்டிருக்கிறதா, அப்படி அமைக்கப்பட்டிருந்தால் அவர்கள் என்ன வேலை செய்தார்கள் என்பது தெரியவில்லை. அதற்கு இப்பொழுது ஒரு உதாரணம் சொல்லுகிறேன். சென்னை மைலாப்பூரிலுள்ள காமதேனு டாக்கீஸ் முதலாளி தொழிலாளர் சங்கத்துடன் ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டார். ஆனால் வருடங்கள் ஐந்து ஆகியும் இதுவரை ஒப்பந்தத்தின்படி நடந்திருப்பதாக தெரியவில்லை. அவர்கள் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்று தெரியவில்லை. அவர்களின் மீது அரசாங்கம் எந்தவிதமான நடவடிக்கையும் எடுத்திருப்பதாகத் தெரியவில்லை. இன்னொரு விஷயம் என்னவென்றால் இன்னும் பல தொழிலாளர்களுக்கு குறைந்தபட்சக்கூலி (மினிமம் வேஜஸ்) நிர்ணயிக்கப்படவில்லை. இன்றைக்கும் பல ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் குறைந்த சம்பளம் பெற்றுக் கொண்டு பட்டினியில் வாடுகின்ற நிலைதான் இருந்து கொண்டிருக்கிறது. 9·30 a.m. வேலை எதுவாக இருந்தாலும் தொழிலாளர்கள் கஷ்டப்பட்டு வேலை செய்து இன்னும் அதிகமாக கொடுப்பார்களா என்று ஏங்கிக்கொண்டிருக்கின்ற நிலைதான் இருந்து கொண்டிருக்கிறது. இந்த மாதிரியான நிலையில்தான் பலவேறு இடங்களிலுமுள்ள தொழிலாளர்கள் கஷ்டப் பட்டுக்கொண்டிருக்கிறார்கள். தொழிலாளர்களுக்குச் செய்யவேண்டிய பல நன்மைகளையும் தொழிலாளர்களுக்கு வேண்டியிருக்கிற அரசாங்கம் செய்து கொடுக்கவில்லை என்பதை வருத்தத்தோடு தான் சொல்ல வேண்டியிருக்கிறது. இப்போது பிராவிடன்டு பண்டு $6\frac{1}{4}$ சத விகிதம் என்றிருப்பதை 8 1/3 சத விகிதமாக மாற்றவேண்டுமென்று தொழிலாளர்கள் கூக்குரலிட்டுக்கொண்டிருக்கிறார்கள். இவ்விதம் மாற்றுவதின் மூலமாக அவர்கள் ரிட்டயராகின்ற சமயத்திலோ அல்லது, வயதாகின்ற சமயத்திலோ அல்லது நோய்வாய்ப்பட்டு இருக்கின்ற சமயத்திலோ அவர்களுக்குக் கணிசமான தொகை கிடைக்கும் என்ற நோக்கத்துடன் தான் இந்தமாதிரியாக மாற்றவேண்டும் என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் அதைச் செய்து கொடுப்பதற்கு அரசாங்கம் முன் வரவில்லை. இதற்கு மத்திய அரசாங்கம் என்ன சொல்லுகிறது என்றால் தொழிலாளி வேண்டுமானால் போட்டுக்கொள்ளட்டும், முதலாளிகளை நாம் வற்புறுத்த முடியாது என்று சொல்லிவிட்டார்கள். இம்மாதிரியான மனப்பான்மையில் மத்திய அரசாங்கமும் ராஜ்ய அரசாங்கமும் போய்க்கொண்டிருப்பதைப் பார்த்து நாம் உண்மையிலேயே வருத்தப்படுகிறோம். அதோடு கூட (எம்ப்ளாயீஸ் இன்ஷூரன்ஸ்) ராஜ்ய சுகாதார சட்டத்தின் கீழ் $4\frac{3}{4}$ சத விகிதம் முதலாளிகளிடமிருந்து பெற்று குடும்பத்திலுள்ளவர்களுக்கும் இந்தச் சலுகையை விஸ்தரிக்கவேண்டும் என்கிற எண்ணத்தில் தொழிலாளர்கள் ராஜ்யத்தில் பெரும் கூச்சல் போட்டுக்கொண்டிருக்கிறார்கள். இவற்றையெல்லாம் எந்த சமயத்தில் கொண்டு வரப்போகிறார்கள் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். அதோடு இப்போது பீடித் தொழிலாளர்களுக்காக சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறது என்று சொல்லப்படுகிறது. ஆங்காங்கு மந்திரிகள் மகாநாட்டுக்கும் போய் வந்துகொண்டிருக்கிறார்கள். ஆனால் உண்மையில் அந்தத் தொழிலாளர்களுக்கு நன்மை செய்ய வேண்டுமென்ற எண்ணம் அவர்கள் மனதில் இருக்கிறதா இல்லையா என்று நமக்குத் தெரியவில்லை. இன்னும் எத்தனை நாளைக்குத்தான் காலதாமதம் செய்யப்போகிறார்கள் என்று தெரியவில்லை. கடைசியாக இப்போது ஸப்ஸிடைஸ் டுஹௌஸிங் ஸ்கீம் கொண்டு வந்திருக்கிறார்கள் தொழிலாளர்களுக்கு. அது வரவேற்கிற அம்சம்தான். இதன் மூலம் தொழிலாளி 10 சதமானம் செலவு செய்தால், 25 சதமானம் மான்யமாக மத்திய அரசாங்கத்தால் கொடுக்கப்படும் என்ற ஒரு ஏற்பாட்டை வைத்திருக்கிறார்கள். ஆனால் அரசாங்கமே முன்நின்று முழுச்செலவையும் ஏற்றுக்கொள்வதற்குமுன்

[Sri S. Pakkirisami Pillai] [14th March 1959

வந்தால்தான் இந்த வீடுகட்டிக்கொடுக்கும் திட்டம் தொழிலாளர்கள் மத்தியில் வெற்றிபெறும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். இல்லை யென்றால் இந்த திட்டம் அவர்கள் மத்தியில் கிளம்புவது கஷ்டம்தான். ஏதோ ஒன்றிரண்டு இடங்களில் மட்டும் முதலாளிகள் வீடுகள் கட்டிக் கொடுக்கிறார்கள். இருந்தாலும், பொதுவாக பல முதலாளிகளும், குறிப் பாக பி. அண்டு சி. முதலாளிகள் எல்லாம் இதற்கு இசைந்து கொடுக்க மாட்டார்கள். இவர்கள் எல்லாம் கடூரமான சிந்தனை உள்ளவர்கள். இவர்கள் எல்லாம் ஒரு ரகத்தைச் சேர்ந்தவர்கள். தமிழில் ஒரு பழ மொழி உண்டு,

" இரணம் கொடுத்தால் இடுவர்—இடாரே
சரணம் கொடுத்தாலும் தான் ".

என்ற ஒரு நிலையில் இரணம் கொடுத்தால் தான் இடுவர் என்கிற ஒரு போக்கில் இருந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு எதிராக ஒரு பெரிய எதிர்ப்பைக்காட்டி அதன் மூலமாகத்தான் அவர்களைக் கேட்டுக் கொள்ள வேண்டியிருக்கிறது. அதன் மூலமாகத்தான் சல்லிக்காக கொடுக் கும்படியான நிலையில் வரவேண்டியிருக்கிறது. எந்தக் காரியத்திற்கும் ஒரு போராட்டமும் எதிர்ப்பும் தெரிவிக்க வேண்டிய நிலைமையில் இருந்து கொண்டிருக்கிறார்கள். அந்த ஒரு நிலைமையில் தான் சமீபத்தில் பி. அண்டு சி. மில்லில் ஏற்பட்ட தகராறுக்கு மந்திரி அவர்கள் தலையிட்ட பின்னால்தான் போனஸ் தொகை கொடுத்தார்கள். இந்த நிலைமையில் தான் முதலாளிகள் இருந்துகொண்டிருக்கிறார்கள் என்று சொன்னால், அவர்கள் பேரில் அரசாங்கம் எந்த முறையில் நடவடிக்கை எடுத்து வருகிறது என்பதைத்தான் காண முடிகின்றது. அரசாங்கமும் முதலாளித் துவ மனப்பான்மையிலேதான் போய்க்கொண்டிருக்கிறார்கள், முதலாளி களுக்குப் பயந்துகொண்டுதான் இருக்கிறார்கள். உண்மையில் முதலாளி களுக்கு எதிராக நடவடிக்கை எடுப்பதற்கு தைரியமில்லாத நிலையில் தான் இருந்து கொண்டிருக்கிறார்கள். சமீபத்தில் ஒரு பத்திரிகை ஆபீஸிலிருந்து பத்திரிகை நிருபர்களை பத்திரிகை முதலாளி நிறுத்திவிட்டார். அவ்விதம் நிறுத்தப்பட்டதின் காரணமாக, அந்த பத்திரிகைத் தொழிலாளர்களைச் சேர்ந்த சங்கமும் தொழிலாளர்களும் சேர்ந்து அந்த் பத்திரிகை ஆபீஸ் முன்னால் போய மறியல் செய்தார்கள். அவ்விதம் மறியல் செய்ததற்கு எதிர்ப்பாக முதலாளியின் சார்பில் ஒரு ஒலி பெருக்கியை அமைத்து, குண்டர்களைக்கொண்டுவந்து கத்திச்சண்டை, பாணுச்சண்டை முதலியவைகளை எல்லாம் காட்டி கூச்சல்போட்டு, மறியல் செய்கின்றவர்களுக்கு எதிராக. . . .

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த சண்டை, தகராறு எல்லாம் தீர்ந்து போன விஷயம், இதை இப்போதும் கிளப்பினால் அதனால் ஏதாவது வம்பு வந்துவிடுமோ என்று பயமாக இருக்கிறது. . .

SRI S. PAKKIRISAMI PILLAI : இந்த மாதிரியான பயம் ஏன் இருக்க வேண்டுமென்று கேட்கிறேன். அரசாங்கத்தினுடைய மனப்பான் மையைத்தான் இது காட்டுகிறது. தொழிலாளர்களுக்கு நியாயம் செய்து கொடுக்க வேண்டும் என்கிற எண்ணம் முதலாளிகளுடைய மனதில் கிடையாது. எந்தவிதமான சட்டத்தை நிறைவேற்றினாலும்கூட அவைகளை எல்லாம் ஏமாற்றுவதற்குத்தான் முதலாளிகள் முயற்சிக்கிறார்கள். ஆனால் நியாயத்திற்காக முதலாளிகளை எதிர்த்து தொழிலாளர்கள் போராட் டம் நடத்தும்போது முதலாளிகளுக்கு அவர்கள் பக்கம் போலீஸ் பந்தோ பஸ்து எல்லாம் கொடுக்கிறார்கள். ஆனால் தொழிலாளர்களைச் சிறையில் அடைத்து பலவிதமான கஷ்டங்களுக்கு உள்ளாக்குகிறார்கள். இந்த மாதிரி யான நிலை இருந்து கொண்டிருந்தால் தொழிலாளர்களுக்கு எந்தவிதமான நன்மையும் இந்த அரசாங்கத்தால் கிடைக்காது. ஆகவே தொழிலாளர் களுக்கு எதிராக நடக்கும் முயற்சிகளை எல்லாம் இந்த சர்க்கார் தடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு இந்த மானியத்தின் மீது நான் கொடுத்திருக்கும் வெட்டுப் பிரேரணையை நான் பிரேரேபிக்கிறேன்.

SRI J. MATHA GOWDER : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த தொழிலாளர் மானியத்தை ஆதரித்து என்னுடைய கருத்துக்களைத் தெரிவிக்க விரும்புகிறேன். இப்போது பிளான்டேஷன் ஏரியாவில் தோட்

14th March 1959] [Sri J. Matha Gowder]

டங்களில் வேலே செய்யக்கூடிய உத்தியோகஸ்தர்களுக்கு வேலேயைப் பற்றிய உறுதி அவர்களுக்குக் கொடுக்கப்படுவதில்லே. எப்படியென்ருல் ஒரு தோட்டத்தில் வேலே செய்யக்கூடிய தோட்ட உத்தியோகஸ்தர்கள் 20 வருடங்கள் வரை அதே தோட்டத்தில் வேலே செய்த பிறகும், அந்தத் தோட்டம் புதிதாக ஒருவரால் விலேக்கு வாங்கப்பட்டால் அதில் எற்கனவே வேலே செய்து கொண்டிருந்த உத்தியோகஸ்தர்களே எல்லாம் நிரந்தரமாக வைத்திருக்கவேண்டும் என்ற நியதி இப்போது இல்லே. 20 வருடம் வேலே செய்தாலும் கூட வேலேக்கு உத்திரவாதம் இல்லாத நிலேமை தான் இருந்து கொண்டிருக்கிறது. அதன் காரணமாக எத்தனே வருடங்களாக வேலே செய்தாலும் தங்களுக்கு வேலே நிரந்தரமாக கிடைக் காதோ என்ற எண்ணத்தில் அங்குள்ள உத்தியோகஸ்தர்கள் எல்லாம் இருந்து கொண்டிருக்கிருர்கள். இதற்குக் காரணம் என்னவென்ருல் வெள்ளேக்காரர்கள் தோட்டங்களே வைத்துக் கொண்டிருந்த காலத்தில் அவர்களின்கீழ் வேலே செய்து கொண்டிருந்த உத்தியோகஸ்தர்களுக்கு அதிகமான சம்பளம் கொடுத்திருப்பார்கள். அதே தோட்டத்தை இப் போது இந்தியர்கள் வாங்கும் போது, அதே உத்தியோகஸ்தர்களே வைத்துக் கொண்டிருந்தால் வெள்ளேக்காரர்கள் கொடுத்த சம்பளத்தைத் தாங்களும் கொடுக்க வேண்டியிருக்குமே என்று நினேத்து, அவர்களே வேலேயி லிருந்து நிறுத்திவிட்டு, பதிலாக தங்கள் சொந்தக்காரர்களே வேலேக்கு வைத்துக்கொள்ளலாம் என்ற எண்ணத்துடன் ஏற்கனவே வேலே செய்து கொண்டிருந்த உத்தியோகஸ்தர்களே வேலேயிலிருந்து நிறுத்திவிடுகிருர் கள். சாதாரணமாக ஒரு உத்தியோகஸ்தருக்கு 400 ரூபாய் சம்பளம் இருந்தால், அந்த முதலாளிக்குச் சொந்தக்காரரைக் கொண்டு விட்டு, 100 ரூபாயில் அமர்த்தி விடலாம் என்று எண்ணி அவர்களே நிறுத்தி விடுகிருர்கள். ஒரு உத்தியோகஸ்தர் 20 வருஷங்களாக ஒரு தோட்டத்தில் வேலே செய்த பிறகு, அவருக்கு 4 அல்லது 5 குழந்தைகள் ஆன பிறகு, புதிதாக ஒருவர் அந்தத் தோட்டத்தை வாங்கி அந்த உத்தியோகஸ்தரை நிறுத்தி விட்டால் அவர்களுடைய நிலேமை என்ன ? ஒரே துறையில், தோட்டத்தில் வேலே செய்த பிறகு வேறு வேலேக்குப் போக அவர்கள் லாயக்கில்லே. வேறு எந்தத் தோட்டத்திற்காவது போனுல் அங்கே உத்தி யோகஸ்தர்கள் இருக்கிற காரணத்தினுல், அவர்களுக்கு வேலே இல்லாமல் நிர்க்கதியாக, நடுத் தெருவில் நிற்க வேண்டிய நிலே ஏற்படுகிறது. அமைச்சர் அவர்கள் கூட ஸ்டாப் அஸோஸியேஷன் தலேவராக பணி யாற்றியிருக்கிருர். அவர்களேப் பற்றி அமைச்சர் அவர்கள் அறிந்திருப்பார் கள். இதற்கு ஏதாவது வகை செய்து வேலே உத்திரவாதம் அளிக்கக் கூடிய நிலேயில் ஏற்படுத்த வேண்டுமென்று அமைச்சர் அவர்களேக் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக சமீபத்திலே ஹைக்கோர்ட்டிலே ஸ்டாண்டிங் ஆர்டர் பற்றி வந்திருக்கிற தீர்ப்பு தொழிலாளிகள் தலேயில் பெரிய கல்லேப் போடுவதாக இருக்கிறது. ஹைக்கோர்ட் தீர்ப்பிலே முதலாளிகள் நினேத் தால் ஒரு தொழிலாளியினுடைய வேலேயை டெர்மினேட் செய்யலாம்—ஒரு மாத நோட்டீஸ் கொடுத்து டெர்மினேட் செய்யலாம்—என்று இருக் கிறது. ஒரு மானேஜ்மெண்ட் ஒரு மாத நோட்டீஸ் கொடுத்து ஒரு தொழிலாளியை நிறுத்தி விட்டால், லேபர் கோர்ட் ஏற்படுத்துவதிலே, லேபர் கோர்ட்டுக்கு எந்த வித பவருமில்லாமல் போகிறது. ஹைக்கோர்ட் டெஸிஷனே வைத்துக்கொண்டு பார்த்தால் லேபர் கோர்ட்டுக்கு எந்த வித ஜூரிஸ்டிக்ஷனும் கிடையாது. அதனுல் அவர்கள் எந்த வித தீர்ப்பும் செய்ய முடியாத நிலேயில் இருக்கிருர்கள். லேபர் கோர்ட் ஒரு தீர்ப்புக் கொடுத்தாலும் கூட, ஒரு மாத நோட்டீஸ் கொடுத்து ஒருவரை நிறுத்தி விடலாம். அவருடைய வேலே அவசியமில்லே என்று ஒருவரை நிறுத்தி விடலாம். குறிப்பாக இது யாரை பாதிக்கிறது என்று சொன்னுல், தொழிற் சங்கத்தில் இருக்கக்கூடிய தலேவர்களே, தொழிலாளிகள் ஒரு தொழிற் சங்கத்தில் வேலே செய்யக் கூடியவர்களேப் பழி வாங்கும் நோக்கத்தோடு, ஒரு மாத நோட்டீஸ் கொடுத்து அவர்களே நிறுத்தி விட எதுவாக இருக்கிறது. இதற்கு உடனடியாக ஏதாவது அமெண்ட் மெண்ட் கொண்டு வந்து அவர்களுக்கு வேலே உத்திரவாதம் அளித்து தொழிலாளிகளே நிறுத்த முடியாது ஏதாவது வழி கண்டாக வேண்டு

[Sri J. Matha Gowder] [14th March 1959

மென்று கேட்டுக் கொள்கிறேன். இந்த விஷயத்தில் மத்திய சர்க்காருக்கு வற்புறுத்தி எழுதியிருப்பதாக நினைக்கிறேன். அமைச்சர் அவர்கள் இதைப் பற்றி எழுதியிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். அதிக நாள் எடுத்துக்கொண்டால், அதற்குள்ளாக முதலாளிகள் தங்களுக்கு வேண்டாத ஆட்களை நிறுத்தி அவர்களை ஒழித்து விடுவார்கள். பிறகு சட்டம் வந்தும் பிரயோசனமில்லாமல் இருக்குமாதலால் இதைப் பற்றி உடனடியாக வற்புறுத்திச் சொல்லவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். சமீபத்திலே தமிழ்நாடு வொர்க்கிங் ஜர்னலிஸ்ட்ஸ் கொடுத்த ரிட் பெடிஷன் 184 ஆப் 58-லே இந்த மாதிரி தீர்ப்பு வந்திருக்கிறது. முதலாளிகள் என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்ற நிலைமை வந்திருக்கிறது. அமைச்சர் அவர்கள் இதற்கு விரைவாக தக்க ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, தோட்டங்களில் இருக்கக்கூடிய தொழிலாளிகள் மது விலக்கு சம்பந்தப்பட்ட குற்றங்களில் தண்டிக்கப்பட்டால் அவர்களுக்கு வேலை கொடுக்கக் கூடாது என்று ஒரு உத்திரவு இருக்கிறது. மது விலக்குக் குற்றத்தில், அதாவது ஒருவர் மதுவைக் குடித்தோ அல்லது விற்பனை செய்தோ தண்டிக்கப்பட்டால் அவர்களுக்குக் கிரிமினல் புரொஸீஜர் கோட் பிரகாரம் தண்டனை கொடுக்கப்படுகிறது. அதிகமான தண்டனை கொடுக்க வேண்டுமா ? கொடுத்துக் கொள்ளட்டும். தண்டனை முடிந்து திரும்பி வந்தால் வேலை கொடுப்பதில்லை என்று நிராகரிக்கப்பட்டிருக்கிறார்கள். எல்லோரும் அப்படி நிராகரிக்கப்பட்டிருக்கிறார்களா என்றால் இல்லை. சிலர் அந்தத் தொழிலாளிகளை வேலைக்கு எடுத்துக் கொள்கிறார்கள். சிலர் எடுத்துக் கொள்வதில்லை. இந்த விஷயத்தில் உத்திரவு சரியாக இல்லை. ஒன்று அவர்களை வேலைக்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று இருக்க வேண்டும், அல்லது அவர்களை வேலைக்கு எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை என்று இருக்க வேண்டும். மானேஜ்மெண்டுக்கு இஷ்டமிருந்தால் எத்தனை மது விலக்குக் குற்றங்களுக்காக தண்டிக்கப்பட்டிருந்தாலும், எத்தனை தடவை தண்டிக்கப்பட்டிருந்தாலும், வந்த பிறகு வேலைக்கு எடுத்துக் கொள்கிறார்கள். மானேஜ்மெண்டுக்கு வேண்டாதவர்களாக இருந்தால் வேண்டாம் என்று சொல்லி விடுகிறார்கள். இதனால் தொழிற்சங்கங்களில் வேலை செய்யக் கூடியவர்களுக்குச் சங்கடமான நிலைமை ஏற்படுகிறது. ஒருவரை வேலைக்கு அமர்த்திக் கொண்டு விட்டு, இன்னொரு தோட்டத்தில் வேலைக்கு அமர்த்திக் கொள்ள வில்லை என்றால் அந்தத் தோட்டத்தில் வேலை செய்யக் கூடியவர்கள் எங்களிடத்தில் வந்து கேட்கிறார்கள். அதற்கு நாங்கள் போய் அந்த மானேஜ்மெண்டைக் கேட்டால், அதற்கு அவர்கள் "முடியாது, நாங்கள் என்ன செய்வது, சர்க்கார் உத்திரவு இருக்கிறது" என்று சர்க்கார் உத்திரவைக் காண்பிக்கிறார்கள்.

THE HON. SRI R. VENKATARAMAN : சர்க்கார் இதிலே எந்த வித உத்திரவையும் போடவில்லை என்று தெரிவித்துக் கொள்கிறேன். சர்க்கார் உத்திரவு, எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் இல்லை, எடுத்துக்கொள்ளக்கூடாது என்றும் இல்லை என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

SRI J. MATHA GOWDER : மிகவும் சந்தோஷம். அதைத் தான் நீலகிரி ஜில்லா மதுவிலக்கு அட்வைஸரிக் கமிட்டியிலே கூடச் சிபாரிசு செய்து சர்க்காருக்கு அனுப்பியிருக்கிறோம். ஒரு குற்றத்திற்கு இரண்டு தண்டனை கொடுப்பது உசிதமல்ல என்று தான் நாங்கள் சிபாரிசு செய்திருக்கிறோம். அந்தச் சிபாரிசு அங்கிருந்து அனுப்பப்பட்டிருக்கிறது. அதையும் சர்க்கார் பரிசீலனை செய்து திட்ட வட்டமான உத்திரவு போட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக தோட்டங்களில் இருக்கக்கூடிய டாக்டர்கள். முதலாளிகள் தோட்டங்களில் சொந்த டாக்டரை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். பிரசவ அலவன்ஸ் வேண்டும் என்று தோட்டத்தில் வேலை செய்யக் கூடிய ஒரு தாய்மார் பிரசவ நாள் ஆகிவிட்டது என்று கணக்குப் பார்த்து, தோட்டத்தில் இருக்கக் கூடிய டாக்டரிடம் போனால், இன்னும் பிரசவநாள்

14th March 1959] [Sri J. Matha Gowder]

ஆகவில்லை, ஆகையால் வேலைக்குப் போகலாம் என்று சொல்லுகிறூர். அப்படிப் போகும் போது ஒரு தோட்டத்திலே, நீலகிரியில் கோவேலி தோட்டத்தில் ஒரு தாய்மாருக்கு மூன்றுவது நாள் பிரசவம் ஆகி விட்டது. டாக்டரிடத்தில் போய் நாங்கள் கேட்ட போது என்ன சொல்லுகிறூர் என்றூல், " என்னிடத்தில் அவர்கள் சரியாகக் காண்பிக்க வில்லை, அதனுல் சரியானபடி சோதனை செய்யவில்லை ; மூன்று நாட்களுக்குள் பிரசவம் ஆகிவிட்டால் அதற்கு நான் என்ன செய்வது? " என்று சொல்லுகிறூர். அதன் பிறகு என்ன செய்வது என்று புரியவில்லை. இதைக் கட்டுப் படுத்த சட்டம் இல்லை. மானேஜ்மெண்ட் மீது நடவடிக்கை எடுக்க சட்டம் இல்லாத காரணத்தினுல் ஒன்றும் செய்ய முடியாத நிலை இருக்கிறது. நான் ஒரு யோசனையை அமைச்சர் அவர்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். ஒரு தோட்டத்தில் டாக்டரிடம் ஒரு தாய்மார் பரிசோதனை செய்யவேண்டுமென்று போனுல், பரிசோதனைக்குப் போன தேதியைக் குறிப்பிட்டுக் கொடுக்க வேண்டுமென்று ஏற்படுத்தவேண்டும். இவ்வளவு மாதம் ஆகிறது என்று டாக்டர் சொல்வதைக் குறித்துக்கொடுத்தால், பிறகு மானேஜ்மெண்டைப் பிடித்து அவர்களிடத்திலிருந்து ஏதாவது ஒரு முறையிலே கோர்ட்டுக்குப் போய் தொகையை வசூலிக்க முடியும், நஷ்டத்தைப் பெற முடியும் என்ற நிலை இருக்கிறது. அதற்கு நாம் ஒரு சர்க்குலர் அனுப்பி, மானேஜ் மெண்ட்களிடத்தில், தோட்ட டாக்டர்கள் ஏதாவது தவருகச் சொன்னுல் அதற்கு மானேஜ்மெண்ட் பொறுப்பாளி என்று சொல்ல வேண்டும்.

தோட்டங்களில் இன்றைக்கு இருக்கக்கூடிய ஆஸ்பத்திரிகளில் சரியான மருந்துகள் வைத்திருப்பது கிடையாது. ஆஸ்பத்திரிக்குப்போனுல், தலை வலிக்கும் கால் வலிக்கும் மருந்து கொடுத்து அனுப்பி விடுகிறூர்கள். பெரிய கேஸ்களுக்கு நல்ல மருந்துகளை உபயோகிக்காத காரணத்தினுல், கடைசி கட்டத்தில் உயிருக்கு ஆபத்து வரும்போது வெளியே அனுப்பி விடுகிறூர்கள். எங்களிடத்தில் எக்ஸ்-ரே இல்லை, அது இல்லை, இது இல்லை, என்று சொல்லி சர்க்கார் ஆஸ்பத்திரிக்கு அனுப்பி, அங்கே வந்த பிறகு அவர்கள் இறந்து விடுகிறூர்கள். இந்த நிலை எப்போது மாறுவது என்று புரியவில்லை. எந்தத் தோட்டங்களிலும் சரியான மருந்துகள் வைக்க வேண்டும். அவர்களுக்கு மருந்து வைப்பதற்குச் சக்தி இருக்கிறது. சக்தி இருந்தும் வைக்காத காரணம் தெரியவில்லை. தோட்டத் தொழிலாளி தானே என்று உதாசினமான முறையில் நடந்து கொள்கிறூர்களே தவிர, நிதி வசதி இல்லாத காரணத்தினுல் இல்லை என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

கடைசியாக, ஆள் பூர்த்தி செய்வதைப் பொறுத்த வரையில் ஒரு தொழிலாளி ரிடையரானுல், அந்த ஆளுக்கு பதில் ஆள் போடுவதில்லை. பிளாண்டேஷன் பொறுத்த வரையில் ஒரு ஏக்கருக்கு 1¼ ஆட்கள் வைக்க வேண்டும் என்று இருக்கிறது. 400 ஏக்கர் இருந்தால் 500 தொழிலாளி கள் இருக்கவேண்டும் என்று சர்க்கார் சிபாரிசு செய்திருக்கிறது. இப்படி 500 தொழிலாளிகள் இருப்பதிலே சில தொழிலாளிகள் ரிடையராகிப் போய் விட்டால், அப்படி எத்தனை பேர்கள் போயிருக்கிறூர்களோ அத்தனை ஆட்களைப் போட வேண்டுமென்று தொழிற் சங்கத் தலைவர்கள் கேட்டால் அதற்கு எந்த விதமான பதிலும் கொடுப்பதில்லை. ''எங்களுக்கு வேண்டிய நாளில் எடுத்துக் கொள்கிறோம். இன்றைக்கு அவசியமில்லை'' என்று சொல்லுகிறூர்கள். ஒரு ஏக்கருக்கு குறைந்தது 1¼ ஆட்கள் வேண்டு மென்று உத்திரவு போட்டிருக்கிறோம். வேண்டும்போது வைத்துக் கொள் கிறோம் என்று கூறுவதைப் பார்க்கும்போது, அவர்கள் வேண்டுமென்றே செய்கிறூர்கள் என்று தோன்றுகிறது. இதைப் பரிசீலனை செய்து ஏக்க ருக்கு 1¼ ஆள் வீதம் நிச்சயமாக வைத்துக் கொள்ளவேண்டும், ஒரு தொழிலாளி ரிடையரானதும் அந்த இடத்தில் ஆள் பூர்த்தி செய்யவேண்டு மென்று உத்திரவு போடவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, சர்விஸ் நிலைமையைப் பற்றிச் சொல்லவேண்டும். ஒரு தொழிலாளி வேலையிலிருந்து நிற்பதாயிருந்தால் அந்தத் தொழிலாளி எந்தத் தேதியிலிருந்து ஒரு தோட்டத்தில் வேலை செய்தாரோ அந்தத் தேதியிலிருந்து தான் சர்விஸ் கணக்கிடப்படவேண்டும். ஆனுல், முத லாளிகள் என்ன சொல்கிறூர்கள் என்றூல், "சென்ற ஆண்டு தான்

[Sri J. Matha Gowder] [14th March 1959

தோட்டம் வாங்கியிருந்தேன், நான் வாங்கியிருந்த தேதியிலிருந்து தான் சர்விஸ் கணக்குப் பண்ண முடியுமே தவிர, நீ எப்போதோ வேலே செய்தால் அதைப்பற்றி எனக்குக் கவலே இல்லே" என்று சொல்லி விடுகிருர்கள். இது சம்பந்தமாக கேஸை லேபர் கோர்ட்டுக்கு எடுத்துப் போயிருந்தோம். தட்டப்பாரை தோட்டத் தொழிலாளிகள் சார்பாக கேஸ் போட்டிருந்தோம். அதில் எங்களுக்குச் சாதகமாக உத்திரவு வந்திருக் கிறது. ஒரு தோட்டம் எத்தனே கை மாறியிருந்தாலும் தொழிலாளி எந்தத் தேதியில் அதில் வேலேக்கு அமர்ந்தானே அந்தத் தேதியிலிருந்து அவனுடைய சர்விஸ் கணக்குப் பண்ணவேண்டும், பணம் கொடுக்க வேண்டும் என்று திட்டவட்டமாக லேபர் கோர்ட் உத்தரவு அளித்திருக் கிறது. இந்தத் தீர்ப்பை மற்ற தோட்டச் சொந்தக்காரர்களும் அமுல் படுத்தவேண்டும் என்று தொழிற்சங்கத்தார் கேட்டபோது, பக்கத்துத் தோட்டத்தின் முதலாளி, "அந்தத் தீர்ப்பு எங்களேக் கட்டுப்படுத்தாது; இந்தத் தோட்டம் சம்பந்தமாக கோர்ட் தீர்ப்புக் கொடுக்கவில்லே; கோர்ட் தீர்ப்பு வந்தால் தருகிறேம்" என்று சொல்கிருர். இது என்ன நியாயம் என்று தெரியவில்லே. ஒவ்வொரு தோட்டம் சம்பந்தமாகவும், தொழில் கோர்ட்டுக்குப் போய்த் தீர்ப்பு வாங்கிவரவேண்டுமென்ருல், எந்தத் தொழிற் சங்கத்தால் முடியும் என்பதைச் சற்று யோசிக்கவேண்டும். ஒரு கேசுக்கு தீர்ப்பு சொல்லியிருக்கும்போது, அதையேதானே இதுபோன்ற மற்ற கேஸ் களுக்கும் பொருந்தும்படியாகச் செய்யவேண்டும்? ஆகவே தொழில் கோர்ட்டில் ஒரு தோட்டத்தைப் பற்றிய தீர்ப்பு அடுத்த தோட்டத்திற்கும் அமுல் படுத்தும்படியாக உத்திரவை தயவு செய்து பிறப்பிக்கவேண்டு மென்று அமைச்சர் அவர்களே மிகப் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன். ஒவ்வொரு தோட்டம் சம்பந்தமாகவும் கோர்ட்டுக்கு தொழிற்சங்கம் போவ தென்பது முடியாத காரியமாக இருக்கிறது.

தோட்டத்தில் இருக்கும் தொழிலாளிகளுடைய வீடுகளுக்கு மின்சாரம் இல்லே. எல்லா "ஸ்டாப்"களுக்கும் மின்சாரம் இருக்கிறது. ஆனுல், தோட்டத் தொழிலாளிகளுடைய வீட்டுக்கு மின்சாரம் இல்லே. தொழி லாளர் என்ற காரணத்திற்காக மின்சாரம் கொடுப்பதில்லே, உத்தியோகஸ் தர் என்ற காரணத்திற்காக மின்சாரம் கொடுப்பதென்ருல், அது எப்படி நியாயம் ஆகும்? தொழிற்சாலேயில் மின்சாரம் உபயோகப்படு கிறது, பங்களாக்களுக்கு மின்சாரம் உபயோகப்படுகிறது. ஆனுல், தோட்டத் தொழிலாளிகளுடைய வீட்டுக்கு ஏன் மின்சாரம் கொடுக்கக்கூடாது? கொடுக்கலாம். அதிலே கொஞ்சம் பணம் போய்விடுமே என்ற காரணத் தால் முதலாளிகள் மறுக்கிருர்கள். கட்டாயமாக மின்சார வசதி தோட்டத் தொழிலாளிகளுடைய வீடுகளுக்கு செய்து கொடுக்கும்படியாக முதலாளி களே வற்புறுத்தி அரசாங்கம் உத்தரவிடவேண்டுமென்று கேட்டுக்கொள் கின்றேன்.

அடுத்தபடியாக, தேயிலேத் தொழிலாளர்களுடைய பிரச்சனே. ஒரு தொழிலாளியை பாக்டரியில் ஆறு மாதம் வரையில் வேலே செய்யவிடாமல் ஐந்து மாதம் வரை பாக்டரியில் வேலேசெய்ய வைத்துவிட்டு, உடனே காட்டுக்கு அனுப்பிவிடுகிருர்கள். "பாக்டரியில் வேலே செய்த தொழி லாளியை ஏன் காட்டுக்கு அனுப்பியிருக்கிறீர்கள்?" என்று கேட்டால், "ஒரு தொழிலாளியை எந்த இடத்திற்கும் மாற்றுவதற்கு எங்களுக்கு அதிகாரம் இருக்கிறது" என்று முதலாளிகள் சொல்கிருர்கள். பாக்டரியில் முதல் நம்பரில் வேலே செய்தவரை இரண்டாம் நம்பருக்கு மாற்றட் டும், ஐந்தாம் நம்பருக்கு வேண்டுமானுல் மாற்றட்டும். ஆனுல், பாக்டரி யில் வேலே செய்த தொழிலாளரை ஏன் காட்டுக்கு மாற்றுகிருர்கள் என்ருல், பாக்டரி ஆக்டிலிருந்து தப்பிப்பதற்கு அப்படிச் செய்கிருர்கள். பாக்டரி ஆக்டின்கீழ் கண்டிருக்கும் சலுகைகளேத் தொழி லாளிகளுக்குக் கொடுக்கக் கூடாது என்ற கெட்ட எண்ணத்தோடு மாற்று கிருர்களே தவிர வேறு ஒன்றும் இல்லே. ஒரு பாக்டரிக்கு எத்தனே ஆள் வேண்டும் என்று லேபர் இன்ஸ்பெக்டர், பாக்டரி இன்ஸ்பெக்டர் நிர்ண யித்து, எத்தனே வேலேக்காரர்கள் இருக்கிருர்கள் என்று பார்க்கிருர்கள். அதனுல்தான், முதலாளிகள் பாக்டரியில் தொழிலாளிகளே நிரந்தரமாக வைப்பதில்லே. ஐந்து மாதங்களுக்குமேல் வைப்பதில்லே. ஆருவது மாதம் காட்டுக்கு அனுப்பிவிட்டு, மறுபடியும் அந்த ஆளேயே திரும்பவும்

14th March 1959] [Sri J. Matha Gowder]

பாக்டரியில் சேர்த்துக்கொள்கிறார்கள். பாக்டரியிலே வேலை செய்யக்கூடிய வர்களை காட்டுக்கும் காட்டிலே வேலை செய்யக்கூடியவரை பாக்டரிக்குமாக மாற்றி சட்டத்தில் கண்டுள்ள சலுகைகளைத் தொழிலாளர்களுக்குத் தராமல் ஏமாற்றிக்கொண்டிருக்கிறார்கள். ஒரு தேயிலை பாக்டரியில் இன்றைக்கு 30, 40 பேர்கள் வேலை செய்தால், அவர்களில் மூன்று நான்கு பேர் களுக்கு மேல் நிரந்தரமானவர்கள் இருக்காது. ஆகவே, இதைத் தயவு செய்து கனம் அமைச்சர் அவர்கள் கவனித்து ஆவன செய்யவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

லேபர் கெஜட் போடுவதாக இந்தக் குறிப்பில் காணப்படுகிறது. அது பற்றி நான் சந்தோஷப்படுகிறேன். அது நல்ல விதமாக தொழிலாளர் களுக்குக் கிடைக்க வேண்டும். தொழிற்சங்கங்களுக்கும் கிடைப்பதற்கு வழி வகை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

எம்ப்ளாயீஸ் ஸ்டேட் இன்ஷ்யூரன்ஸ் ஸ்கீம் ப்ளாண்டேஷனுக்கு தயவு செய்து விஸ்தரிக்கப்படவேண்டும். ஏதோ டாக்டர்கள் குறைவு இருப் பதன் காரணமாக இன்னும் விஸ்தரிக்க முடியாத நிலையில் இருப்ப தாகத் தெரியவருகிறது. இருந்தாலுங்கூட சர்க்கார் ஆஸ்பத்திரியில் இருக்கும் டாக்டர்களை வேலை செய்யச்சொல்லியாவது எம்ப்ளாயீஸ் ஸ்டேட் இன்ஷ்யூரன்ஸ் ஸ்கீமை தயவு செய்து ப்ளாண்டேஷன் ஏரியாவுக்கும் விஸ்தரிக்கவேண்டும் என்று அமைச்சர் அவர்களைப் பணிவோடு கேட்டுக் கொண்டு இந்த மான்யத்தை வரவேற்று என் வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

***SRI V. K. KOTHANDARAMAN:** சார், தொழிலாளிகளுக்குப் போதுமான பாதுகாப்புச் சட்டம் இல்லை என்று நான் வருத்தத்துடன் இந்த நேரத்தில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இன்றைய தினம் பார்க்கின்றோம்—முதலாளிகள் நினைத்தால் தொழிற்சாலையை மூடலாம், நினைத்தால் தொழிலாளிகளை வீட்டுக்கு அனுப்பலாம், எப்படி வேண்டு மானாலும் பழி வாங்கக் கூடிய அளவு நிலைமை இருக்கிறது. இந்த நேரத்தில் தொழில் கோர்ட்டுகள் இருந்த போதிலும் பழிவாங்கப்பட்ட தொழிலாளர்களைப்பற்றி தொழில் கோர்ட்டிலே விசாரணை செய்யப்பட்டு குறிப்பிட்ட தொழிலாளிகளை வேலையிலிருந்து நீக்கியது தவறு, ஆகவே, உடனே வேலைக்கு எடுக்கவேண்டும் என்று தொழில் கோர்ட் தீர்ப்பு கொடுத்தபோதிலும் முதலாளிகள் எடுத்துக்கொள்வதற்குப் பதிலாக ஹைக்கோர்ட்டுக்கு ரிட் போடுவதோ, மேல் கோர்ட்டுக்குப் போவதோ ஏற்படக் கூடிய நிலைமை இருப்பதன் காரணமாக வருஷக்கணக்காக வேலையில்லா மல் தொழிலாளிகள் பாதிக்கக் கூடிய நிலைமை இருந்து வருகிறது என்பது நான் சொல்லாமலே அமைச்சருக்குத் தெரிந்த விஷயம். ஆகவே, குறைந்த பட்சம் 6 மாதத்திற்குள்ளாக எந்தக் கேசாக இருந்த போதிலும் முடிய வேண்டும், 6 மாதத்திற்குள்ளாக அந்தக் குறிப்பிட்ட தொழிலாளிக்குக் குறைந்தபட்சம் மாதம் 15 தினங்களுக்குச் சம்பளம் கொடுக்கவேண்டும் என்று சட்டத்தைக் கொண்டுவருவதன் மூலமாகத்தான் வேண்டுமென்றே பழிவாங்கும் ஒரு நிலைமை இருக்கிறதே அந்த நிலைமையை நாம் மாற்றி யமைக்க முடியும். உதாரணமாக, குடியாத்தம் ஈஸ்வரன் மாட்ச் பாக்டரி யிலுள்ள சில தொழிலாளிகள் பழிவாங்கப்பட்டார்கள். அந்தத் தொழி லாளிகளைத் திரும்பவும் வேலைக்கு எடுத்துக்கொள்ளவேண்டுமென்று தீர்ப்பு வந்துகூட, இன்றையதினம் ஹைக்கோர்டில் முதலாளிகள் ரிட் போட்டிருக்கும் காரணத்தால் அந்தத் தொழிலாளர்கள் மிகவும் கஷ்டப்படக் கூடிய நிலைமை இருந்துகொண்டு வருகிறது.

அதே போன்றுதான், இன்று டானரியை எடுத்துக் கொண்டால், திடீரென்று மூடக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. நூற்றுக்கு நூறு ஹரிஜன தொழிலாளிகள்—அவர்களுக்கு வீடே கிடையாது. நிரந்தரமாக கூலி வசதியோ பாதுகாப்புச் சட்டமோ கிடையாது. கனம் அமைச்சர் அவர்கள் கூட ராணிப்பேட்டைக்கு வந்திருந்த நேரத்தில் "இது விசேஷத் தன்மை வாய்ந்தது, இதற்கு பாதுகாப்புச் சட்டங்கள் கொண்டு வர வேண்டும்" என்று மனமுருகிப் பேசியிருக்கிறார்கள். ஆகவே, டானரி தொழிலாளர்கள் விஷயமாக அத்தியாவசியமாக உடனடியாக பாதுகாப்புச்

டங்களும் குறைந்தபட்ச கூலிச் சட்டமும் கொண்டுவரவேண்டும். அது மாத்திரமல்ல. டானரி அசோஸியேஷன் மூலமாக திட்டமிட்டு பழிவாங்கு வதற்குப் பல சூழ்ச்சிகளைச் செய்கிறார்கள். இதிலிருந்து பாதுகாக்கப்பட வேண்டுமென்றால் அந்தத் தொழிலாளிகளுக்குப் போதுமான பாதுகாப்புச் சட்டங்கள் நாம் அவசியம் கொண்டுவந்தாக வேண்டும். அதுபோன்று இன்றைய தினம் பஞ்சப்படி கொடுக்கப்படுகிறது. அது இன்றைய தினம் விலைவாசி உயர்வுக்கு வேண்டிதான் கொடுக்கவேண்டும் என்பது ஒரு விதி. சுப்ரீம் கோர்ட்டிலே கூட அவர்களுக்கு முழு பஞ்சப்படி கொடுக்க வேண்டும் என்று தீர்ப்பு ஏற்பட்டிருக்கிறது. அந்த அடிப்படையிலே திரு மகள் மில் தொழிலாளிகளுக்கு முழு பஞ்சப்படி கொடுக்கவேண்டும் என்று லேபர் கோர்ட்டு தீர்ப்பு இருந்துகூட ஹைகோர்ட்டிலே ரிட் போட்டு வருஷக் கணக்கில் நீடிக்கக் கூடிய நிலைமை இருக்கிறது. ஆகவே, இன்றைக்கு முழுப் பஞ்சப்படி கொடுக்கவேண்டும். எந்தத் தொழிலில் முழுப் பஞ்சப் படி கொடுக்கவில்லையோ அதற்கான நடவடிக்கை எடுப்பதற்கான சட்டங்கள் இயற்றப்படவேண்டும் என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக் கொள் கிறேன்.

நைனிடாலில் கூடிய 16-வது அகில இந்திய தொழிலாளர் மகா நாட்டிலே எடுக்கப்பட்ட, தொழிற்சங்கங்கள் அங்கீகாரம் செய்யப்படவேண் டும் என்பது போன்ற பலதரப்பட்ட தீர்மானங்களை, முதலாளிகள் பிரதி நிதிகளும், அரசாங்கப் பிரதிநிதிகளும், தொழிற்சங்கப் பிரதிநிதிகளும் சேர்ந்து ஏகோபித்து எடுத்திருக்கக் கூடிய மெஜாரிடி முடிவுகளை உடனடி யாக அமுலுக்குக் கொண்டுவருவதற்கு சட்டத்தை உருவாக்கவேண்டும்.

அதுபோன்று ஏ. ஐ. டி. யு. சி. பிரதிநிதித்துவம் வாய்ந்தது, 15 லட்சம் அங்கத்தினர்களைக் கொண்டது. அப்பேர்ப்பட்ட ஒரு ஸ்தாபனத்திற்கு சென்னை ராஜ்ய லேபர் ஆலோசனைக் கமிட்டியிலோ வீடு கட்டும் திட்டக் கமிட்டியிலோ லேபர் போர்டிலோ ஐ. எல். ஓ. போன்ற ஸ்தாபனங்களிலோ நியாயமான போதுமான பிரதிநிதித்துவம் கொடுக்காதது வருந்தக் கூடிய விஷயம். ஆகவே, நியாயமான பிரதிநிதித்துவம் கொடுக்கப்படவேண்டும் என்பதைப்பற்றி இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்கிறேன்.

இன்ஷ்யூரன்ஸ் ஸ்கீமின் கீழே ஆஸ்பத்திரி வசதி தொழிலாளர்களுக்கு மட்டும் தான் இருக்கிறது. ஆனால், பஞ்சாப் ராஜ்யம், ஆந்திர ராஜ்யம், மைசூர் ராஜ்யம் போன்ற ராஜ்யங்களிலே இன்றைய தினம் தொழிலாளி களுக்கு மட்டுமல்ல, அவர்களுடைய குடும்பங்களுக்கும் இலவசமாக வைத் திய வசதி கொடுக்கப்படுகிறது. அதுபோன்று நம்முடைய ராஜ்யத்திலே கொடுக்கவேண்டும் என்பதை இந்த நேரத்தில் சொல்ல விரும்புகிறேன்.

10 a.m.

இந்த ராஜ்யத்தில் ஏராளமான தொழிற்சாலைகள் மூடப்பட்டிருக்கின்றன. தொழில் அபிவிருத்தி செய்யவேண்டும் என்று சொல்லக் கூடிய நேரத் தில் அநேகம் தொழிற்சாலைகள் மூடப்படுகின்றன. ஒரு பக்கத்தில் அபி விருத்தி செய்ய வேண்டும் என்று சொல்லுகிறார்கள்; மறு பக்கத்தில் தொழிற்சாலைகள் மூடப்பட்டு வருகின்றன. லட்சக்கணக்கான தொழிலாளர் களுக்கு வேலை கொடுக்கப்படுகிறது என்று சொல்லுகிறார்கள். ஆனால் தொழிற்சாலைகளின் மூடு விழாக்கள் நடந்து அநேகம் பேர்களுக்கு வேலை போய் விட்டன. இதனால் அநேகம் பேர்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். மூடப்பட்ட தொழிற்சாலைகளைத் திறப்பதற்கு வேண்டிய முயற்சிகளைக் கண்டிப்பாக எடுத்துக் கொள்ள வேண்டும். அதே போன்று பலதரப்பட்ட தொழிலாளர்களுக்கு தொழிற் சாலைகளில் குறைந்த பட்ச கூலி கொடுக்கப்படாமல் இருப்பதாலும், ஜின்னிங் பாக்டரி போன்ற இடங்களில் குறைந்த பட்ச கூலி நிர்ணயம் செய்யப்படாமல் இருப்பதாலும் இன்னும் மற்ற தொழிற்சாலைகளில் குறைந்த பட்ச கூலி நிர்ணயம் செய்யப்படாமல் இருப்பதாலும் அதிகப்படி யான தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். இதையும் கவனத் தில் எடுத்துக்கொள்ள வேண்டும். தொழிலாளர்களும் என். ஜி. ஓ.க்க ளும் சம்பள உயர்வு கேட்டால் நமது அமைச்சர்கள் எடுத்துக்காட்ட முன் வருவது என்னவென்றால் நாட்டில் இருக்கக் கூடிய 100 க்கு 80 பேர்கள் விவசாயிகள். அவர்களுக்கு மாதம் 15 ரூபாய் கூட வருமானம் இல்லாமல்

14th March 1959] [Sri V. K. Kothandaraman]

இருக்கிறார்கள். கஷ்டப்படுகிறார்கள் என்று சொல்லுகிறார்கள். அப்படிப் பட்ட விவசாயத் தொழிலாளர்களுக்கு குறைந்த பட்ச கூலி நிர்ணயம் செய்யப்பட வேண்டும். விவசாயிகளுக்கு கூலி நிர்ணயம் செய்வதோடு அவர்கள் ஒரு நாளைக்கு இவ்வளவு மணி நேரம் தான் வேலை செய்ய வேண்டும் என்றும் நிர்ணயம் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளு கிறேன். அப்படிப்பட்ட ஒரு திட்டத்தையும் அமுலுக்குக் கொண்டு வர வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

உணவுப் பொருள்களின் விலைவாசிகள் விஷம்போல் ஏறிக்கொண்டிருக் கிறது. அதே மாதிரி உணவுப் பொருள்களின் விலைவாசியையும் கட்டுப் படுத்த வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

முதலாளிகள் ஸ்டான்டிங் ஆர்டர்களைப் போட்டு விட்டு தொழிலாளர்களைப் பழி வாங்கக் கூடிய அளவில் இருக்கிறார்கள். ஆகவே அப்படிப்பட்ட ஸ்டான்டிங் ஆர்டர்கள் தொழிலாளர்களை பாதிக்காமல் இருக்கக்கூடிய தன்மையில் திருத்தி அமைக்கப்படவேண்டும் என்றுகேட்டுக்கொள்ளுகிறேன். இன்றைக்கு பல தொழிற்சாலைகளில் லேபர் ஆபீசர்களைப் போட்டாலும் அவர்கள் தொழிலாளர்களுக்கு பாதுகாப்பாக இல்லை. ஆனால் அவர்கள் முதலாளிகளுக்கு பாதுகாப்பாகத்தான் இருக்கிறார்கள். அதற்குக் காரணம் அந்த ஆபீசர்களுக்கு முதலாளிகள் சம்பளம் கொடுப்பதன் காரணமாக அவர்கள் முதலாளிகளுக்குச் சாதகமாக இருக்கிறார்களே தவிர தொழி லாளர்களுக்கு சாதகமாகவே இல்லை. முதலாளிகளுடைய சொல்லைக் கேட்கவில்லையானால் அவருடைய சீட்டுக்கிழிந்து விடும் என்ற தன்மையில் இருப்பதால் அவர்கள் முதலாளிகள் சொன்ன சொல்லுக்கு அப்பால் போவது இல்லை. அதன் காரணமாக தொழிலாளர்கள் பாதிக்கப்படுகிறார் கள். குடியாத்தம் திருமகள் மில்லில் இருக்கக்கூடிய லேபர் வெல்பேர் ஆபீசர் தொழிலாளர்களுக்குச் சாதகமாக இருந்த காரணத்தால் அவருக்கு மூன்று மாத நோட்டீஸ் கொடுத்து வீட்டுக்குப் போகச் சொல்லி விட்டு முதலாளிகளுக்கு நலைப்பட்டியாக இருக்கும் ஒருவரை அவர்களுக்கு நியமித் திருக்கிறார்கள். அதற்குக் காரணம் அவர்களுக்கு முதலாளிகள் சம்பளம் கொடுப்பதாக இருப்பதால்தான். ஆகவே சர்க்கார் இதில் கவனம் செலுத்த வேண்டும். ஒன்று அவர்களுக்கு சர்க்கார் சம்பளம் கொடுக்கவேண்டும். இல்லா விட்டால் அவர்களுக்கு முதலாளிகள் சம்பளம் கொடுத்தாலும் அவர்கள் இன்றைக்கு சர்க்கார் சொல்வது போல் நடக்க வேண்டும். அந்த அடிப்படையில் லேபர் அபீசர்கள் இருக்க வேண்டும்.

அனுபவம் இல்லாதவர்கள் லேபர் டிபார்ட்மெண்டில் நியமிக்கப்படு வதால் இன்றைக்கு பலதரப்பட்ட தகராறுகள் ஏற்படக்கூடிய ஒரு நிலைமை இருக்கிறது. ஆகவே கண்டிப்பாக அனுபவம் உள்ளவர்களைத் தான் அங்கே நியமிக்க வேண்டும். குறிப்பாக ஏன் இதைச் சொல்லுகிறேன் என்றால், இப்பொழுது லேபர் கமிஷனர் மாற்றப்பட்டிருக்கிறார். அவர் இடத்தில் யாரோ ஒரு ஐ. ஏ. எஸ். ஐயோ அல்லது ஒரு கலெக்டரையோ போடப் போவதாக வதந்தி இருக்கிறது. அது எந்த அளவில் உண்மை என்பது எனக்குத் தெரியாது. ஆகவே அந்த ஸ்தானத்திற்கு ஒரு அனுபவம் உள்ளவரைத் தான் போடவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அவ்வித ஏற்பாடு செய்தால்தான் தொழிலாளர்களுக்கு நன்மையாக இருக்கும் என்பதை இந்த சந்தர்ப்பத்தில் தெரிவித்துக் கொள்ள விரும்பு கிறேன்.

அடுத்தாற்போல் ஷாப் ஆக்ட். ஒரு தொழிலாளர் இருந்தாலும் அதற்கு மேல் இருந்தாலும் அந்த தொழிற்சாலையில் வேலை பார்க்கும் தொழி லாளர்களுக்கு பாதுகாப்பு இருந்தது. அதைத் திருத்தி அமைத்து மூன்று பேர்களும் அதற்கு மேற்பட்டும் இருந்தால்தான் அதற்கு ஷாப் ஆக்ட் அன்வயிக்கும் என்று சொன்னதின் பேரில் ஐந்தாறு பேர்கள் இருந்தால் தான் அந்தச் சட்டம் அவர்களைப் பாதிக்கும் என்று கொண்டு வந்திருப்ப தால் மூன்று பேர்களை மட்டும் தொழிலாளர்கள் என்று காண்பித்துவிட்டு பாக்கிப் பேர்கள் எல்லோரும் தன்னுடைய மச்சான் என்றும் மாமன் என்றும், தன்னுடைய சொந்தக்காரர்கள் என்றும் சொல்லி இந்த மூன்று பேர்களும் பழி வாங்கப்படுகிறார்கள். இப்படிப்பட்ட ஒரு நிலைமை இப்

[Sri V. K. Kothandaraman] [14th March 1959

பொழுது ஏற்பட்டிருக்கிறது. இதற்காக 1953-ம் ஆண்டு நமது கனம் அமைச்சர் கூட ஒரு மாபெரும் மாநாடு கூட்டி நடத்தி இருக்கிறார். ஒன்றுக்கு மேற்பட்ட தொழிலாளர்கள் இருந்தாலும் அவர்களுக்கும் இந்தச் சட்டம் இருந்தாகவேண்டும் என்று சொல்லி இருக்கிறார். ஆகவே அந்த அளவில் இந்தச் சட்டத்தை மாற்றி அமைக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

லேபர் ஆபீசரை நியமிக்கும்போது குறைந்த பட்சம் ஜில்லாவுக்கு ஒரு ஆபீசரை நியமிக்க வேண்டும். இப்பொழுது இரண்டு மூன்று ஜில்லாக்களுக்கு ஒரு ஆபீசர் இருக்கிறார். இப்படி இருப்பதால் தொழிலாளர்கள் கூப்பிட்டவுடனேயே அவர்களால் வர முடியவில்லை. ஏனென்றால் அவர்களுக்கு கார் வசதி கிடையாது. முதலாளிகள் கார் வசதி செய்து கொடுப்பதால் முதலாளிகள் கூப்பிட்டவுடனேயே அவர்கள் வந்து விடுகிறார்கள். உடனடியாக வருவதற்கு எந்த விதமான வசதியும் அவர்களுக்குக் கிடையாது. ஆகவே ஜில்லாவுக்கு ஒரு ஆபீசர் இருந்தால் அவர்களால் உடனடியாக வர முடியும். அத்துடன் அவர்களுக்குப் போக்குவரத்து வசதியும் செய்து கொடுக்க வேண்டும். அதற்கு என்று அவர்களுக்கு கார் வசதி செய்து கொடுக்க வேண்டும். லேபர் ஆபீசர்களுக்கு இப்பொழுது போதிய அதிகாரம் இல்லை. லேபர் ஆபீசர் முதலாளிகளிடம் ஏதாவது சொன்னால் முதலாளிகள் அதைக் கேட்பது இல்லை. எங்களுக்கு கமிஷனர் இருக்கிறார், மந்திரிகள் இருக்கிறார் அவர்களிடம் போய்க் கொள்ளுகிறோம் என்று சொல்லி விடுகிறார்கள். அதனால் லேபர் ஆபீசர்களுக்கு வேண்டிய அதிகாரத்தைக் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். முதலாளிகள் அவர்களை லட்சியம் செய்யக் கூடிய அளவுக்கு அவர்களுக்கு அதிகாரம் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதே போன்று தொழிலாளர்கள் தங்களுடைய குறைகளைத் தீர்த்துக் கொள்வதற்கு தொழிற்கோர்ட்டுக்குப் போக வேண்டுமென்றால் அவர்களுக்கு இலவசமாக வக்கீல்களை வைத்துக்கொடுக்க வேண்டும். தொழிலாளர்கள் திடீர் திடீர் என்று கோர்ட்டுகளுக்கு போக வேண்டியதாக இருக்கிறது. ஏதாவது தகராறுகள் வந்தால் தொழிலாளர்களைக் கோர்ட்டுக்கு போ என்று சொல்லும்போது அவர்களுக்கு இலவசமாக வக்கீல்களை அமர்த்திக்கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஏனென்றால் அடிக்கடி தொழிலாளர்களுக்கு கோர்ட்டுக்குப் போக பண வசதி கிடையாது. அந்த முறையில் அவர்களுக்கு இலவசமாக வக்கீல்களை அமர்த்திக்கொடுக்க ஏற்பாடு செய்யும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். அத்துடன் இப்படி கோர்ட்டுகளுக்குப் போகக் கூடிய கேஸ்கள் எல்லாம் ஆறு மாதங்களுக்குள் முடிப்பதற்கும் ஏற்பாடு செய்ய வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். அத்துடன் கேஸ்கள் நடக்கும் காலத்தில் குறைந்த பட்சம் மாதத்தில் 15 நாட்களுக்காவது தொழிலாளர்களுக்கு சம்பளம் கொடுக்க வேண்டும் என்ற ஏற்பாட்டையும் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அந்த முறையில் சட்டத்தைத் திருத்தி அமைக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அது போன்று வட ஆற்காடு ஜில்லாவுக்கு தனியாக ஒரு லேபர் ஆபீசரை நியமிக்க வேண்டும். இது நீண்ட காலமாக கேட்டு வரப்படுகிறது. அந்த அடிப்படையில் லேபர் ஆபீசர் அமைக்கப்படவேண்டும்.

இன்றைக்கு லேபர் கோர்ட்டுகள், இன்டஸ்ட்ரியல் ட்ரிபுனல் கோர்ட்டுகளுக்கு சில ஓய்வு பெற்ற நீதிபதிகளை நியமித்திருக்கிறார்கள். அனுபவம் இல்லாதவர்களை நியமித்திருப்பதால் பல கம்ப்ளெயிண்ட்கள் வந்திருக்கின்றன. அவைகள் கனம் அமைச்சர் இடத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இப்படிப்பட்டவர்களை நியமிப்பதால் தொழிலாளர்களுக்குப் பாதகம் ஏற்படுகிறது, அதுவும் பெரிய அளவில் ஏற்படுகிறது. ரிடயரான நீதிபதிகளைப் போடுவதன் காரணமாக பெரிய அளவுக்கு தகராறுகள் இருக்கின்றன. அவர்கள் முதலாளிகளுக்குச் சாதகமாகப் போகக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. நீதிபதிகள் தவறுகள் செய்கிறார்கள் என்றால் அவர்கள் மீது கடுமையான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும் இதில் உடனடியாக கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

14th March 1959] [Sri V. K. Kothandaraman]

சில சமயங்களில் தொழிலாளர்களுக்கு சாதகமாக இருந்த போதிலும் கூட தொழிலாளர்கள் நியாயமான முறையில், அமைதியான முறையில் போராடக் கூடிய நேரத்தில் போலீஸ் குறுக்கிட்டு முதலாளிகளுக்கு சாதகமாக அமைதியை நிலை நாட்டுகிறோம் என்ற பெயரால் அங்கே வருகிறார்கள். அப்படி வந்து போராடக்கூடாது என்றும், எழுந்து வீட்டுக்குப்போங்கள் என்றும் சொல்லுகிறார்கள். போலீஸ்காரர்கள் தொழிலாளர்களுடைய சலுகைகளை பறிக்கக்கூடிய நிலையில் இருக்கிறார்கள். போலீஸ்காரர்களுக்கு உதவியாக சில அடக்குமுறைச் சட்டங்கள் இருக்கின்றன. அந்தச் சட்டங்கள் தொழிலாளர்களுக்கு நல்ல முறையில் இருக்கக்கூடிய அளவில் திருத்தி அமைக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படித் திருத்துவதன் மூலம் தொழிலாளர்களுக்கு ஏதாவது சலுகைகள் காட்ட முடியும் என்பதை இந்த நேரத்தில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

இப்பொழுது பீடி சட்டம், ஹோட்டல் சட்டம், மெடர்னிடி பெனிபிட் சட்டம் இது போன்ற பல சட்டங்களை நாம் நிறைவேற்றியிருக்கிறோம். அவைகளை நிறைவேற்றியிருந்த போதிலும் அவைகள் அமுலுக்குக் கொண்டுவர முடியாத நிலைமையில் இருக்கிற காரணத்தால் தொழிலாளர்கள் மீது பழி வாங்கக் கூடிய நிலைமையில் பல போராட்டங்கள் நடந்து கொண்டிருக்கின்றன. குறிப்பாக வட ஆற்காட்டு கலெக்டர் இரண்டணா உயர்வான கூலி கொடுக்கவேண்டும் என்று சொன்னார்கள். ஆயிரம் பீடி சுற்றுகிறவர்களுக்கு அதிகமாக இரண்டணா கொடுக்க வேண்டும் என்று சொல்லியும் கரீம் பீடி முதலாளி இன்னும் கொடுக்கவில்லை. ஒரு இடைக்கால ஒப்பந்தம் செய்துகொண்டும் கொடுக்கவில்லை. அதற்கு ஒப்பாக சென்னையிலுள்ள கரீம் பீடி முதலாளி அப்படிக் கொடுப்பதற்குப் பதிலாக பழி வாங்கி வருகிறார். வேலூர் ப்ராஞ்சு முதலாளி இந்த இரண்டணா கொடுக்க மறுத்ததால் பாக்டரிக்குள்ளேயே உட்கார்ந்துகொண்டு போராடக்கூடிய நிலை ஏற்பட்டிருக்கிறது என்பதை இந்த சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அதனால் தயவு செய்து உடனடியாக இந்தச் சட்டங்களையெல்லாம் அமுலுக்குக் கொண்டு வர வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். தொழிலாளர்களுக்கு பாதுகாப்புக் கொடுக்கக்கூடிய அளவில் எல்லா சட்டங்களையும் மாற்றி அமைக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். அதே போன்று தொழிலாளர்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கும் திட்டத்தை துரிதமாக இன்றைய தினம் அமுலுக்குக் கொண்டு வர வேண்டும். சில முதலாளிகள் இடம் வாங்கிக்கொடுங்கள் வீடுகள் கட்டிக்கொடுக்கிறோம் என்று சொல்லி காலம் கடத்துகிறார்கள். அதனால் கண்டிப்பாக இத்தனை பர்செண்ட் வீடுகள் கட்டிக்கொடுக்க வேண்டும் என்று சட்டம் செய்ய வேண்டும். அப்படிச் சட்டம் போடுவதன் மூலமாகத் தான் அவர்கள் வீடுகள் கட்ட முன் வருவார்கள். இப்பொழுதுள்ள நிலையில் அவர்கள் வீடுகள் கட்டிக்கொடுக்கக் கூடிய நிலையில் இல்லை. ஆகவே தொழிலாளர்களுக்கு பாதுகாப்பு அளிக்கக்கூடிய அளவில் போதுமான சட்டங்களைக் கொண்டு வர வேண்டும் என்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொண்டு இத்துடன் என் பேச்சை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

* Sri T. T. DANIEL: Mr. Speaker, Sir, I support this Demand. We are really glad to hear from the Hon. Minister for Labour that the target under the Second Five-Year Plan is to provide employment for 2·6 lakhs persons and that the Government are quite confident to realize this target. Keeping this in view under the Second Five-Year Plan, a sum of Rs. 8·2 crores of rupees have been allotted for industrial schemes excluding the money allotted for the khadi schemes. For the Village Industries, a sum of nearly Rs. 2·1 crores have been allotted and in the current Budget nearly Rs. 47 lakhs have been set apart for this purpose.

The Government are also paying attention for the construction of Housing schemes for weavers and also for labourers in the small-scale industries. A sum of nearly one crore of rupees has been

[Sri T. T. Daniel] [14th March 1959

allotted. I would submit that so far as our State is concerned, we can say with pride that this State stands for labour and Madras is a pioneer State in enunciating a number of progressive labour laws. I would like to remind hon. Members of this House that the National Festival Holidays Act and the Beedi Workers' Act which have been passed recently, and these sets are standing monuments in our Statute Book.

Recently, the Government have fixed minimum wages for the rice mill workers, flour mill workers and saw mill workers. I request the Government that they should soon fix minimum wages for salt workers, palmyrah fibre and also coir workers in our State. So far as salt workers in this State are concerned, they are not getting even 12 annas per day, although they work in the pans for eight hours in the hot sun. It is said that a salt worker if he works for a longer number of years inevitably his eye-sight is even affected. Therefore, the Government should take a sympathetic attitude towards these workers and should soon not only fix minimum wages for them but should also evolve a scheme which would provide them with some funds when they attain a particular age and cannot work in the salt pans. So far as the palmyrah fibre workers are concerned, the Hon. Minister has seen how these workers are working in some of the companies. This palmyrah-fibre industry is partly worked on a factory basis and partly worked as a cottage industry. So, I would request the Hon. Minister to consider the pitiable condition of these workers and bring forward a piece of legislation on the lines of the Beedi Workers Act so that all the palmyrah fibre work may be done within the factory itself. There is now competition between the workers engaged in the industry run as the cottage industry and the workers engaged in the factory and the management exploits this situation and is not giving even the minimum wages to the workers working under them. In particular, I would like to draw the attention of the Hon. Minister to two companies that are working in the Kanyakumari district, viz., Aspirinval Company and the Ramalingham Company, where the workers are not given minimum wages although they work for 8 hours a day.

Coming to the road workers, no minimum wage is fixed for them also. There are about 600 road workers in that district and no minimum wage is fixed for them. So, I would request the Government to go into the matter and prescribe minimum wages for these road workers also.

Sir, I must also say that the bulk of the labour population in our State are the agricultural labourers. The time has now come when we should seriously think about ameliorating the conditions of these agricultural labourers. We should also consider how the minimum wages should be fixed and also whether it is not possible to bring forward a piece of legislation very soon so that there may be security of service for these agricultural labourers and there may be also minimum wage for them.

14th March 1959] [Sri T. T. Daniel]

The Government should also evolve a scheme for compulsory saving scheme for all classes of labourers, in whatever sphere they may be working and there should be free education for their children and also free medical aid.

Recently, the Trade Unionists have been very much perturbed by the decisions of the High Court and the Supreme Court. In the Buckingham and Carnatic Mill case, the Madras High Court has decided that the Tribunal has got the power to interfere with the order of the management only if there is victimisation of labour. This position has been reiterated in the decision given in respect of the Tamil Nad Working Journalists' case. The Madras High Court has also decided that the Tribunal has no power to interfere with the order of the management terminating the service of a labourer. They have further stated that the management has also got the power to terminate the service of a labourer by giving one month's notice and also appoint in his place a more competent person. In the Indian Iron case, the Supreme Court has decided that the Tribunal has got the power to interfere with the order of the management only if certain conditions exist, viz., if the order is in violation of a natural justice, if the order is an order made by the management out of bad motive and if the order is an order made for victimising labour or if the order is baseless.

(Srimathi Rajathi Kunchithapatham in the Chair.)

Only if these conditions exist, the Tribunal has got the power to interfere with the order of the management. These decisions have been taken advantage of recently by the management and we hear that the management is attempting to terminate the services of the labourers whenever they find it necessary and convenient for them. In this connection, I must also draw the attention of the Hon. Minister that as matters now stand, an individual labourer cannot take his case before the Labour Tribunal. Only if there is a substantial support from the other labourers of the Union, the individual labourer can take up his case before the Tribunal. What actually happens is that the management, after the case is taken cognisance of by the Tribunal, begins to victimise the members of the trade union and ask them to withdraw their support for the individual labourer and then they raise a preliminary objection before the Tribunal saying that it is not an industrial dispute and on that ground alone, the case has to be thrown out. Recently, the case against the Secretary of the Dunlop Co., met with such a fate. I, therefore, suggest to the Hon. Minister that we should try to make certain amendments to the Industrial Disputes Act itself wherein certain circumstances should be stated under which alone the managements should be given power to terminate the services of the labourer. Also, Sir, we have made provisions in the Shop Assistants Act and also in the Beedi Workers' Act wherein section 41, if I remember correct, lays down clearly that an individual labourer also can take his case before the Tribunal. There should be such a provision in the Industrial Disputes Act also and these changes also should

[Sri T. T. Daniel] [14th March 1959

be made in the standing orders under the Industrial Disputes Act. If that is done, there will be security of service for the labourers in the State. Sir, this is a matter which should be seriously considered by our Government and I think, Sir, that if our State Government has got the power to make such amendments to the Industrial Disputes Act, if it is in the concurrent list, we should quickly bring these amendments for the purpose in the next session itself. If, however, the Government thinks that these amendments could not be made by our State and they have no right to bring them, they should urge upon the Central Government to bring forward these amendments to the Industrial Disputes Act and also make corresponding amendments in the standing orders to the Industrial Disputes Act. I believe that our Government will take note of this situation and will quickly move in the matter.

* **Sri V. SUBBIAH:** தற்காலிகத் தலைவி அவர்களே, இந்த 24-வது டிமாண்ட், தொழில் பாக்டரிக்கு 30,29,700 ரூபாய் ஒதுக்கி இருக்கக் கூடிய இந்தத் தொழில் மான்யத்தின் மீது மதிப்புக்குரிய கனம் பக்கிரிசாமி அவர்களுடைய வெட்டுப்பிரேரணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் பேச ஆசைப்படுகிறேன். கூலிகள், விவசாயக் கூலிகள் ஆகியவர்களைப் பற்றி ஒருசில குறிப்புகளைக் கூற விரும்புகிறேன்.

இன்றைய தொழில் இலாகாவை நிர்வகிக்கக்கூடிய கனம் அமைச்சர் அவர்கள் பல ஆண்டுகளாகத் தொழிற்சங்கங்களில் ஈடுபட்டிருந்ததன் காரணமாக நம்முடைய ராஜ்யத்தில் தொழிலாளர் பிரச்னையை அறிந்து செயல்பட்டு வருபவர்கள். இன்றையதினம் அவர் ஆட்சிபீடத்தில் இருப்பினும்கூட தொழிலாளர்களின் கஷ்டங்களை அவர்கள் தெரிந்திருக்க முடியும். எங்கள் பகுதியில்—நம்முடைய ராஜ்ய சரித்திரத்திலேயே தமிழர்களுடைய மூலதனத்தால் ஒரு தமிழனால் 82 வருஷங்களுக்கு முன்னால் ஆரம்பிக்கப்பட்ட "வாயில் டெக்ஸ்டைல் மில்" கோயில்பட்டியில் இருக்கிறது. அது பெரும் அளவில் மூலதனம் போட்டு ஆரம்பிக்கப்பட்ட ஒரு தொழிற்சாலையாகும். ஆனால், நாளதுவரை அங்கு வேலை செய்யக்கூடிய கூலிகளுக்கு ஏதாவது வசதிகள் செய்யப்பட்டிருக்கின்றனவா என்று பார்த்தால் அவ்வாறு எந்த வித வசதியும் செய்துகொடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை. அந்த மில்லில் மூன்று, நான்கு வருஷங்களுக்கு மேல் வேலை பார்த்து வந்த கூலிகளைக்கூட பர்மனெனட் செய்யவில்லை. தினசரிக் கூலிகளாக வேலை செய்யக்கூடிய அளவில்தான் இருக்கிறார்கள். இன்னும் பழைய "மெஷினரியாகத்" தான் ஓடிக்கொண்டிருக்கிறது. சுகாதார வசதியோ மற்ற இன்ஷூரன்ஸ் வசதிகளோ அளிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. அந்த முறையில் இன்று மில்கள் இருந்துகொண்டிருக்கின்றன.

இன்று நாட்டிலே பல தொழிற்சங்கங்கள் இருக்கின்றன. அதன் காரணமாக சிலபல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. முதலாளிகள் தங்களுக்குச் சாதகமாக இருக்கக்கூடிய தொழிற்சங்கத்திற்குச் சலுகைகள் கொடுத்து மற்றத் தொழிற்சங்கங்களுக்கும் தொழிலாளர்களுக்கும் ஒரு பகைமை ஏற்படும்படியான சூழ்நிலையை ஏற்படுத்திவிடுகிறார்கள். பகைமை உண்டாக்கப்படுவதால் மேலும் போட்டிச் சங்கங்கள் ஏற்படும் நிலைமை உருவாகிறது. நம்முடைய ராஜ்யத்தில் இருக்கக்கூடிய எல்லாச் சங்கங்களும் ஒன்றாக இணைந்து கூலிகளுக்காகப் பாடுபடக்கூடிய நிலைமை ஏற்படுமானால் எதிர்காலத்தில் தொழிலாளர்களுக்கு நல்ல பலன் ஏற்பட வாய்ப்பு ஏற்படும். அதற்கான வேலையை அமைச்சர் அவர்கள் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இன்றையதினம் இந்த நாட்டிலுள்ள விவசாயக்கூலிகளுக்கு வேலை நிர்ணயம் செய்யப்படவில்லை. ஆனால் இன்றைக்கு இருக்கக்கூடிய மில் தொழிலாளர்களுக்கு 8 மணி நேரம் என்று வேலை நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. அவர்களுக்குக் குறைந்தது 4 ரூபாய்வரை கிடைக்கிறது. அவர்களுக்கு,

14th March 1959] [Sri V. Subbiah]

சுகாதார வசதி, வைத்திய வசதி, இன்ஷுரன்ஸ் வசதி, இன்னும் மற்ற எல்லா வசதிகளும் கிடைக்கின்றன. அவர்கள் இயந்திரங்களின் உதவியால் வேலை செய்கிறார்கள். ஆனால், விவசாயிகள் அப்படியல்ல. அவர்களுக்கு நேரம் காலம் கிடையாது. அவர்கள் கடுமையாக வெயிலில் திரேக உழைப்பால் (**Man power**) வேலை செய்கிறார்கள். அவர்களுடைய கூலி இன்றையதினம் என்னவென்று பார்த்தால், ஒரு நாள் முழுதும் கடுமையாக வேலை செய்தால்கூட 10 அணா அல்லது 12 அணாவரைதான் கிடைக்கிறது. பல பெண்கள் கூலிகளாக வேலை செய்கிறார்கள். வயல்களில் களை எடுக்கிறார்கள். அவர்களுக்குக் கூலியாக பட்டணம் படிக்கு ஒருபடி நெல்தான் கிடைக்கிறது. விவசாயிகளுடைய பொருளாதார அமைப்பு இன்றைய தினம் மிகவும் மோசமாக இருக்கிறது. அரசாங்கம் இதைப் பற்றிப் பரிசீலித்து ஓரளவு நல்ல முறையில் வாழ்க்கைக்கு வேண்டிய அளவு கூலி நிர்ணயம் செய்து தர வேண்டியது மிகமிக அவசியம்.

இந்த நாட்டிலே விவசாயிகளுக்காக ஒரு அமைப்பு இருக்கிறதா? கிராம வாரியாக, ஜில்லா வாரியாக விவசாயிகளுக்கு கிசான் சபைகள் இருக்கிறதா? என்று கேட்டால் அவ்வாறு இருக்கமுடியாது என்றுதான் சொல்ல முடியும், எந்த நாட்டிலும் இந்த மாதிரி விவசாயிகளுக்குச் சங்கம் ஏற்பட முடியாது. அவ்வாறு விவசாயிகளுக்கு ஒரு சங்கம் ஏற்படும் என்று அரசாங்கம் எதிர்பார்த்தால் அது முடியாது என்றுதான் கூறவேண்டி இருக்கிறது. பல லக்ஷக் கணக்கான கிராமங்களில் வாழக்கூடிய மக்கள், படிப்பு இல்லாத மக்கள் அவர்களுடைய பொருளாதார நிலைமை இந்த நாட்டிலே எல்லோரையும் விட மிகக் குறைந்த அளவு இருப்பதை மாற்றியமைக்கவேண்டியது நம்முடைய கடமை. அது மட்டுமல்ல. எதிர் காலத்தில் இன்றைக்கு இருக்கக்கூடிய தொழிற்சங்கங்களின் அடிப்படையில் தொழில் கோர்ட்டுகள், லேபர் கமிஷனர்கள், லேபர் ஆபீசர்கள் அமைக்க இருக்கிறார்கள். சங்கங்கள் அமைப்பதற்கு மட்டுந்தான் யோசனை இருந்துகொண்டிருக்கிறது.

மதிப்பிற்குரிய நண்பர் டேனியல் அவர்கள் குறிப்பிட்டது மாதிரி ரோடுகளில் கல் (மெடல்) உடைக்கக்கூடிய வேலையில் பெண்கள் வேலை செய்கிறார்கள். பெண்கள் ரோடுகளில், வெயிலில் கல் உடைக்கிற காட்சி பரிதாபத்திற்குரியது. உலகத்தில் வேறு எங்கும் பார்க்கமுடியாத காட்சி. பெண்கள் தங்கள் குழந்தைகளை மரத்தடியில் போட்டுவிட்டு ரோடுகளில், வெயிலில் உட்கார்ந்து கொண்டு கல்லுடைக்கும் பரிதாபக் காட்சியை நாம் பார்க்கிறோம். அவர்களுக்கு வசதியளிக்கும்பொருட்டு ஏன் இந்தச் சட்டத்தில் இடம் கொடுக்கக்கூடாது? ஏன் அவர்களுக்கு ஹைவேஸ் காண்ட்ராக்டர்கள் நிழல் தரக்கூடிய ஷெட்டுகள் கட்டித்தரக்கூடாது? "அவர்கள் நாடோடிகள், சென்று கொண்டே இருப்பார்கள்" என்று நீங்கள் சொல்லலாம். அவர்களுக்குக் கட்டாயம் பாதுகாப்பு அளிக்கவேண்டும். அவர்களுக்குக் கூலி நிர்ணயம் செய்யவேண்டும். எதிர்காலத்திலாவது இதைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இன்ஷுரன்ஸ் திட்டம் சிறிய தொழில்களில் உள்ளவர்களுக்குக்கூட அவசியமென்று நினைக்கிறேன். அப்பொழுதுதான் அவர்கள் சேமிக்கமுடியும்.

**The Hon. Sri R. VENKATARAMAN** : கனம் அங்கத்தினர் அவர்கள் ரோடு வேலை செய்யக்கூடியவர்களுக்கு கூலி நிர்ணயம் செய்யவில்லை என்று சொன்னார்கள். செய்யப்பட்டிருக்கிறது என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

***Sri V. SUBBIAH** : மிகவும் சந்தோஷம். பல பாக்டரியில் முதலாளிகள் என்னென்ன செய்கிறார்கள் என்பதை அமைச்சர் அவர்கள் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். "வேஜஸ் ரிஜிஸ்டரில்" தினசரிக் கூலி 2 ரூபாய் என்று எழுதிக் கையெழுத்து வாங்கிக்கொண்டு 10 அணா அல்லது 12 அணாதான் தொழிலாளர்களுக்குக் கொடுக்கிறார்கள். இதை அமைச்சர் அவர்கள் மனதில் வைத்துக்கொள்ளவேண்டும். இந்த மாதிரி நிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருப்பதைத் தடுக்க உத்தரவிடவேண்டும். மாச் பாக்டரி எங்கள் பகுதியில் ஜாஸ்தியாக இருக்கிறது. காட்டன் பாக்டரி, ஜின்னிங் பாக்டரிகள் இப்படி அதிகம். அங்கே தினமும் காலை 6 மணி முதல் மாலை ஆறு, ஏழு மணி வரையில் பத்தாயிரத்துக்கு மேற்பட்ட

பெண்குழந்தைகள்—பத்து வயதுக்கு உள்ளானவர்கள் எல்லாம் வேலை செய்கிறார்கள். அவர்களுக்கு வேலை நிர்ணயம், கால நிர்ணயம் எல்லாம் உண்டா இல்லையா என்பது தெரியவில்லை. அவர்களுக்கு எல்லாம் பாக்டரி சட்டத்தின்கீழ் ஏதாவது பாதுகாப்பு இருக்கவேண்டும் என்று கேட்டுக் 10-30 a.m. கொள்கிறேன். இந்தமாதிரி பத்து வயதுக்கு உட்பட்ட பெண் குழந்தைகளுக்கு எல்லாம் பாதுகாப்பு அளிக்கப்படவேண்டும். அல்லது அவர்களுடைய வீடு களுக்கே குச்சிகள், பெட்டிகள் எல்லாவற்றையும் அனுப்பிவைத்துவிட்டால் அவர்களால் அதைச் சுற்றி அனுப்பிவிட முடியும். கோவில்பட்டி, சிவகாசி முதலிய இடங்களில் இப்படி வண்டிகளில் கொண்டு போய்க் கொடுக்கிற வர்களும் இருக்கிறார்கள். இப்படி எல்லாவற்றுக்கும் வசதி செய்து தரப் படவேண்டும்.

வருஷம் பூரா ஓடுகிற பாக்டரியைப்போலவே சில சீசனல் பாக்டரிகள் வருஷத்திற்கு 6 மாதம் ஓடக்கூடிய பாக்டரிகள் இருக்கின்றன. இங்கெல் லாம் சின்ன பாக்டரிதானே என்பது போல லேபர் இன்ஸ்பெக்டர்கள் முதலாளி பக்கமாகப் போய்விடுகிறார்கள். சுகாதார வசதி, வைத்திய வசதி வேலை நேரம் நிர்ணயிக்கிற நோட்டீஸ் போர்டு, வேஜ் நோட்டீஸ் போர்டு இவை எல்லாம் இருப்பது இல்லை. ஓவர் டைம்மாக வேலை செய்கிறவர் களுக்குக்கூட அதிக அலவன்சு கொடுப்பதில்லை. ஆகவே இதையெல் லாம் சரியான முறையில் கவனித்து ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். மேலும் எதிர்காலத்தில் விவசாயிகளுக்கு சரியான கூலி நிர்ணயம் செய்யப்படவேண்டும். குறிப்பாக நமது ராஜ்யத்திலுள்ள பல தொழிற் சங்கங்களும் சேர்ந்து ஒரே சங்கமாக இருக்க ஏற்பாடு செய்யவேண்டு மென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

* **SRI A. VEDARATHNAM** : கனம் சபைத் தலைவி அவர்களே, இப்போது விவாதத்தில் இருக்கிற இந்தத் தொழில் மானியத்தை ஆதரிக்கும் முகத் தான் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். இந்த இலாகா நம்மு டைய நாட்டில் மிக்க பின் தங்கிய நிலையில் உள்ளவர்களை முன்னேற்று வதற்காக அவர்களைக் கைதூக்கிவிடுவதற்காக ஏற்பட்ட இலாகா. எப்படி ரெவின்யூ இலாகா, போலீஸ் இலாகா எல்லாம் தொன்றுதொட்டு இருந்து வருகிறதோ அதேபோன்று மாதர் நல இலாகா, ஹரிஜன நல இலாகா போன்ற இந்தப் புது இலாகாக்கள் எல்லாம் நம் நாட்டில் மிகவும் பின் தங்கிய நிலையில் உள்ளவர்களை எல்லாம் முன்னுக்குக் கொண்டுவர உதவி செய்யத் தோன்றிய இலாகாக்கள். அதன் மூலமாக இப்போது நம் நாட்டுத் தொழிலாளர் வர்க்கம் எந்த அளவுக்கு முன்னேற்றம் அடைந் திருக்கிறதென்று விஷயத்தைக் கூறத் தேவையில்லை. அவர்களுக்கு எந்த அளவு உதவி புரிந்தபோதிலும் அது போதாது என்று சொல்கிற நிலைமை இருக்கிறதே அல்லாமல் அது அதிகம் என்று சொல்வதற்கில்லை. அந்தத் துறையில் மிகவும் நல்ல முறையில் இந்த இலாகா பணியாற்றி வருகிறது. அதிலும் சிறப்பாக இந்த இலாகாவின் பொறுப்பை ஏற்று நடத்தி வருகிற அமைச்சர் அவர்கள் தம் வாழ்நாளையே இந்தப் பணிக்கு அர்ப்பணம் செய்து கொண்டார்கள். ஆகையால் இதில் இவர்களுடைய திறமையைப் பற்றி எதிர்கட்சிக்காரர்கள்கூட போற்றுகிற வண்ணம் நடந்து வருகிறார் கள். இந்தத் தொழில் இலாகா செய்ய வேண்டிய முக்கியமான பணி களில் எதிர்க்கட்சி அங்கத்தினர்களும், ஏனையோரும் தொழிலாளர்களுக்குச் செய்ய வேண்டிய பல விஷயங்களைப்பற்றி எல்லாம் இங்கே கூறினார்கள். அவை ஒன்றும் புறக்கணிக்கத்தக்கது அல்ல. அனைத்தும் அவசியம் என்ற விஷயத்தில் இரண்டுவித அபிப்பிராயம் இருப்பதற்கு இடமில்லை. இந்த மாதிரி ஒரு இலாகா தோன்ற வேண்டிய அவசியம் எதனால் வந்தது இந்த நாட்டில் என்று சொன்னால் முதலாளிகளுடைய மனப்பான்மை தான் இதைப்போன்ற இலாகா தோன்றி இதைப்போன்ற பல ஸ்தாபனங் கள் தோன்றி அந்தத் தொழிலாளர்களுடைய வர்க்கத்தைத் தனியாகப் பிரித்து அந்த வர்க்க அடிப்படையில் போராட்டம் என்ற நிலை தோன்றி யதற்குக் காரணமாயிற்று. மகாத்மா காந்தியடிகளே இந்த நிலையைக் குறித்துத்தான் அவர் வகுத்த 22 நிர்மாண திட்டங்களுக்குள் தொழிலாளர் முன்னேற்றத்திற்கும் ஓர் இடம் அளித்திருக்கிறார். குறிப்பாக முதலாளி கள் எப்படி இருக்கவேண்டுமென்றால் தனம் படைத்தவர்கள் அதற்குத்

14th March 1959] [Sri A. Vedarathnam]

தாங்கள் ஒரு தர்மகர்த்தர் என்ற நிலைமையில் இருந்து அந்தத் தனத்தைத் தக்கவர்களுடைய முன்னேற்றப் பணிக்கு உதவ வேண்டுமேயல்லாமல் தங்கள் ஆடம்பர வாழ்க்கையை வளர்த்துக்கொள்வதற்காக அல்ல என்ற அளவுக்கு இலக்கணத்தை வரையறுத்திருக்கிறார்கள். அதையேதான் வள்ளுவப் பெருந்தகையாரும்.

தாள்ஆற்றித் தந்த பொருள்எல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

என்று கூறினார். எனவே அவர்கள் சரியான நிலையில் இந்த நாட்டில் இருக்கிற தொழிலாளர் மக்களும், தங்களுடன் பிறந்தவர்களைப்போல தங்களுக்குள்ள அதே உரிமையைப் பெற தகுதி உள்ளவர்கள் என்று நினைத்து முதலாளிகள் செயல்படுவார்களேயானால் வர்க்க அடிப்படையில் போராட்டம் நடக்க வேண்டிய அவசியம் கிடையாது. ஆனால் இன்றைக்கு இருக்கிற நிலையில் இந்தமாதிரி வர்க்க அடிப்படையில் இப்படி ஒரு போராட்டம் தேவையா என்றால் அது நம்முடைய நாட்டைப் பொறுத்த வரையில் அதிலும் நம்முடைய பிராந்தியத்தைப் பொறுத்த வரையில் அதற்கு அவசியம் இல்லையென்று நான் கூற விரும்புகிறேன். ஏனென்றால் எத்தனை அபிப்பிராயபேதமானாலும், எவ்வளவு கருத்து வேற்றுமை உள்ள விஷயங்களானாலும் நாம் அனுஷ்டித்து வருகிற கொள்கைக்கு, கல்வி விஷயத்தில் இந்தமாதிரி பேதங்களை எல்லாம் ஒழிப்பதற்கு என்ன முறையைக் கையாள்கிறோமோ அதே முறையை இந்த தொழில் விஷயத்திலும் அனுஷ்டித்தால் இன்னும் நல்ல பலன் அளிக்கக்கூடும் என்று நான் கருதுகிறேன். நம்முடைய நாட்டில் தொழில் வளம் மிகவும் குறைந்ததாக இருக்கிறது என்று கூறப்படுகிறது. தொழில் அபிவிருத்தி செய்ய வேண்டுமென்று அரசாங்கத்திடம் கேட்டாலோ அரசாங்கம் பொதுத் துறையில் தொழில்களை நடத்த விரும்பவில்லையென்றும், தனியார் துறையிலிருந்து யாராவது ஏற்று நடத்த வந்தால் அவர்களை ஆதரிப்பதாகவும் கூறுகிறார்கள். ஆனால் தனியார் துறையில் இருந்து தொழிலை நடத்த வேண்டுமென்றால் முதலாளிகள் அதற்கு அஞ்சுகிறார்கள். தொழில் துறையில் இப்போது நடக்கிற போராட்டம், கிளர்ச்சி, கூச்சல் இவைகளைக் கண்டு கேட்டு அவர்கள் எந்தத் தொழிலையும் துவக்கவேண்டுமென்றால் அஞ்சுகின்ற நிலைமை ஏற்பட்டிருக்கிறது. எனவே தென்னாட்டில் தொழில் வளம் பெருக வேண்டுமென்றால் தொழிற் சங்கங்கள் அனாவசியமான போராட்டங்களை, கிளர்ச்சிகளை உண்டாக்கக் கூடாது. தொழிலாளர்களுடைய தொழில் திறனை வளர்ப்பதற்கு இந்தச் சங்கங்கள் ஆதரவாக இருப்பது என்றால் எத்தனை சங்கங்கள் வேண்டுமானாலும் இருக்கலாம். ஆனால் அன்றைக்கு அந்தச் சங்கங்களே ஒன்றை ஒன்று தாக்கி அடித்துக் கொள்கிற நிலைமையில் பலவித வீண் தொந்தரவுக்கு உள்ளாக்குகிற நிலைமை இருப்பதனால் பல சங்கங்கள் இங்கே வேண்டியதாக இல்லை. அப்படி இன்றி தொழில் திறனை வளர்க்கக்கூடிய ஒரு சங்கம் இருந்தாலே போதும் என்பது என் அபிப்பிராயம்.

எனவே இப்பொழுது கையாளும் அதே முறையையே தொழிலாளர்கள் விஷயத்திலும் கையாளவேண்டுமானால் இதில் இருக்கக்கூடிய பேதங்கள் முதலாளிகள் தொழிலாளிகள் பாகுபாடுகள் இல்லாமல் ஒரு நியாயமான பாவனை உண்டு பண்ணக்கூடிய நிலைமை வளர்ந்து தொழிலாளிகள் தங்கள் குறைகளை முதலாளிக்குச் சொல்வது, முதலாளிகள் தங்கள் குறைகளை தொழிலாளிகளுக்குச் சொல்வது என்பது போன்ற ஒரு மனப்பான்மை வளர்ப்போமானால் தமிழகத்தில் ஓரளவிற்கு தொழில் வளர்ச்சி ஏற்படுவதற்கு தொழிலாளர்களிடையே வேலையில்லாத்திண்டாட்டத்தைப் போக்குவதற்கு உதவிகரமாக இருக்கும் என்று சொல்லவிரும்புகிறேன். வேலையில்லா திண்டாட்டம் என்ற பேச்சுக்கே இடமில்லாத ஒரு சூழ்நிலை ஏற்படும். இந்த விஷயத்திலே நமது தொழில் அமைச்சர் அவர்கள் மிகவும் திறமைப்பட்டவர்கள். இந்த மாதிரி அன்னியோன்ய பாவத்தை வளர்ப்பதற்கு அவர்கள் முன்வருவார்கள் என்று நம்புகிறேன். இந்த ஒரு முறையும் முதலாளிகள் தொழிலாளிகள் என்ற துறையிலே நீடிக்க வேண்டுமானால் தொழிலாளிகளின் குறைகளும் நீங்கி தொழில் வளர்ச்சி அதிகரிப்பதற்கும், வேலையில்லா திண்டாட்டத்தை நீக்குவதற்கும் இது ஒரு பெரிய சாதகமாக இருக்குமே தவிர முதலாளிகளிடத்தில் தொழி

[Sri A. Vedarathnam] [14th March 1959

லாளர்களுக்கு அச்சம் மாறவேண்டும். பல இடங்களில் தொழிற்சாலைகள் மூடப்பட்டதாக சொல்லப்பட்டது. இதற்குக் காரணம் என்னவென்று ஆராயவேண்டும். இப்பொழுது நம் நாட்டிலே இன்னும் அதிகமானத் தொழில்கள் ஏற்படுத்த வேண்டும் என்று சொல்லுகின்ற இந்த நேரத்தில் இதற்கு முன் ஆரம்பிக்கப்பட்ட தொழில்கள், மூடவேண்டிய மூலகாரணம் என்னவென்றால், தொழிலாளிகளுக்கும், முதலாளிகளுக்கும் உள்ள போராட்டம்தான் இதற்குக் காரணம். ஆகவே இந்தக் கிளர்ச்சிகளும், போராட்டங்களும் காரணம் அவர்களின் சம்பள உயர்விற்கும், போனஸ் வாங்குவதற்கும் போராட்டம் நடக்கிறது. முதலாளிகள் அந்த போராட்டங் களுக்கும், கிளர்ச்சிகளுக்கும் செவி சாய்க்காமல் இருந்தால் இந்த நாட்டிலே தொழில் வளம் அதிகரிக்காமல் இருக்கின்ற தொழில்களும் மூடப்பட வேண்டிய நிலைமையும் ஏற்படும். ஆகையால் அம்மாதிரி சூழ்நிலை ஏற்படாதவாறு தடுப்பது சர்க்காருடைய கடமை என்று மற்றவர்கள் நினைத்துக் கொண்டு சும்மா கையைக் கட்டிக்கொண்டு இருந்துவிடமுடியாது. ஆகவே தொழிற்சங்கத் தலைவர்களெல்லாம், அன்யோன்ய ஒரு பாவம் ஏற்படுகின்ற அந்தப் பணியில் ஈடுபடவேண்டுமென்று சொல்லிக்கொள்கிறேன். இப்பொழுது அரசாங்கம் எந்தத் தொழிலை ஆரம்பித்தாலும் அவர்களுக்கு கிட்டத்தட்ட பாதி மூலதனமே கொடுக்கத் தயாராக இருக்கிறார்கள். ஆகவே இந்த தொழிலாளிகளுக்கும் முதலாளிகளுக்கும் உள்ள உறவு ஒரு நல்ல சூழ்நிலையில் இருந்தால், முதலாளிகள் தனிப்பட்ட தொழிலை ஏற்று நடத்துவதற்கு முன்வருவார்கள். மேலும் அவர்களுக்குள்ளே இருக்கும் அச்சம் நீங்குவதற்கான சூழ்நிலை ஏற்படுத்த வேண்டும். இதற்கு கனம் அமைச்சர் அவர்களுடைய முயற்சியால் முதல் முதலாக அந்த காரியத்திலே தொழிலாளர் நிர்வாகத்தில் பங்கு கொள்வதற்கு சிம்ப்சன் கம்பெனியே அதை ஏற்படுத்தியிருக்கிறது. இதுபோன்ற தொழிற்சாலைகளிலும் தொழிலாளர்கள் நிர்வாகத்தில் பங்கு பெற வாய்ப்பு ஏற்பட்டு இருக்கிறது. பல பெரிய பிரச்னைகளை நாம் இதன் மூலம் நீக்க முடியும். ஆகவே தொழிலாளர்கள் முதலாளிகள் வேற்றுமை மனப்பான்மை இல்லாமல் அன்னியோன்ய பாவத்துடன் நடந்துகொள்ளவேண்டிய ஒரு நிலைமை ஏற்படும். அப்போதுதான் தொழில் வளர்ச்சியை பெருக்க முடியும். இந்த மனப்பான்மையோடு நாம் ஒரு பிரச்னையை, எவ்வளவு பெரிய பிரச்னையாக இருந்தாலும் நாம் அணுகுகிற முறையில் அதைத் தீர்க்க முடியும். இந்த மனப்பான்மையோடு நாம் ஒரு பிரச்னையை அணுகுகிறோம். எவ்வளவு பெரிய பிரச்னையாக இருந்தாலும் நாம் அதை தீர்க்க முடியும். அந்த விதத்தில் தொழிலாளிகளும் முதலாளிகளும் ஈடுபடவேண்டும் அப்படியிருந்தால் தொழிலாளிகள் தங்களுடைய கோரிக்கைகளை வற்புறுத்துவதான பேச்சே இருக்காது. போராட்டங்கள் நடத்தவேண்டிய அவசியமே ஏற்படாது. இதுமாதிரியாக ஒரு அன்னியோன்ய பாவத்துடன் நடந்துகொள்ள வேண்டுமென்ற லட்சியத்தில் ஈடுபட்டால், நாம் எந்தப் பிரச்னையையும் தீர்த்துக் கொள்ளமுடியும். இதே மாதிரியாக விவசாயிகளின் பிரச்னைகளிலும் நடந்துகொண்டால் எல்லாம் சுமுகமாக முடியும் உற்பத்தியும் அதிகரிக்கும். என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri S. M. ANNAMALAI** : கனம் சட்டமன்றத் தலைவர் அவர்களே, இந்த சட்டசபையின் முன்னால் வைக்கப்பட்டிருக்கும் வெட்டுப் பிரேரபணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இப்பொழுது இருக்கும் நிலைமையைப் பார்த்தால் தொழிற்சாலைகள் நல்ல முறையிலே இயங்குவதற்கு நிலவமுடியுமா என்ற அச்சம் இப்போது பரவி வருகிறது. அதற்கு முக்கிய காரணம் என்னவென்றால் உயர்நீதி மன்றங்களிலும் சுப்ரீம் கோர்ட்டுகளிலும் கொடுத்த தீர்ப்புகளைப் பார்ப்போமானால் இதுவரை செய்யக்கூடிய பல சட்டங்களைத் தகர்த்தெறியக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

மேட்டூர் தொழிலாளர் விஷயத்திலும் தமிழ் நாடு பத்திரிகை தொழிலாளர்கள் விஷயத்திலும் கோர்ட்டுகளின் தீர்ப்புகளைப் பார்ப்போமானால் அங்கு இருக்கக்கூடிய தொழிலாளர்களுக்கு பாதகம் உண்டாக்கக்கூடிய அளவிற்கு அந்தத் தீர்ப்பு இருக்கின்றன என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். அதேமாதிரியாக ஒரு தொழிலாளத் தலைவர் வேலை நிறுத்

14th March 1959] [Sri S. M. Annamalai]

தத்தை ஏற்பாடு செய்துவிட்டு, அந்த வேலை நிறுத்தத்திற்கு மெஜாரிடி இல்லை என்றால் உண்மையிலே பழி வாங்கப்படுகிறது. இம்மாதிரியாக டன்லப் தொழிற்சாலையில் தொழிலாளிகள் பழி வாங்கப்பட்டிருக்கிறார்கள். இதே மாதிரியாக சில இடங்களிலே வேலை நிறுத்தம் ஏற்பட்டிருக்கிறது. நாளுக்கு நாள் இந்த மனப்பான்மை தொழிலாளர்களிடையே அதிகமாக ஏற்பட்டிருக்கிறது. (During the year 1958, there were 261 strikes including the 6 strikes pending at the beginning of the year.) 1958-ம் ஆண்டிலே 261 வேலை நிறுத்தங்கள் நடைபெற்றிருக்கிற தென்று சர்க்கார் கொடுத்த அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. 1957-ம் ஆண்டிலே 248 வேலை நிறுத்தங்கள் நடைபெற்றிருக்கின்றன. அதை நாம் பார்க்கும்போது வேலை நிறுத்தங்கள் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டிருக்கிறது. முன்னால் குறிப்பிட்ட தீர்ப்புகளையொட்டி குறைபாடுகளை போக்குவதற்கு தொழிலாளர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து வேலை நிறுத்தம் ஆரம்பிக்க வேண்டும் என்ற ஒரு அடிப்படையில் இப்பொழுது வேலை நிறுத்தம் செய்யவேண்டிய ஒரு நிலைமை ஏற்பட்டி ருக்கிறது. அதே போல நமது மாநிலத்தில் பீடி, ஹோட்டல் தொழிலாளர் பாதுகாப்புச் சட்டம் கொண்டுவரப்பட்டிருந்தாலும்கூட இதுநாள் வரையில் அது நல்ல முறையில் அமல்நடத்தப்படவில்லை. "கூடிய சீக்கிரம் பீடித் தொழிலாளர்கள் பாதுகாப்புச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவருகிறோம்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. பீடித் தொழிலாளர்கள் பாதுகாப்புச் சட்டத்தில் சுருட்டுத் தொழிலாளர்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று சொன்னோம். அவ்வாறு சொன்னதற்கு, அவர்களுக்கென தனி யாக ஒரு சட்டமியற்றிவிடலாம் என்று மதிப்பிற்குரிய அமைச்சர் சொன்னார். ஆனால் சுருட்டுத் தொழிலாளர் பாதுகாப்புச் சட்டம் இதுநாள் வரையில் கொண்டுவரப்படவில்லை. இதுகுறித்து நான் உண்மையிலேயே வருந்து கிறேன். இம்மாநிலத்தில் சுருட்டுத் தொழிலாளர்கள் ஏறத்தாழ 16,000 பேர் இருக்கின்றனர். அவ்வளவு எண்ணிக்கையில் இருக்கும் தொழி லாளர்களுக்கான பாதுகாப்புச் சட்டத்தை மாநில சர்க்கார் உடனடியாகக் கொண்டு வரவேண்டும்.

நம் மாநிலத்தில் விவசாயத் தொழிலாளர்கள் அதிகமாக இருக் கிறார்கள். சென்ற ஆண்டு இம்மன்றத்தில் ஒரு கேள்விக்கு பதிலளிக்கும் போது, 1958-ம் ஆண்டு நவம்பர் மாத முடிவிற்குள் விவசாயத் தொழி லாளர்கள் கூலி நிர்ணயச் சட்டத்தைக் கொண்டுவந்துவிடப் போவதாக மதிப்பிற்குரிய அமைச்சர் சொன்னார். ஏறத்தாழ ஓராண்டு காலம் ஆகி விட்டது. இந்நாள் வரையில் அந்தச் சட்டம் கொண்டுவரப்படவில்லை. அதற்கான மசோதா எதுவும் இம்மன்றத்தில் இன்னும் தாக்கல் செய்யப்படவில்லை. இந்த பட்ஜெட் விவாதத்தின் போதாகிலும் அந்த மசோதா கொண்டுவரப்படும் என்று நான் மிக மிக ஆவலோடிருந்தேன், அவ்வாறு எதிர்பார்த்தேன். நாட்டில் மற்றெல்லாத் தொழிலாளர்களையும் விடத் தாழ்ந்த நிலையிலுள்ள விவசாயத் தொழிலாளர்களுக்கான கூலியை நிர்ணயிப்பதற்கான சட்டத்தைக் கொண்டு வர வேண்டும். அதற்கான மசோதாவை இப்போது கொண்டுவந்தாலும்கூட அது சட்டமாவதற்கு ஏறத்தாழ பத்து மாதங்கள் அல்லது ஓராண்டு காலம் ஆகும். இப்போது மசோதாவை இச்சபைக்குக் கொண்டுவந்தாலும், அதை அதற்குப் பிறகு பொறுக்குக் கமிட்டிக்கு விட்டு, பொறுக்குக் கமிட்டியின் ஆலோசனைக்குப் பிறகு அதை மறுபடியும் சபைக்குக் கொணடுவந்து சட்டமாக்க ஏறத்தாழ ஓராண்டு ஆகும். ஆகவே விவசாயத் தொழிலாளத் தோழர்களுக்கான கூலி நிர்ணயச் சட்டத்தை காலம் தாழ்த்தாமல் உடனடியாகக் கொண்டுவர வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

SRI T. P. ELUMALAI: கனம் சபைத் தலைவர் அவர்களே, கனம் அமைச்சர் கொண்டுவந்திருக்கும் இந்த மானிய கோரிக்கையை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்லப் பிரியப்படுகிறேன். நமது தேசீய சர்க்கார் இந்தப் பத்து ஆண்டுகளில் தொழிலாளர்களுக்காக பல சட்டங்களைக் கொண்டுவந்திருக்கிறது. அவை அத்தனையும் உண்மையிலேயே நல்ல

[Sri T. P. Elumalai] [14th March 1959

முறையில் பயன்படவில்லை. அவைகள் சர்க்கார் எதிர்பார்த்த அளவிற்குப் பயன்படவில்லை என்றே நான் நினைக்கிறேன். சட்டங்களால் ஏற்படக்கூடிய பயனை நூறு சதவிகிதமும் அடைய வேண்டுமானால் தொழிலாளர்களும் தொழிற்சங்கத் தலைவர்களும் தங்கள் சிறந்த பணியை நல்ல முறையில் ஆற்றினால் தான் சர்க்காரின் எண்ணம் அத்தனையும் நிறைவேறுவது சாத்தியம் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். நான் தொழிலாளர் பகுதியில் தொண்டாற்றிய ஊழியன் என்ற முறையில் இக்கருத்தைத் தெரிவிக்கிறேன். உண்மையிலேயே, நம் சர்க்கார் பல நல்ல சட்டங்களைக் கொண்டு வந்திருக்கிறார்கள். குறிப்பாக, ஓட்டல் தொழிலாளர் சட்டம், பீடித்-தொழிலாளர் சட்டம், பெண் தொழிலாளர்களுக்கு பிரசவ கால வசதிகள் அளிக்கும் சட்டம், இவை போன்ற சட்டங்களையெல்லாம் சர்க்கார் கொண்டு வந்திருக்கிறார்கள். ஆனால், அந்தச் சட்டங்கள் நடைமுறையில் ஒரு சரியான பலனையும் கொடுக்காத நிலையில் இருக்கின்றன. இந்தச் சட்டங்களின் முழுப் பலன்களையும் பெறுவதற்குத் தேவைப்படும் கட்டுப்பாடு தொழிலளார்களிடம் ஏற்பட வேண்டும் என்று நான் நினைக்கிறேன். எனக்குமுன் பேசிய ஸ்ரீ பக்கிரிசாமி பிள்ளை டி. ஏ. சைக்கில் கம்பெனித் தொழிலாளர்களைப் பற்றிய விஷயங்களை இங்கே குறிப்பிட்டார். அந்தக் கம்பெனித் தொழிலாளர்கள் போராட்டம் ஆரம்பித்த காலத்தில் நானும் அங்கே சென்றிருந்தேன். அந்தப் போராட்ட காலத்தில் நான் அத் தொழிலாளர்களிடம் ஒன்று வேண்டிக்கொண்டேன். "நீங்கள் எல்லோரும் மறுபடியும் வேலைக்குப்போங்கள். ஒரு சரியான முடிவு ஏற்படும் வரையில் நீங்கள் எல்லோரும் ஒழுங்காக வேலை செய்யுங்கள். எந்தப் பத்து ஆட்களுக்கு வேலை கொடுக்க முதலாளிகள் மறுக்கிறார்களோ அந்தப் பத்து ஆட்கள் மட்டும் வெளியில் இருக்கட்டும். மற்றவர்கள் எல்லோரும் வேலைக்குப் போங்கள்" என்று அவர்களிடம் நான் பணிவோடு வேண்டிக் கொண்டேன். "ஒரு ஆளைக் கூட வெளியில் விட்டுவிட்டு உள்ளே போக முடியாது." என்று அவர்கள் எல்லோரும் மறுத்துவிட்டார்கள். பிறகு போராட்டம் வலுத்து முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் மனஸ்தாபம் அதிகமாக வளர்ந்து. கடைசியில் முதலாளிகள் பாதி ஆட்களைத் தான் எடுத்துக்கொண்டார்கள், பாதித்தொழிலாளர்களுக்கு வேலை போயிற்று. பிறகு தொழிலாளர்கள் கோர்ட்டுக்குச் சென்று தீர்ப்புப் பெற்றனர். ஆனால் கோர்ட்டுத் தீர்ப்பு அமுல் நடத்தப்படவில்லை. இந்த நிலையில், வேலையிழந்த ஏழைத் தொழிலாளர்கள் திண்டாடிக்கொண்டிருக்கிறார்கள். வேலையிழந்த தொழில்லாளர்கள் எல்லோரும் என் தொகுதியில் இருக்கிறார்கள். அவர்கள் இன்றைக்கும் வேலை கிடைக்காமல் அவதிப்படுவதைப் பார்க்கிறேன். இப்போராட்டம் ஆரம்பிக்கப்பட்ட காலத்தில் நான் சொன்ன யோசனையை அந்தத் தொழிலாளர்கள் கேட்டிருந்தால் அந்த யோசனைப்படி நடந்திருந்தால், இத்தனை தொழிலாளர்கள் வெளியேற்றப்பட்டிருக்க மாட்டார்கள் ; பிரஸ்தாப 10 ஆட்களில், அநேகமாக, 2 ஆட்களைத் தவிர மற்றவர்கள் வேலைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டிருப்பார்கள் ; போராட்டம் நடத்தத் தூண்டியதையும் முதலாளிகளை பயமுறுத்தியவர்களையும் விட்டுவிட்டு மற்றவர்களை முதலாளிகள் வேலைக்கு எடுத்துக் கொண்டிருப்பார்கள் ; ஆக, அனேகமாக 2 பேர் தான் வேலையிழக்க நேர்ந்திருக்கும். ஏன் இதைச் சொல்கிறேன் என்றால், தொழிலாளர்களுக்குத் தலைமைதாங்கி நடக்கும் தலைவர்கள் காலத்தையும் சூழ்நிலையையும் அனுசரித்து நடந்துகொள்ள வேண்டுமென்று தொழிலாளர்களுக்கு புத்திமதி கூற வேண்டும், காலத்தையும் சூழ்நிலையையும் அனுசரித்து யோசனைகள் கூறவேண்டும். அவர்கள் அந்த முறையில் செயலாற்ற வேண்டுமென்பதற்காகத் தான் இதைச் சொன்னேன். டி.ஏ. சைக்கில் கம்பெனித் தொழிலாளர் தகராறு சம்பந்தமாக கோர்ட் கொடுத்திருக்கும் தீர்ப்பை அமுலுக்கு வரச் செய்ய கனம் அமைச்சர் முயல வேண்டுமென்று இந்த சந்தர்ப்பத்தில் அவரைக் கேட்டுக்கொள்கிறேன்.

நாம் தொழிலாளர் இன்ஷ்யூரன்ஸ் திட்டம் கொண்டு வந்திருக்கிறோம் அது நல்ல திட்டம். தொழிலாளர்களுக்கு வியாதி வந்தால் அவர்களுக்காகவே இருக்கும் வைத்தியசாலைக்கு அவர்கள் சென்று வைத்தியம் பெறுவதற்கான வாய்ப்பை அரசாங்கம் இத்திட்டத்தால் ஏற்படுத்தியிருக்கிறது.

14th March 1959] [Sri T. P. Elumalai]

(Mr. Speaker in the Chair.)

ஆனல் தொழிலாளர்கள் செய்யும் தப்பினுலும் சிப்பந்திகள் செய்யும் தப்பினுலும், இத்திட்டத்தின் முழுப் பலனையும் தொழிலாளர்கள் பெற முடியாத நிலை ஏற்பட்டிருக்கிறது. குறிப்பாக, ஒரு தொழிலாளர் ஊருக்குப் போகவோ ஓய்வு எடுத்துக்கொள்ளவோ விரும்பினல், அப்போது அவர் தனக்கு வியாதி இருப்பதாகச் சொல்லி, ஏதாவது ஜுரம் இருப்பதாகச் சொல்லி, லீவ் கேட்கிறர். இவர் இவ்வாறு செய்வது டாக்டருக்கும் நன்ருகத் தெரியும். இதனல் டாக்டர் அவரை பரிசோதனைக் குழாயைக் கொண்டு பரிசோதிப்பது கிடையாது. அவர் சொல்லும் வியாதியைக் கேட்டுவிட்டு அவரைப் பரிசோதிக்காமலேயே டாக்டர் மருந்து எழுதிக்கொடுத்து விடுகிறர். அந்த மருந்தை, தொழிலாளர் வாங்கி உடனேயே வெளியே ஊற்றிவிடுகிருர். அதைச் செய்துவிட்டு அவர் லீவ் வாங்கிக்கொண்டு போய்விடுகிருர். இம்மாதிரி தொழிலாளர்கள் செய்வதால், உண்மையாகவே வியாதியுள்ள தொழிலாளர் டாக்டரிடம் செல்லும்போதும் டாக்டர் அவரைப், பரிசோதனைக் குழாயைக் கொண்டு பரிசோதிப்பதில்லை. அவர் திருப்திப்படும் வகையில் அவரைப் பரிசோதிப்பதில்லை. டாக்டர் இவ்வாறு பணியாற்றுவதால், உண்மையிலேயே வியாதியுடன் வரும் தொழிலாளர்களுக்கு அந்த வைத்தியசாலையில் நம்பிக்கை ஏற்படாது போகிறது. ஆகவே இதையெல்லாம் கண்காணிக்க ஆவன செய்ய வேண்டுமென்று கனம் அமைச்சரைப் பணிவோடு கேட்டுக்கொள்கிறேன். ஏழைத் தொழிலாளர்களுக்கு நிதி வசதிக்கு வகை செய்வதுடன் அவர்களுக்கு வியாதியைத் தீர்த்துக் கொள்வதற்கும் வசதிசெய்யும் இந்த இன்ஷ்யூரன்ஸ் திட்டம் மேலும் நல்ல முறையில் தொழிலாளர்களுக்குப் பயன்படவேண்டும்.

ஒரு தொழிற்சாலையில் நூறு பேர்கள் வேலை செய்கிருர்கள் என்ருல் அதில் ஏறக்குறைய 25 பேர்கள்தான் வியாதியஸ்தர்களாக மருந்து சாப்பிட்டுக்கொண்டு வருவார்கள், மீதியுள்ளவர்கள் பணத்தை மட்டும் கட்டிக் கொண்டிருப்பார்கள். ஆனல் அதே தொழிற்சாலையில் யாருக்காவது டி.பி. என்ற கொடிய வியாதி வந்து விட்டால் அவர்களுக்கு சரியான ட்ரீட்மேண்ட் கொடுப்பது கிடையாது. ஆகவே அந்தத் தொழிலாளர்கள் எல்லாம் மிகவும் கஷ்டப்படுகிருர்கள். அவர்களுக்கு சர்க்கார் ஆஸ்பத்திரியில் படுக்கை வாங்கிக் கொடுத்து, டி.பி.-க்கு வேண்டிய சிகிச்சை செய்யாமல் வேறு மருந்துகள் கொடுத்து வருகிருர்கள். ஆகவே, இந்த இன்ஷூரன்ஸ் திட்டத்தினல் தொழிலாளர்கள் நன்மை அடைய வேண்டுமென்ருல், அதன் மூலம் இந்த டி.பி. போன்ற கொடிய வியாதிகளால் பீடிக்கப்பட்டவர்களுக்கு தகுந்த முறையில் நல்ல வைத்திய வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அடுத்தபடியாக, இந்த கட்டிடத் தொழிலாளர்களுக்கு கூலி நிர்ணயம் செய்ய வேண்டுமென்று, ஏற்கெனவே இதற்கு முன்னல் நடந்த சட்டசபை பட்ஜெட் கூட்டத்தில் கேட்டுக் கொண்டேன். எல்லாத் தொழிலாளர்களுக்கும் கூட்டு மொத்தமாக தொழிற்சாலைகளில் வேலை செய்யும் எல்லாத்தொழிலாளர்களுக்கும் தொழிற்சங்கங்கள் வைத்து அவர்களது குறைகளைப் போக்குவதற்கு வாய்ப்பிருக்கிறது. ஆனல் இந்த கட்டிடத் தொழிலாளர்களுக்கு அந்த வாய்ப்பு இல்லை. பெரிய காண்ட்ராக்டர்கள், பணம் படைத்தவர்கள் தொழிலாளர்களுக்கு குறைந்த கூலியைக் கொடுத்து விட்டு அவர்கள் நிறைய லாபம் சம்பாதித்துக்கொண்டு போகிருர்கள். ஆக, அந்த முதலாளிகள் தொழிலாளர்களின் ரத்தத்தை உறிஞ்சி, அவர்களுக்கு கொடுமை இழைத்து சரியான கூலி கொடுப்பதில்லை. ஆகவே, இந்தக் கட்டிடத் தொழிலாளர்களுக்கும், மற்ற தொழிலாளர்களுக்கு இருப்பதுபோல் ஒரு கூலி நிர்ணயம் செய்து கொடுத்து, நல்ல வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். 11 a.m.

THE HON. SRI R. VENKATARAMAN : " பில்டிங் காண்ட்ராக்ட் வொர்க்கேர்ஸ் "-க்கும் இந்த மினிமம் வேஜஸ் ஆக்ட் இருக்கிறது.

SRI T. P. ELUMALAI : அடுத்தபடியாக, உப்பளம் தொழிலாளர்களை எடுத்துக் கொண்டால், சென்ற சட்டசபை கூட்டத்தில் கூட் அமைச்சர் அவர்கள் இந்தத் தொழிலாளர்களின் விஷயம் பரிசீலனையில்

இருக்கிறது என்று சொன்னார்கள். இந்த உப்பளம் தொழிலாளர்களுக்கும் கூலி நிர்ணயம் செய்து கொடுக்க வேண்டுமென்று பணிவோடு கேட்டுக் கொள்கிறேன். அதுமட்டுமல்ல. நமது தமிழ் நாட்டில் மிகவும் எழ்மை நிலையில் இருக்கிற ஹரிஜனங்கள் அதிகமாகயிருக்கிற தோல் பதனிடும் தொழிற்சாலைகள் இப்பொழுது மறைந்து கொண்டே வருவதற்குள்ள அறிகுறி தென்பட்டுக் கொண்டு வருகிறது. திருவொற்றியூரில் தோல் பதனிடும் தொழிற்சாலைகள் சுமார் ஏழெட்டு இருந்தன. ஒவ்வொன்றிலும் நூற்றுக்கு மேற்பட்ட தொழிலாளர்கள் வேலை செய்து கொண்டிருந்தார்கள். அங்கெல்லாம் தொழில் தகராறு காரணமாகவோ அல்லது வேறு காரணமாகவோ தெரியவில்லை, அந்தத் தொழிற்சாலைகள் எல்லாம் இன்று மூடப்பட்டிருக்கின்றன. முதலாளிகளிடம் சென்று கேட்டால், எங்களுக்கு அவைகளை விற்பனை செய்வதற்கு சரியான வசதியில்லை என்றும் அந்தத் தொழிலில் சரியான லாபம் கிடைக்கவில்லை என்றும் சொல்கிறார்கள். அதற்குக் காரணம், பச்சைத் தோலை எங்கெங்கு விற்பனை செய்து கொண்டிருந்தோமோ அந்த இடங்களில் அவர்களே வாங்கிக் கொண்டு போகிறார்கள், இந்தியாவிலிருந்து அதை ஏற்றுமதி செய்வதற்கு மிக வசதியாகயிருக்கிறது என்றும் சொல்கிறார்கள். ஆக, இந்தத் தொழில் நல்ல முறையில் நடக்க வசதியற்று இருக்கிறது, என்று அந்த முதலாளிகள் சொல்கிறார்கள். ஆக, பொதுவாக இந்த தோல் பதனிடும் தொழில் விஷயமாக, மத்திய அரசாங்கத்தை அணுகி இந்த தோல் பதனிடும் தொழிற்சாலைகள் நசிந்து போய் விடாதபடி அதற்கு வேண்டிய ஊக்கம் அளிப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று பணிவன்போடு கேட்டுக் கொள்கிறேன். மேலும், தொழிலாளர்களின் நலன்களைப் பாதுகாக்கக் கூடிய சட்டங்கள் பல மேலும் மேலும் வந்து கொண்டிருந்தாலும் அதற்கு உதவியாக தொழிற்சங்க தலைவர்களும், தொழிலாளர்களும் இருக்க வேண்டுமென்று அவர்களை இந்த சந்தர்ப்பத்தில் கேட்டுக் கொள்ள ஆசைப்படுகிறேன். அப்படிச் செய்வார்கள் என்ற நம்பிக்கை எனக்கு ஓரளவு ஏற்பட்டிருக்கிறது. இதற்கு முன்னால் எல்லாம் தொழிலாளர் இலாகா மான்யம் வந்தால் குறிப்பிட்ட நேரத்தை விட அதிகமாக எங்களுக்கு பேச வேண்டுமென்று வற்புறுத்திச் சொல்வார்கள் எதிர் கட்சியில் உள்ளவர்கள். அதிகமாக நேரம் ஒதுக்கப்பட வேண்டுமென்று சொல்வார்கள். ஆனால் இன்று அந்நிலை மாறி, பேசுவதற்கே ஆள் இல்லாத ஒரு நிலை ஏற்பட்டிருக்கிறது. அப்படி பேசுவதற்கு, மாற்றுக் கட்சியில் எங்கள் கட்சியில் இருப்பதை விட ஆள்கள் குறைவாகத்தான் இருக்கிறார்கள். அப்படிப்பட்டதொரு நிலை இன்று இருக்கிறதைப் பார்க்கும்போது, பெரிய தொழிலாளர் தலைவராகயிருந்த ஒருவர் நமது தொழில் அமைச்சராகயிருப்பதினாலும், தொழில் விஷயம் குறித்து நன்கு தெரிந்துக் கொண்டு பேசுவதற்கு சந்தர்ப்பம் கொடுக்காத விதத்தில் தொழிலாளர்களுக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் செய்துகொடுக்கக்கூடிய வாய்ப்பைப் பெற்றிருக்கிறார், ஆகவே நாம் ஏன் அதிகம் பேச வேண்டுமென்று எதிர்கட்சியினர் நினைக்கிறார்கள் என்றுதான் நான் நினைக்கிறேன். இந்த எண்ணம் மேலும் வளர வேண்டுமென்றும், தொழிலாளர்களுக்கு மேலும் மேலும் நல்ல வசதிகள் கொடுக்கப்பட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அடுத்தபடியாக, இன்ஷுரன்ஸ் திட்டத்தினால் தொழிலாளர்களுக்கு அநேகவித கஷ்டங்கள் ஏற்பட்டுள்ளன. காயம் பட்ட தொழிலாளர்கள் கட்டை தாங்களாகவே அவிழ்த்துக் கொண்டு டாக்டரிடம் செல்லவேண்டியிருக்கிறது. டாக்டர்கள் கட்டை அவிழ்ப்பது கிடையாது. இடது கையில் அடிபட்டு விட்டால் வலது கையின் உதவியைக் கொண்டும், வாயின் உதவியைக் கொண்டும்தான் அந்தக் கட்டை அவிழ்க்க வேண்டியிருக்கிறது. அப்படி கட்டை அவிழ்த்துக்கொண்டால்தான் டாக்டர் சிகிச்சை செய்கிறார்கள். இது விஷயமாக விம்கோ தொழிற்சாலையில் வேலை செய்யும் சோலை என்ற ஒரு ஹரிஜன நண்பர் என்னிடம் சொன்னார்.

(Sri R. Subramaniam in the Chair.)

ஆக, டாக்டர்கள் தொழிலாளர்களிடம் அன்பாக பழகாமல் இருப்பதற்குக் காரணங்கள், இரண்டு உண்டு. ஒன்று லீவ் கேட்கப் போகிறவர்கள், ஏதோ உண்மையிலேயே வியாதி ஒன்றும் இல்லாமலேயே லீவ்-க்காக

14th March 1959] [Sri T. P. Elumalai]

தன்னிடம் வருகிருர்கள் என்று டாக்டர் நினைக்கிருர். உண்மையான வியாதியஸ்தர்கள் போனாலும் கூட டாக்டர் அப்படியே நினைக்கிருர். அதே சமயத்தில் ஒருவர் போய் இரண்டு நாள் லீவ் வேண்டுமென்று கேட்டால் அவருக்கு ஒரு வாரம் லீவ் கொடுக்கப்படுகிறது. அதே சமயத்தில் ஒரு நாள் லீவ் வேண்டுமென்று கேட்டாலும் அது மறுக்கப்படுகிறது. ஆக, டாக்டர்கள் தங்கள் இஷ்டம் போல் நடக்கிருர்கள். ஆக, டாக்டர்கள் இந்தத் தொழிலாளர்களோடு அன்பான முறையில் பழகினால்தான் இந்த இன்ஷூரன்ஸ் திட்டம் சர்க்கார் நினைக்கும் அளவிற்குக் கைகூடும். அடுத்தபடியாக, இந்தத் திட்டத்தின்படி லீவ் எடுப்பவர்களுக்கு இரண்டு நாட்கள் லீவ் எடுத்தால், அந்த இரண்டு நாளைக்கும் அவர்களுக்கு நஷ்டஈடு கிடையாது. மூன்று நாள் லீவ் எடுத்தால் இரண்டு நாட்களைத் தள்ளி ஒரு நாளைக்குத்தான் நஷ்ட ஈடு கொடுப்பதைப் பார்க்கிருேம். ஆகவே, இரண்டு நாள் என்றாலும், அல்லது ஒரு நாள் என்றாலும் சரி அவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்கப்பட வேண்டும் என்று நான் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன். இந்த நஷ்ட ஈடு விஷயத்தில் சங்கடங்கள் ரொம்ப இருக்கிறது. ஒரு தொழிலாளி லீவ் எடுத்துவிட்டு, நஷ்டஈடு வாங்க வேண்டுமென்று சொன்னால், காலை ஆறு மணிக்கு இன்ஷூரன்ஸ் கார்டைக் கொண்டுவந்து பெட்டியில் போடவேண்டும். அப்படி ஆறு மணிக்கே போட்டுவிட்டு அங்கேயே இருக்க வேண்டும். பதினோரு மணிக்கு அந்த சிப்பந்திகள் அங்கே வருவார்கள். பதினோரு மணிக்கு வந்து கார்டுகளை எல்லாம் எடுத்து அவைகளைப் பரிசிலனை செய்து தொழிலாளர்களைக் கூப்பிட்டு மூன்று மணிக்கு வாருங்கள் என்று சொல்லிவிட்டு சாப்பிடப் போய்விடுகிருர்கள். பின் மூன்று மணிக்கு வந்தால், பத்துப் பேர்கள் அப்படிக் கார்டுகள் போட்டிருந்தால், அவர்களில் நாலு பேர்களுக்குக் கொடுத்துவிட்டு மீதியுள்ளவர்களிடம், கம்பெனியிலிருந்து உத்திரவு வரவில்லை என்று சொல்லிவிடுகிருர்கள். ஆகவே, அரை நாளுக்கு நஷ்ட ஈடு வாங்குவதற்கு இரண்டு நாட்கள் சுற்ற வேண்டி இருக்கிறது. ஆகவே, தொழிலாளர்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்கும் விஷயத்தில் அரசாங்கம் இன்னும் அதிகம் அக்கரை செலுத்தி அதைத் தொழிற்சாலைகளிலேயே கொடுப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அது தொழிற்சாலைகளாக இருந்தால், தொழிலாளர்களுக்கு அது மிகவும் வசதியாக இருக்கும். கடைசியாக, தொழில் கேந்திரமாயிருக்கிற திருவொற்றியூரில் ஒரு தொழிற் பயிற்சி நிலையம் ஆரம்பிக்க வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன். அப்படி தொழில் கேந்திரங்களில்தொழில் பயிற்சி முகாமை ஆரம்பித்தால் அங்குள்ள தொழிலாளர்களின் குழந்தைகளுக்கு அங்கு கைத் தொழில்கள் கற்கவும் மேலும் அந்தத் தொழிற்சாலையில் வேலை செய்யவும் வசதியாக இருக்கும். அதோடு கூட எந்தெந்தப் பகுதிகளில் தொழிற்சாலைகள் ஆரம்பிக்கப்படுகிறதோ அந்தந்தப் பகுதிகளில் உள்ளவர்களுக்கு அங்கு வேலை கிடைக்கும்படிச் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன். மதிப்பிற்குரிய எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் வட நாடு, தென்னாடு என்று பேசுவதைப் போல் இந்த ஜில்லா, அந்த ஜில்லா, இந்த ஊர், அந்த ஊர் என்ற வித்தியாசம் நாட்டில் பரவிவிடுமோ என்ற எண்ணம் எனக்குத் தோன்றுகிறது. திருவொற்றியூரில் 22 தொழிற்சாலைகள் உள்ளன. அங்குள்ள ஏழை மக்களுக்கு அங்கு வேலை கிடைப்பதில்லை. தஞ்சாவூரிலிருந்தும், மதுரையிலிருந்தும், இது போன்று வேறு பல பகுதிகளிலும் இருந்துதான் ஆட்கள் வந்து அங்கு வேலை செய்கிருர்கள். கம்பெனி முதலாளி எந்த ஊரைச் சார்ந்தவராயிருக்கிருரோ அந்த ஊரில் உள்ளவர்களுக்குத்தான் அங்கு வேலை கிடைக்கிறது. இதனால் பக்கத்தில் இருக்கிற வேலை இல்லாதவர்களுக்கு ஒரு ஆத்திரமும், தொழில் வளர்ச்சியின் மீது பொருமையும் ஏற்பட்டு, அதனால் பலவிதகமான இடுக்கல்களும், விரோத சக்திகளும் அங்கே பரவிக்கொண்டு வருகிறது. ஆகவே, அந்த நிலை இல்லாமல் எங்கே பிற்போக்கான பகுதிகள் இருக்கின்றனவோ அந்த இடத்தில் தொழிற்சாலைகளை ஆரம்பித்து, அங்கே இருக்கிற தொழிலாளர்களுக்கு வேலை கிடைப்பதற்கு சர்க்கார் ஒரு வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும் என்று நான் பணிவோடு கேட்டுக்கொள்கிறேன். ஆங்காங்கு பஞ்சாயத்து போர்டு, முனிஸிபாலிடிகள் அந்தத் தொழிற்சாலைகளுக்கு லைசன்ஸ் கொடுக்கிருர்கள். மெட்ராஸ் எம்ப்ளாய்மெண்டு எக்ஸ்

[Sri T. P. Elumalai] [14th March 1959

சேஞ்ஜ் இருப்பது போல், பஞ்சாயத்து போர்டு, முனிஸிபாலிடி இவைகளில் ஒரு ஒரு கிளார்க் போட்டு வேலை இல்லாதவர்களைக் கணக்கெடுத்து, அவர்களை பாக்டரிகளுக்கு அனுப்பினால் சரியான முறையில் ஏழை மக்களுக்கு வேலை கிடைப்பதற்கு வசதியாக இருக்கும் என்பதை சர்க்காருக்குக் மிகப் பணிவோடு தெரிவித்துக்கொள்கிறேன். இதற்காக சட்டத்தில் கூட ஏதேனும் மாற்றம் செய்தால் மிகவும் நல்லது என்று பணிவோடு அமைச்சர் அவர்களுக்கு முக்கியமாகத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அது மட்டுமல்ல. ஏறக்குறைய திருவொற்றியூரில் 22 தொழிற்சாலைகள் இருக்கின்றன. அங்கே 100 முதல் 2,000 தொழிலாளர்கள் வரையில் ஒவ்வொரு தொழிற்சாலைகளிலும் வேலை செய்கிறார்கள். அந்தப் பகுதியிலே இது வரையிலும் தொழிலாளர்களுக்கு வீட்டு வசதி செய்து கொடுக்கப்படவில்லை. சென்ற சட்டசபைக் கூட்டத்தில் கூட இது பற்றிச் சொன்னேன். ஆகவே, தொழில் கேந்திரமாக உள்ள திருவொற்றியூரிலும், எருக்கஞ்சேரியில் தொழிலாளர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுத்திருப்பது போல, வீட்டு வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று பணிவோடு கேட்டுக்கொள்கிறேன். அது மட்டுமல்ல இந்தக் காலனிகளுக்கு நமது சர்க்கார் தொழிலாளர்கள் நலனுக்காக உழைத்து தலைவர்களின் பெயரை வைத்து கௌரவப்படுத்தி இருக்கிறார்கள். நான் சர்க்காரை இதற்காகப் பாராட்டுகிறேன். ஆனால், பெயரை வைத்திருக்கிறார்களே தவிர மற்றவர்கள் தெரிந்துகொள்வதற்கு அங்கு ஒரு அடையாளமும் கிடையாது. சர்மா காலனி என்று பெயர் வைத்திருக்கிறார்கள், ஆனால் அம்மாதிரி பெயர் எழுதப்பட்ட போர்டு அங்கே கிடையாது. வெளியிலே இருந்து வருபவர்களுக்கு அந்தக் காலனியின் பெயர் தெரிந்துகொள்ள முடியாது. ஆகவே, அங்கே சர்மா காலனி என்று ஒரு போர்டு எழுதி வைக்க வேண்டுமென்று பணிவோடு கேட்டுக்கொள்கிறேன். மேலும், திருவொற்றியூரில் உள்ள தொழிலாளிகளுக்கு வீட்டு வசதித் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வரவேண்டுமென்று அமைச்சர் அவர்களை மீண்டும் பணிவோடு கேட்டுக்கொள்கிறேன். உண்மையிலேயே எல்லா மான்யங்களும் தொழிலாளர்களைத்தான் நம்பி இருக்க வேண்டும். குறிப்பாக், தொழிலாளர்கள் மான்யம் என்று சொன்னால், மற்ற மான்யங்களை எல்லாம் நிறைவேற்றுவதற்கு தொழிலாளர்கள்தான் வேலை செய்து கொடுக்க வேண்டும். ஆகவே, தொழிலாளர்களுடைய நிலை உயர்ந்தால், மற்ற மான்யங்களின் வேலைகள் நன்றாக நடப்பதற்கு வசதியாக இருக்கும்.

கடைசியாக போக்கு வரத்து இலாகாவைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்லுகிறேன். (குறுக்கீடு) போக்கு வரத்து இலாகாவுக்கு தனி மான்யம் இருப்பதினால் அதைப் பற்றி இப்பொழுது பேச வேண்டாமென்று சொல்லுகிறார்கள். ஆகவே, நான் இப்பொழுது அது பற்றிப் பேசவில்லை. சர்க்கார் நடத்தும் தொழிற்சாலைகள் மற்றவர்களுக்கு எடுத்துக் காட்டாக இருக்க வேண்டும். தனிப்பட்டவர்கள் தொழிற்சாலைகள் நடத்துவதற்கும், கூட்டுறவு முறையில் தொழிற்சாலை நடத்துவதற்கும், சர்க்கார் எவ்வளவோ உதவி செய்துகொண்டு வருகிறார்கள். சர்க்கார் தலைமையிலே நடக்கின்ற தொழிற்சாலைகளின் தொழிலாளர்களுக்கு நல்ல வசதி செய்து கொடுத்து, கூட்டுறவு முறையில் நடக்கும் தொழிற்சாலைகளில் தொழிலாளர்களுக்கு நல்ல வசதி கிடைப்பதற்கு, ஊதியம் கிடைப்பதற்கு வழிகாட்டியாகத் திகழ வேண்டும். சர்க்கார் போக்கு வரத்து, பி.டபிள்யூ.டி. தொழிற்சாலை இப்பேர்ப்பட்ட தொழிற்சாலைகளை எடுத்துக்கொண்டால் நிறைய லாபம் இருக்கிறது. மேற்பார்வைக்காக இருக்கிற அதிகாரிகளின், கண்காணிப்புக்காக இருக்கும் அதிகாரிகளின் சம்பளம் தொழிலாளர்களைவிட அதிகமாக இருக்கிறது. அவர்களின் எண்ணிக்கையும் அதிகமாக இருக்கிறது. பெரிய அதிகாரிகளுக்கு அதிகமான சம்பளம் இருக்கிறது. கடைசியில் லாபத்தைக் கணக்குப் போடும்போது தொழிலாளர்கள் சம்பளம், இந்த அதிகாரிகள் சம்பளம், மற்றச் செலவுகள் இவைகளைக் கழித்துவிட்டு லாபம் அதிகமாகக் கிடைக்கவில்லை என்று சொல்லப்படுகிறது. இதனால் தொழிலாளிக்கு சேர வேண்டிய உரிமை, லாபத்தில் கிடைக்க வேண்டிய பங்கு கிடைப்பதில்லை ஆகவே, ஒரு தொழிற்சாலையில், மேற்பார்வைக்காக வைக்கும்

14th March 1959] [Sri T. P. Elumalai]

அதிகாரிகளின் எண்ணிக்கையைக் குறைக்க வேண்டும். குறிப்பாக சர்க்கார் தொழிற்சாலைகளில் கண்காணிப்புக்காக இருக்கும் அதிகாரிகளின் எண்ணிக்கையைக் குறைத்து மற்றவர்களுக்கு வழி காட்டியாக இருக்கவேண்டுமென்று, அமைச்சர் அவர்களை கேட்டுக்கொண்டு, எனக்குப் பேசுவதற்கு சந்தர்ப்பம் அளித்த கனம் சபாநாயகர் அவர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

SRI A. SAMUEL NADAR : கனம் தலைவர் அவர்களே, இந்தத் தொழில் மான்யத்தை ஆதரித்து சில வார்த்தைகளைப் பேச ஆசைப்படுகிறேன். பழிவாங்கப்பட்ட தொழிலாளர்கள் எடுக்கப் படவில்லை என்று சொன்னார்கள். தொழிற்சங்கத்தில் சேர்ந்தவர்கள் பழி வாங்கப்பட்டார்கள் என்று சொன்னார்கள். நான் தூத்துக்குடி தொழிற்சங்கத்தில் 23 வருஷங்களாக உழைத்ததிலே என்னுடைய அனுபவத்தை இந்தச் சபையிலே தெரிவிக்க ஆசைப்படுகிறேன். ஒரே சங்கத்தை அமைத்து நடத்தினால் தொழிலாளர்கள் மேன்மையடைவர், முதலாளிகளும் கஷ்டம் இல்லாமல் தொழிற்சாலைகளை நடத்துவார்கள் என்பதை என்னுடைய அனுபவத்தில் கண்டிருக்கிறேன். ஏனென்றால் எங்கள் தொழிற்சங்கத்தை அங்கீகரித்து 22 வருஷங்கள் ஆகின்றன. அங்கீகாரம் பெற்ற சங்கம் இருப்பதினாலே பல காரியங்கள் சமரச முறையைக் கொண்டே தீர்த்துக்கொண்டிருக்கிறோம், பல கோரிக்கை களை அடைந்திருக்கிறோம். கோர்ட்டுக்குப் போவதற்கு தொழிலாளர் களுக்கு சந்தர்ப்பம் இருக்கலாம். ஆனால், அதைக் கடைசி ஆயுதமாக வைத்துக்கொண்டால் நல்லது என்று சொல்லப் பிரியப்படுகிறேன். தொழி லாளர்களுக்கு போராட்டம் எப்படி கடைசி ஆயுதமோ, அது போல் தொழில் கோர்ட்டை கடைசி ஆயுதமாகத்தான் உபயோகப்படுத்த வேண்டும். தொழில் கோர்ட்டுக்குப் போய்விட்டால், கோர்ட்டுத் தீர்ப்பில் சர்க்காரோ, மந்திரியோ தலையிடுவது கஷ்டமாகிவிடும். சமரசத்திலேயே பல காரியங்களைச் சாதிக்க லாம். போராட்டம் என்றால், இந்த மாகாணத்தில் எந்தத் தொழிற் சங்கமும் நடத்தாத போராட்டத்தை நாங்கள் தூத்துக்குடியில் நடத்தி யிருக்கிறோம். வாரத்திற்கு ஒரு ஹர்த்தால் செய்திருக்கிறோம். மாதத் திற்கு ஒரு ஸ்ட்ரைக் செய்திருக்கிறோம். 3 மாதத்திற்கு ஒரு கதவடைப்பில் கொண்டுபோய் விட்டிருக்கிறோம். இத்தனை செய்தாலும் ஒரு தொழிலாளர் ஒரு "லத்தி" அடிபட்டது கிடையாது. ஒரு தொழிலாளியும் ஒரு சொட்டு ரத்தம் சிந்தியது கிடையாது. இது நமது காங்கிரஸ் சர்க்கார் காலத்திலேயே நடந்திருக்கிறது என்பதை பெருமையாகச் சொல்லிக்கொள்ளுகிறேன். சில இடங்களிலே போராட்டம் நடக்கிறது. போராட்டம் ரத்தக்களறியிலும், "லத்தி சார்ஜிலும்" கொண்டு போய் விடுகிறது. தூத்துக்குடியில் பல போராட்டங்கள் 22 வருஷங்களாக நடத்தியிருக்கிறோம், போராட்டம் என்போம், லேபர் ஆபீசர் வருவார், லேபர் கமிஷனர் வருவார். சமரசம் பேசுவோம், கிடைத்ததை வாங்கிக்கொண்டு, மறுபடி அடுத்த போராட்டத் திற்கு தயாராவோம். அதற்காக நான் தொழிலாளர்கள் மத்தியிலே கட்சிக் கண்ணோட்டத்தோடு வேலை செய்யவில்லை. தொழிலாளி கண்ணோட் டத்தோடு வேலை செய்து பல கோரிக்கைகளை பெற்றிருக்கிறோம். சுருங்கச் சொல்லுவது என்னவென்றால் வேலைக்கு ஆள் எடுப்பது சங்கத்தைக் கேட்டுத் தான். ஆளைத் தள்ளுவது என்றால் சங்கத்தைக் கேட்டுத் தான். வார்னிங் கொடுப்பார்கள், 2, 3 தடவை கொடுப்பார்கள். கடைசி வார்னிங் கொடுக் கும்போது சங்கத்தைக் கேட்டுத் தான் செய்வார்கள். அப்படிப்பட்ட உரிமை களைப் பெற்றிருக்கிறோம். சங்கம் மூலம் ஒரு கூட்டுறவு சங்கம் நடக்கிறது. ஒரு வெல்பேர் கமிட்டி இருக்கிறது. நாங்கள் எத்தனையோ கோரிக்கைகளை பெற்றிருக்கிறோம். அத்தனையும் சமரசமான முறையிலே அடைந்திருக் கிறோம். பழி வாங்கப்பட்ட தொழிலாளர்கள் சமரச முறையிலே வேலைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறார்கள். எப்படி என்றால், போனஸ் போராட் டம் வருஷம் தோறும் வரும். அந்தப் போனஸ் பிரச்னையை வைத்து முதலாளிகளுக்கும் தொழிற்சங்கத்திற்கும் சமரசப் பேச்சு தொடங்கும். அப்படிப்பட்ட கட்டத்தில் சில பழி வாங்கப்பட்ட தொழிலாளி களை நிர்ப்பந்தம் செய்து வேலைக்கு மீண்டும் எடுத்து விடுவோம்.

[Sri A. Samuel Nadar] [14th March 1959

இப்படி பல காரியங்களைச் செய்திருக்கிறோம். இந்த நிலைமையில் போட்டி சங்கங்கள் வைத்திருப்பதினால் பல தொழிலாளர்கள் பழி வாங்கப் படுகிறார்கள் என்றால் அது மிகவும் வருந்தத்தக்கது விஷயம். ஆகவே இவ்விதம் போட்டி சங்கங்கள் ஒன்றும் இல்லாமல் ஒரே சங்கமாக வைத்திருந்தால் தொழிலாளர்கள் அநேக நன்மைகள் அடைய முடியும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக நமது சர்க்கார் தொழிலாளர்களுக்கு பல காரியங்களை செய்யவேண்டியிருக்கிறது. அதில் சிலவற்றை நான் குறிப்பிட விரும்புகிறேன். தூத்துக்குடியில், அதாவது நமது ராஜ்யத்தில் அதிகமாக உப்பு கிடைக்கக் கூடிய தூத்துக்குடியில் உப்பளத்தில் உத்தேசம் ஒன்றரை லட்சம் பேர்கள் வேலை செய்து வருகிறார்கள். இந்த உப்பளத்தில் தினமும் பல்லாயிரக் கணக்கான தொழிலாளர்கள் வேலை செய்து வருகிறார்கள். ஆரம்பத்தில் வெள்ளைக்காரன் நமது நாட்டுக்கு வந்தபோது அவர்கள் வரக்கூடியக் கப்பலில் மணல் மூட்டைகளுக்குப் பதிலாக உப்பு மூட்டைகளை ஏற்றிக் கொண்டு வந்து அவற்றை இங்கு வியாபாரம் செய்து விட்டு இங்கிருந்து சரக்கை ஏற்றிக்கொண்டு போய்க் கொண்டிருந்தார்கள். இவ்விதம் உப்பு அந்நிய நாட்டிலிருந்து நம் நாட்டுக்கு வந்த காலம் போய் இப்போது சுயதேவைப் பூர்த்தியில் நாம் நமது நாட்டில் உப்பை வேண்டிய அளவுக்கு உற்பத்தி செய்துகொண்டிருக்கிறோம். அந்த அளவில் நாம் வெற்றி பெற்றிருக்கிறோம். அதோடு மட்டும் அல்ல, வெளி நாட்டுக்கும் அனுப்பக் கூடிய அளவு நாம் உப்பு உற்பத்தி செய்துகொண்டிருக்கிறோம். ஆனால் இன்றைக்கு உப்பு அதிகமாக தேங்கிக்கிடக்கின்றன. அதன் காரணமாக உப்பு வியாபாரிகள் எல்லாம் இன்று கண்கலங்கிகொண்டிருக்கிறார்கள். ஆனால் உழைக்கின்ற தொழிலாளிகள் எல்லாம் எந்தவிதமான பயனும் இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள். சுருங்கச் சொல்வது என்றால் அந்த தொழிலாளிகளுக்கு எல்லாம் குறைந்தபட்சக் கூலி கிடைக்கின்ற நிலைமை இன்னும் ஏற்படவில்லை. அதை உடனடியாக சர்க்கார் கவனித்து வேண்டிய நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அவர்களுக்கு உடனடியாகச் சட்டம் செய்து நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இந்தத் தொழிலாளர்கள் வேலை செய்யும் இடத்தில் குடி தண்ணீர் வசதி கிடையாது. உப்பளத்தில் தங்குவதற்கு நல்ல இட வசதி கிடையாது. அது மட்டுமல்ல, உப்பளத்தில் வேலை செய்யக்கூடிய தொழிலாளி உப்பில் நின்று வேலை செய்ய வேண்டியிருக்கிறது. அது மட்டுமல்ல. பகல் பூராவும் நின்று கொண்டிருப்பதால் அவர்கள் சிறு வயதிலேயே கண் பார்வை இழந்து விடுகின்ற நிலைமை ஏற்படுகின்றது. அதே போன்று காலில் பாதரட்சை இல்லாமல் அவர்கள் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. இதை எல்லாம் அவர்கள் அனுபவித்துக் கொண்டிரு கிறார்கள. இவற்றை போக்குவதற்காக அவர்களுக்கு நல்ல முறையில் கண்ணாடியும் பாதரட்சையும் கொடுக்கவேண்டும் என்று ஸால்ட் ஆலோசனை குழு கூறி, அதற்காக முயற்சியும் எடுத்து வருகிறார்கள் என்று தெரிகிறது. இதை அரசாங்கம் உடனடியாக கவனித்து அதற்கு ஆவன செய்யவேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக சங்கு குளிப்புத் தொழிலில் பல ஆயிரக்கணக்கான தொழிலாளிகள் ஈடுபட்டிருக்கிறார்கள். இந்தத் தொழிலாளிகள் சென்று மூச்சை பிடித்துக்கொண்டு 70, 80 பாகம் கடலின் அடியில் சென்று சங்கை எடுத்துக்கொண்டு வருகிறார்கள். அவர்கள் இவ்விதம் வேலை செய்து கொண்டிருக்கும் போது கொஞ்சம் மூச்சுத் தவறிவிட்டால் அவர்கள் இறந்து போய் விடுகிறார்கள். இவ்வாறு இறந்து போகின்ற தொழிலாளர்களுக்கு நஷ்ட ஈடாக எத்தனை ரூபாய் கொடுத்தாலும் தகும். ஆனால் மூன்று நான்கு வருடங்களுக்கு முன்னால் ஒரு தொழிலாளி இறந்து போய்விட்டான் என்றால் நஷ்ட ஈடு கொடுப்பதற்காக அங்குள்ள தொழிற்சங்கங்கள் முயற்சி எடுத்து வேலை செய்யும்போது மந்திரி அவர்களும் சம்மதித்து சுமார் 2,000 ரூபாய் வரை கொடுத்து வந்திருக்கிறார்கள். இந்தத் தொகை போதாது இன்னும் அதிகமாகக் கொடுக்கப்பட வேண்டும் என்று ஆவலாக கேட்டுக்கொண்டிருந்தோம்.

ஆனால் இப்போது அந்தத் தொகை குறைந்து ஒரு தொழிலாளி இறந்து விட்டால் 300, அல்லது 400 ரூபாய் தான் நஷ்ட ஈடாக கொடுக்கப்படுகின்ற துர்ப்பாக்கியமான நிலைமை இருந்து கொண்டிருக்கிறது. ஒரு தொழிலாளி இதில் அகாலமாக இறந்து போய்விட்டால் அவருடைய பெண்டு பிள்ளைகள் வாழ்வதற்கு வசதியாக பல்லாயிரக்கணக்கான ரூபாய்களை கொடுக்க வேண்டியது அரசாங்கத்தினுடைய கடமை. ஏன் இதை சொல்லுகிறேன் என்றால் சங்கு எடுப்பு மூலமாக சர்க்காருக்கு எவ்வளவு வருமானம் கிடைக்கிறது என்று பார்த்தால், இன்றைக்கு நாள் ஒன்றுக்கு 25 ஆயிரம் சங்குகள் எடுக்கப்படுகின்றன. இதில் செலவு எல்லாம் போக சர்க்காருக்கு நாள் ஒன்றுக்கு 25 ரூபாய் வருமானம் கிடைக்கும் என்று நம்புகிறேன். இவ்விதம் வருமானத்தை தேடித்தருகிற தொழிலாளிகளுக்குப் பாதுகாப்பு கொடுக்க வேண்டியது மிகவும் அவசியம் என்பதை சர்க்கார் கவனித்து அதற்கு ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு இன்றைக்கு அவர்கள் குடியிருப்பதற்கு நல்ல வீடு இல்லாமல் கஷ்டப்படு கிறார்கள். இவர்களுக்கு வீடு கட்டுவதற்காக ஒரு இடத்தில் ஏழு ஏக்கர் வாங்கப்பட்டது. அந்த இடத்தில் கூட்டுறவு முறையில் வீடு கட்டலாம் என்று நினைத்திருந்தார்கள். ஆனால் துர்ப்பாக்கியவசமாக அவ்விதம் நடை பெறாமல், அந்த நிலத்தை உனக்கு ஒரு ஏக்கர், எனக்கு இரண்டு ஏக்கர் என்று பங்கு போட்டுக்கொள்ள முன் வந்து விட்டதால் கூட்டுறவு முறையில் வீடு கட்டுவது என்பது நடைபெறவில்லை. இவ்விதம் நான் முந்தி, நீ முந்தி என்று சண்டை போட்டுக்கொண்டதினால் முந்தினவர்கள் பலர் அந்த நிலத்தை எடுத்துக்கொண்டார்கள். மீதிப் பேர்கள் எல்லாம் இப்போது வீடு இல்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் ஆர்வி மில்லில் வேலை செய்து கொண்டிருக்கக்கூடிய தொழிலாளர்கள் அவர்களுக்கு வீடு கட்டிக்கொள்வதற்காக மானேஜ்மெண்டிடமிருந்து கேட்டு வாங்கி வீடுகள் எல்லாம் கட்டி பல வருஷங்கள் ஆகிவிட்டது. சந்திர மௌலி அவர்கள் மந்திரியாக இருந்த சமயம் சுமார் 100 ஏக்கர் புறம் போக்கு நிலத்தை வாங்குவதற்கு ஏற்பாடு செய்து அதில் வீடு கட்டுவதற்கு அவர்களே கல்நாட்டு விழாவையும் நடத்தினார்கள். சர்க்கார் அந்த இடத்தில் வீடு கட்டித் தரவில்லை. அதற்காக அங்குள்ள தொழிலாளர் களும் தொழிலாளர் சங்கமும் சும்மா இருந்து விட வில்லை. அந்த இடத்திலேயே வீடுகளை கட்டினார்கள், இந்த ராஜ்யத்தில் வேறு எந்த இடத்திலும் இந்த மாதிரி வீடு கட்டியிருக்கமாட்டார்கள் என்று நம்புகிறேன். அவ்விதம் கட்டியிருந்தால் அது பெருமைப்படக்கூடிய விஷயம் தான். அதே போன்று தூத்துக்குடியில் தொழிற்சங்க காரியதரிசி வெங்கட கிருஷ்ணன் அவர்களுடைய முயற்சியின் பேரில் வீடுகளை தொழிலாளிகளே கட்டினார்கள். அதற்காக சர்க்காரிடமிருந்து கடன் கேட்கவில்லை. மானேஜ் மெண்டிடமிருந்து கடனாக வாங்கி 64 வீடுகளை கட்டினார்கள். இவ்விதம் கட்டியிருக்கின்ற வீடுகளின் வசதியைப் பார்த்தால் குறைந்தது 3,000 ரூபாய் பெறும் ஒவ்வொரு வீடும். கக்கூஸ் ஸெப்டிக் டாங்க் வசதி எல்லாம் இருக்கிறது. ஒவ்வொரு வீட்டுக்கும் ஏழு எலெக்டிரிக் லைட்டுகள் இருக் கின்றன. இதற்கு மாதம் ஒன்றுக்கு $12\frac{1}{2}$ ரூபாய் தொழிலாளர்களுடைய சம்பளத்திலிருந்து பிடித்துக்கொள்ளுகிறார்கள். இந்த வீட்டினுடைய வாடகை மதிப்பைப் பார்த்தால் குறைந்தது 15, அல்லது 17 ரூபாய் போடலாம். ஆனால் எங்களிடம் வாங்குவது $12\frac{1}{2}$ ரூபாய். இவ்விதம் எங்களிடம் வாங்கப்படும் தொகை ஒரு சீட்டுக்கு கட்டுவது மாதிரி சேர்த்துக் கொண்டு இருக்கிறது. இதை யெல்லாம் ஏன் சொல்லுகிறேன் என்றால் கூட்டு முறையில் கட்டினால் இவ்வளவு வசதியெல்லாம் கிடைக்கிறது என்பதை பெருமையாக சொல்லுவதற்காகத்தான். ஆகையினால் தொழிலாளர்களுக்கு கூட்டுறவு முறையில் வீடுகளை கட்டிக் கொடுப்பதற்கு சர்க்கார் முயற்சி எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்போது தான் எல்லா தொழிலாளர்களுக்கும் வீட்டு வசதி கிடைக்க முடியும் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக மோட்டார் தொழிலாளிகள் சங்கத்தைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். மோட்டார் தொழிலாளிகள் எல்லாம் சங்கம் வைத்திருக்கிறார்கள். சில இடங்களில் தொழிலாளர் களுடைய சங்கம் இல்லாத காரணத்தால் தொழிலாளர்களும் கஷ்டப்பட

[Sri A. Samuel Nadar] [14th March 1959

வேண்டியிருக்கிறது. முதலாளிக்கும் அதனால் பலவிதமான கஷ்டங்கள் ஏற்படுகின்றன. எப்போதுமே தொழிலாளர்கள் தொழிற்சங்கம் மூலமாகத் தான் முதலாளிகளை அணுகவேண்டும். அப்போதுதான் காரியங்கள் வெகு சுலபமாக நடைபெற முடியும். ஆகவே எல்லா இடங்களிலும் மோட்டார் தொழிலாளர்களுக்கு சங்கங்கள் அமைப்பதற்கு வேண்டிய வசதிகளை சர்க்கார் செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அப்படியிருக்குமானால் தொழிலாளி பிரச்னையாக இருந்தாலும் சரி, முதலாளி பிரச்னையாக இருந்தாலும் சரி, அவைகள் வெளி வராத முறையில் தீர்ந்து போகும். இன்றைக்கு மோட்டார் கம்பெனியில் சில வற்றில் மாத்திரம் தொழிலாளர்களுக்கு நல்ல முறையில் சம்பளம் கொடுத்து வருகிறார்கள். இதல்லாத பல கம்பெனிகளிலும் தொழிலாளர் கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அது மட்டுமல்ல, பல இடங்களில் தொழிலாளர்கள் பழி வாங்கப்பட்டு வருவதாகத் தெரிகிறது. இந்த மாதிரியான கொடூரங்கள் இருக்கின்றன. சங்கத்தில் சேர்ந்ததற்காக சில இடங்களில் இவ்விதம் பழி வாங்கப்பட்டு வருவதாகத் தெரிகிறது. வெள்ளைக் காரன் காலத்தில் இவ்விதம் நடந்து கொண்டிருந்தது. ஆனால் இப்போது அதே முறையில் நடந்து கொண்டிருக்கிறது என்றால் அது மிகவும் துர்ப்பாக் கியமான நிலைமை என்று தான் சொல்ல வேண்டியிருக்கிறது. ஆகவே சர்க்கார் இதற்கு ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இந்த மான்யக் கோரிக்கையை நான் ஆதரித்து என் பேச்சை முடித்துக்கொள் கிறேன்.

***SRI K. PONNIAN** : கனம் தலைவர் அவர்களே, நமது தொழில மைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் தொழில் மான்யத்தை ஆதரித்துச் சில வார்த்தைகள் சில கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். நமது தேசிய சர்க்கார் வந்து பத்து பன்னிரண்டு வருடங்கள் ஆகின்றன. உண்மையிலேயே இந்தக்காலத்தில் முக்கியமாக தேயிலைத் தோட்டத் தொழிலாளர்கள், மில் தொழிலாளிகள், பாக்டரி தொழிலாளிகள் இவர்களுடைய வாழ்க்கைத்தரம் கடந்த 10 வருடங்களாக இருந்து வந்ததை விட பன்மடங்கு உயர்ந்திருக்கிறது என்பதை எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை. குறிப்பாக தேயிலைத் தோட்டத் தொழிலாளிகள் இன்றைக்கு நல்ல வளர்ச்சியுற்று வருகிறார்கள். அவர் களுடைய வாழ்க்கைத்தரம் உயர்ந்திருக்கிறது. அவர்களுக்கு நல்ல உயர்

11-30 a.m. வான கூலியும், மலைப் பிரதேசத்தில் வேலை வசதிக்கு வேண்டிய இரண்டு கம்பளிகள், போனஸ், ஊர் போய்ச் சென்று வர வழிச் செலவு எல்லாம் நமது தேசிய சர்க்கார் கொடுத்து வந்திருக்கிறது. இருந்தாலும் அவர் களுடைய குறைகளில் 4-ல் ஒரு பங்கைதான் தீர்த்திருக்கிறோமே தவிர, 4-ல் 3 பங்கு பாகம் குறைகள் நிறைவேறாமல் இருக்கின்றன. இங்கே ஒரு சில உதாரணங்களைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். நமது தொழில் அமைச்சர் அவர்களுக்குத் தேயிலைத் தோட்டம் புதிதல்ல. அவர்கள் பல முறைகள் விஜயம் செய்திருக்கிறார்கள். நான் இதைச் சொல்லும்போது அவர்களுக்கு நன்றாக விளங்குமென்று நான் நினைக் கிறேன்.

இன்றைக்கு வீடு வசதியை எடுத்துக்கொண்டால், ஒவ்வொரு வீட்டி லும் இரண்டு அல்லது மூன்று குடும்பங்கள் வாழ்கின்றன. லைன் பக்கம் போய்ப் பார்த்தால், ஏற்கனவேயே மலைப் பிரதேசத்தில் வாழக் கூடிய மக்கள் அத்தனை பேர்களும் ஹரிஜனங்கள்—மலைப் பிரதேசத்தில் லேபர்களுக்குக் கட்டிக் கொடுக்கிற வீடுகளே அதற்குள்ள முறையில்தான் கட்டப்படுகின்றன. அவ்வளவு சிறு வீட்டில் இரண்டு அல்லது மூன்று குடும்பங்கள் வாழ வேண்டுமென்றால், அது கண்கொள்ளாக் காட்சியாக— பரிதாபகரமான காட்சியாக—இருக்கிறது. ஹரிஜனங்கள் என்றால் மோசமாகத் தான் மனதில் உருவாகின்றது. அப்படி இருக்கும்போது ஒரு வீட்டில் இரண்டு அல்லது மூன்று குடித்தனங்கள் நடத்த வேண்டுமென்றால், மந்திரி அவர்கள் அந்த நிலையை வைத்துக்கொண்டிருப்பது வருத்தத் தைக் கொடுக்கக் கூடியதாக இருக்கிறது. நமது சர்க்காரில் வீடு கட்டுவதற் காகப் பணம் கொடுக்கிறார்கள். அந்தப் பணத்தை முதலாளிகள் வாங்க மறுக்கிறார்கள் என்றால் என்ன சொல்லுவது என்று எனக்குப் புரிய வில்லை.

14th March 1959] [Sri K. Ponnian]

அடுத்தபடியாக, எஸ்டேட் முதலாளியினுடைய பங்களாவுக்குப் போக நல்ல ரோடு வசதி இருக்கிறது. எஸ்டேட்டில் வேலை செய்யும் ஸ்டாப்களுக்கு — ரைட்டர்களுக்கு — அவர்களுடைய வீடுகளுக்குப்போக நல்ல ரோடு வசதி இருக்கிறது. ஆனால், தொழிலாளிகளுடைய வீடுகளுக்குப் போக ரோடு வசதியே கிடையாது. தேயிலைச் செடிகளைப் பார்த்திருப்பவர்களுக்குத் தெரியும். தேயிலைச் செடிகள் இடுப்பிற்குமேல் வளர்ந்திருக்கும். இப்படி இடுப்புக்கு மேல் இருக்கக் கூடிய இடங்களில் கொடுத்திருக்கிறார்கள். அந்தப் பாடி வழியாகத்தான் தொழிலாளிகள் லைனுக்குச் செல்வது வழக்கம். மத்தியில் நுழைந்துகொண்டு தான் பள்ளிப் பிள்ளைகளும், தொழிலாளிகளும் செல்ல வேண்டும்.

(Mr. Speaker in the Chair.)

இடுப்பிற்குக் கீழே பூச்சி புழுக்கள் வந்தாலும் தெரியாது. ஆகையால், லைன்களுக்கும் ரோடு போட்டுக் கொடுக்க வேண்டுமென்று மந்திரி அவர்களைத் தாழ்மையோடு கேட்டுக்கொள்கிறேன்.

அது மட்டுமல்ல. ஒவ்வொரு லைனிலும் 10 வீடுகள் இருக்கும். இந்தப் பத்து வீடுகளிலும் மொத்தம் 30 குடும்பங்கள் இருக்கின்றன. சாயந்திர வேளைகளில் வெளியில் வந்து முற்றங்களில் உட்காரக் கூட முடியாது. அப்படி உட்கார வேண்டுமானால் வெளிச்சம் வேண்டும். ஒவ்வொரு வீட்டுக்கும் வெளிச்சம் போட்டுக் கொடுக்காவிட்டாலும்கூட, ஒவ்வொரு லைனுக்கும் முன்னாலாவது லைட் போட்டுக் கொடுத்தால் இரவு நேரங்களில் வெளியில் உட்கார்ந்து தங்கள் நேரத்தைக் கொஞ்சம் காற்றோட்டத்தில் கழிப்பார்கள் என்று தாழ்மையோடு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, நம் சர்க்காரிலே பிரசவ வசதி செய்திருக்கிறார்கள். முதலில் 60 ரூபாய் என்று இருந்தது. இப்போது 75 ரூபாய் வரையில் வந்திருக்கிறது. அதைத் தவிர எழு தேசீய விடுமுறை நாட்கள் என்று சம்பளத்தோடு விடுமுறைகள் கொடுத்திருக்கிறார்கள். இது மிகவும் போற்றத்தக்கது. அதை நான் வரவேற்கிறேன். தொழிலாளப் பெண்களுக்கு எந்த சமயத்தில் பிரசவம் ஆகும் என்ற இந்த சமாசாரமெல்லாம் தெரியாது. ஆஸ்பத்திரியில் போய்ப் பிரசவம் ஆனால்தான் இந்த மெடர்னிடி பெனிபிட் எல்லாம் கொடுக்கிறார்கள். அவர்கள் இருக்கும் இடத்திலேயே பிரசவம் ஏற்பட்டால், இந்த மெடர்னிடி பெனிபிட்டெல்லாம் கொடுப்பதில்லை. அப்படி வாங்குவதென்றால் அதற்குப் பல சாட்சிகளை வைத்து அதை வாங்க வேண்டியிருக்கிறதிது. அதிலே பெரும் கஷ்டம் இருக்கிறது. லைன்களில் பிரசவம் ஆகிவிட்டாலும் கூட இந்த மெடர்னிடி பெனிபிட்டைக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தொழிலாளிகள் வாழும் பிரதேசத்தில் இரண்டு அல்லது மூன்று தொழிற் சங்கங்கள்—போட்டிச் சங்கங்கள் இருக்கின்றன. என்னுடைய பிரதேசமாகிய வால்பாரைப் பிரதேசம் கேரளாவிற்குப் பக்கமாக இருக்கிறது. அதனால் சமீபத்திலே மதுபானம் அதிகமாக இருக்கிறது. ஒருவரை அடக்க வேண்டுமென்று நினைத்தால் 7 அல்லது 8 மைலில் உள்ள கேரளாவிற்குப் போய் மதுவை வாங்கிக் கொண்டு வந்து, அவன் விரோதியே அவன் வீட்டுக்குப் பக்கத்தில் புதைத்து வைத்துவிட்டு, போலீஸைக் கூட்டி வந்து அந்த ஆளைப் பிடித்து விடுகிறார்கள். அதன்மேல் கேஸ் எல்லாம் போட்டு, பைன் ஆகி, பைன் கொடுத்துவிட்டு வந்தால், அந்த மானேஜ்மெண்ட் அவனை ரீ-ரிஜிஸ்டர் செய்ய மாட்டேன் என்று சொல்லுகிறார்கள். கனம் அமைச்சர் அவர்கள் இதையும் தீர்த்து வைக்கவேண்டுமென்று பணிவோடு கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, அங்கே தொழிலாள மக்களுடைய குழந்தைகள் படிப்பதற்காக பஞ்சாயத்து போர்டு ஹைஸ்கூல்கள் இருக்கின்றன. முன்பெல்லாம் தோட்டங்களில் மேஸ்திரிகள் இருந்தார்கள். இந்த மேஸ்திரிகளை சர்க்கார் ஒழித்துவிட்டார்கள். இவர்களை ஒழித்த பிறகு, சூபர்வைஸர்கள் நியமிப்பதற்கு சர்க்கார் மானேஜ்மெண்டுக்கு அதிகாரம் கொடுத்திருக்கிறார்கள். சூபர்வைஸர்களை நியமிக்கும்போது அந்தப் பிராந்தியத்தில்

படித்து முன்னுக்கு வந்த தொழிலாளிகளுக்குச் சலுகை கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். வெளிப்புறத்திலிருந்து என்ன படித்தவர்களை எடுக்கிறார்களோ, என்ன யோக்கியதாம்சம் இருப்பவர்களை எடுக்கிறார்களோ, அதே யோக்கியதை, அதே படிப்பு, இருக்கும் தொழிலாளர்களை ஏன் எடுக்கக்கூடாது என்று தாழ்மையோடு கேட்க விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, மலைப் பிரதேசங்களில் பிளான்டேஷன் லேபர் ஆக்ட் அமுலுக்கு வந்தும் அதனால் நன்மை வராமல் இருப்பதுபோல் தோன்றுகிறது. பிளான்டேஷன் ஆக்ட் பிரகாரம் ஒவ்வொரு டிவிஷனிலும் ஒரு ஸ்கூல் வேண்டும், ஒவ்வொரு டிவிஷனிலும் ஒரு கான்டீன் வேண்டும், ஒவ்வொரு டிவிஷனிலும் ஒரு கோவாபரேடிவ் ஸ்டோர் வேண்டும், லைன் பக்கத்தில் லெட்ரீன் பெஸிலிடிஸ் வேண்டும், இன்னும் மற்ற பெஸிலிடிஸ் எல்லாம் வேண்டும் என்று இருக்கிறது. அவைகளெல்லாம் இப்போது அறவே மறுக்கப்படுகிறது. ஒரு சில எஸ்டேட்டுகளில் அறைகுறையாக இருக்கிறது. இருந்தாலும் கூட, அநேக இடங்களில் இவைகள் கண்டிப்பாக மறுக்கப்படுகின்றன. அநேக இடங்களில் கோவாபரேடிவ் ஸ்டோர்கள் கிடையாது, கான்டீன்கள் கிடையாது, ஒவ்வொரு டிவிஷனுக்கும் ஸ்கூல் கிடையாது என்ற நிலை இருக்கிறது. ஒரு இடத்திலிருந்து ஒரு மைலுக்குள் ஒரு ஸ்கூல் இருந்தால், இன்னொரு ஸ்கூல் அங்கே கட்டக் கூடாது என்று எஜுகேஷன் டிபார்ட்மெண்டில் சொல்லிவிடுகிறார்கள். ஒரு டிவிஷனிலிருந்து இன்னொரு டிவிஷனுக்கு ½ மைல் இருந்தாலும் கூட, அந்த டிவிஷனில் பள்ளிக்குச் செல்லும் குழந்தைகள் 40 பேர்களுக்கு மேல் இருக்கிறார்கள். அதையும் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்றைக்குத் தேயிலைத் தோட்டத்தை எடுத்துக்கொண்டால், ஒரு எக்கருக்கு $1\frac{1}{4}$ ஆட்கள் இருக்க வேண்டுமென்று கணக்கிட்டிருக்கிறோம். 1,000 எக்கர்கள் உள்ள எஸ்டேட்டுகள் இருக்கின்றன. 1,000 எக்கர்கள் இருந்தால் குறைந்தது 1,250 தொழிலாளிகள் இருக்க வேண்டும். 1,000 பேர்களையோ, அல்லது 900 பேர்களையோ ரெஜிஸ்டரில் வைத்துக்கொண்டுவிட்டு, தேயிலை ஸீஸனில் டெம்பரரி லேபரர்ஸ் எத்தனை பேர்கள் வேண்டுமோ அத்தனை பேர்களை எடுத்துக்கொண்டு அவர்களிடம் வேலை வாங்கிக்கொண்டு, வேலை முடிந்த பிறகு விலக்கி விடுகிறார்கள். சட்டப் பிரகாரம் 1,250 பேர்களை ரெஜிஸ்டர் செய்ய வேண்டும். நடைமுறையில் 1,000 பேர்களை வைத்துக்கொண்டு, பாக்கி ஆட்களை டெம்பரரியாக வைத்துக்கொண்டுவிட்டு வீட்டுக்குப் போகச் சொல்லுகிறார்கள். ஏன் என்று கேட்டால், அவர்களுக்குப் போனஸ் கிடையாது, இரண்டு கம்பளி கொடுக்க வேண்டியதில்லை, மெடிகல் பெஸிலிட்டிஸ் கொடுக்கத் தேவையில்லை, ஆகையால், இது முதலாளிகளுக்குச் சாதகமாக இருக்கிறது. ஆகவே, டெம்பரரி ஆட்களை வேலைக்கு எடுக்கக் கூடாது என்று உத்தரவைப் போட்டுவிட்டால், தேயிலைத் தோட்டத் தொழிலாளிகளுக்கு ஒரு பெரிய வரப்பிரசாதமாக இருக்கும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். மந்திரி அவர்கள் இதைக் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக கிராச்சுயுடி. இப்போது மேஸ்திரிகளை நிறுத்தி விட்டார்கள். இப்போது தொழிலாளிகளுக்கு கிராச்சுயுடி கொடுத்து ஊருக்கு அனுப்புகிறோம். அந்தத் தொழிலாளி 30 அல்லது 35 ஆண்டுகள் அந்தத் தோட்டத்தில் வேலை செய்து வந்திருக்கலாம். உனக்கு 10 வருஷ ரெகார்டு தான் இருக்கிறது என்று சொல்கிறார்கள். எங்கே வேலை செய்தாயோ தெரியாது, ஆகையால் புரூப் கொண்டு வா என்று சொல்லுகிறார்கள். எங்கிருந்து அந்தத் தொழிலாளி புரூப் கொண்டு போவது? சூபர்வைஸரைக் கேட்கச் சொன்னால் கூட, அது போதாது, புரூப் வேண்டும், ரெகார்டு வேண்டும் என்று கேட்கிறார்கள். எந்த எஸ்டேட்டுக்குப் போனாலும் இது ஒரு பெரிய சிக்கலாக இருக்கிறது. எஸ்டேட்டில் 10 வருஷ ரெகார்டு தான் வைத்திருக்கிறார்கள். தொழிலாளி 30 வருஷம் வேலை செய்திருக்கலாம், ஆனால் அங்கே ரெகார்டு கிடையாது. மானேஜ்மெண்ட் வாங்கிய தேதியைக் கணக்கில் வைத்தோ அல்லது தொழிலாளியினுடைய ஸர்வீஸை வைத்தோ அவசியம் கிராச்சுயுடி கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

14th March 1959] [Sri K. Ponnian]

இரண்டாவதாக ஒரு எஸ்டேட் அடிக்கடி விலையாகி வருகிறது. ஒரு முதலாளி புதிதாக வாங்குகிறார். புதிதாக வாங்குகிற முதலாளி கிராச்சுயுடி கொடுக்கும் போது எந்தத் தேதியிலிருந்து வாங்கினாரோ அந்தத் தேதியிலிருந்துதான் கொடுக்க முடியும், அதற்கு முன்னால் தொழிலாளி ஸர்வீஸில் இருந்த தேதியிலிருந்து கொடுக்க முடியாது என்று சொல்லுகிறார்கள். வாங்கிய தேதியிலிருந்து கிராச்சுயுடி கொடுப்பது என்றில்லாமல் தொழிலாளியினுடைய ஸர்வீஸை வைத்து கிராச்சுயுடி கொடுக்க ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, எட்டு மணி நேர வேலை. இது முடிந்த பிற்பாடுதான் அரிசி போடும் வழக்கம் இருக்கிறது. மானேஜ்மெண்டார் அரிசியை மொத்தமாகக் கொள்முதல் செய்து, வாரத்திற்கு ஒரு முறை தொழிலாளருக்கு அரிசி கொடுத்து விடுகிறார்கள். இந்த நிலையில் இவர்களுக்கு எட்டு மணி நேர வேலை தான். எட்டு மணி நேரத்திற்குள்ளாக அரிசியைப் போடுவதா எட்டு மணி நேரம் கழித்து அரிசி போடுவதா என்ற பிரச்னை தலைவலியாக இருக்கிறது. சில மானேஜ்மெண்டார் செய்து விடுகிறார்கள். சில மானேஜ்மெண்டார் அப்படிச் செய்வதில்லை. வேலை முடிந்த பிற்பாடு தான் இதையெல்லாம் செய்வோம் என்று சிலர் சொல்கிறார்கள். இது சில எஸ்டேட்களில் பெரிய பிரச்னையாக இருக்கிறது. இதையெல்லாம் கனம் அமைச்சர் அவர்கள் கவனிக்கவேண்டும்.

டீ, காபி, கார்டமம் இவைகள் மலைத் தோட்டப் பயிர்கள். தேயிலைத் தோட்டத்தில் எக்கருக்கு $1\frac{1}{4}$ ஆள் கணக்கிலும் காப்பித் தோட்டத்தில் எக்கருக்கு ஒரு ஆள் வீதத்திலும் வைக்கிறார்கள். காபி எஸ்டேட்டிலே தேயிலை எஸ்டேட்டைக் காட்டிலும் வேலை அதிகம் தான். தேயிலை எஸ்டேட்டில் வேலை பார்க்கும் ஆளுக்கு கூலி ரூ. 1–11–6 ஆணுக்கு. காப்பி எஸ்டேட்டிலே ஒரு ஆளுக்கு ரூ. 1–9–0 கூலி. கேட்டால் லாபம் கிடையாது என்று சொல்கிறார்கள். ஆனால், உண்மையிலேயே லட்சக்கணக்கில் லாபம் சம்பாதிக்கிறார்கள். கனம் அமைச்சர் வால்பாறை வந்தபோது, போனஸ் விஷயமாக பிரச்னை எழுப்பப்பட்டபோது, முதலாளிகளை லாபக் கணக்கைக் கொடுக்க வேண்டுமென்று கேட்டார்கள். இன்னும்தான் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். முதலாளிகளைக் கேட்டால், ஸ்காட்லண்டு, இங்கிலாந்து மற்ற இடங்களில் கணக்கு இருக்கிறது என்று சொல்கிறார்கள். காபி எஸ்டேட் தொழிலாளிக்கும் கூலியை ரூ. 1–11–6 ஆக உயர்த்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

ப்ளாண்டேஷன் லேபர் இன்ஸ்பெக்டரும், மற்ற லேபர் ஆபீசர்கள் எல்லாம் பொள்ளாச்சியில் இருக்கிறார்கள். பொள்ளாச்சியிலிருந்து வால்பாறை 40 மைல் தூரம் இருக்கிறது. "காட்" ரோடு. ஆபீசர்கள் காலையிலே வந்து மாலையிலே திரும்புகிறார்கள். இந்த நேரத்தில் என்ன ஜோலியைக் கவனிப்பார்கள் என்று தெரியவில்லை. ப்ளாண்டேஷன் இன்ஸ்பெக்டரையும் லேபர் ஆபீசரையும் வால்பாறை பிராந்தியத்திலே குடியிருக்கும்படி கண்டிப்பாகச் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால்தான் தொழிலாளர்கள் அடிக்கடி அவர்களிடம் போய் குறையைச் சொல்வார்கள். ஆபீசர்களும் மானேஜ்மெண்டை உடனுக்குடனே சந்தித்து வேண்டிய நிவாரணத்தைத் தேடுவார்கள். ஆகையால் லேபர் ஆபீசர்களும் ப்ளாண்டேஷன் ஆபீசர்களும் அவசியம் வால்பாறையிலே குடியிருக்கும்படிச் செய்வது நல்லது என்று தோன்றுகிறது. அதை கனம் மந்திரி அவர்கள் கவனிப்பார்கள் என்று நம்புகிறேன்.

அடுத்தபடியாக, எங்களுக்கு இந்த போனஸ் பிரச்னை வேதனையைக் கொடுத்துக்கொண்டிருக்கிறது. 1957-வது வருஷத்துக்கு இடைக்கால நிவாரணமாக ஐந்து ஐந்து ரூபாய் கொடுத்தார்கள். 1957 முடிந்து 1958 நடந்துகொண்டிருக்கிறது. இன்னும் 1957-வது போனஸ் பிரச்னை தீர்ந்தபாடில்லை. நான் வால்பாறை திரும்பியவுடனே தொழிலாளர்கள் இதைத் தான் என்னைக் கேட்பார்கள். "அசெம்பிளியில் சொன்னீர்களா? மந்திரியைப் பார்த்தீர்களா? லேபர் கமிஷனரை பார்த்தீர்களா? எத்தனை ரூபாய் சாங்ஷன் பண்ணினார்கள்?" என்றெல்லாம் கேட்பார்கள். இது ஒரு பெரிய பிரச்னை. கனம் அமைச்சர் அவர்களுக்கு தொழில்

பிரச்னையைப்பற்றி நான் சொல்லவேண்டியதில்லை. தொழிலாளர்கள் எந்த நிலைமையிலே அங்கே இருக்கும் பிரதிநிதிகளைத் தொந்தரவு பண்ணுவார்கள் என்று சொல்லவேண்டிய அவசியம் இல்லை. 1957-வது வருஷ போனஸ், இடைக்கால போனஸ் தான் வாங்கியிருக்கிறோம். முழு போனஸ் கொடுக்கப்படவில்லை. அதற்கு வழிவகை செய்து 1958-வது போனஸையும் சேர்த்து தீர்த்துக்கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு நான் சொல்லிய குறைகளையெல்லாம் அமைச்சர் அவர்கள் தீர்த்து வைப்பார்கள் என்று நம்புகிறேன். இந்தச் சந்தர்ப்பத்தைக் கொடுத்த சபாநாயகருக்கு நன்றியைத் தெரிவித்துக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

* **Sri N. R. THIAGARAJAN** : On a point of order, Sir, தொழிலாளர் சம்பந்தப்பட்ட ஒரு முக்கியமான மான்யத்தைப்பற்றி விவாதித்துக் கொண்டிருக்கும்போது கம்யூனிஸ்ட்டுத் தலைவரோ கம்யூனிஸ்டு மெம்பர்களோ சபையில் இல்லை. மற்றும் எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் முக்கியமாக இங்கே இல்லை.

**Mr. SPEAKER** : கம்யூனிஸ்டுக் கட்சியைச் சேர்ந்த கனம் அங்கத்தினர் திரு. வி. கே. கோதண்டராமன் அவர்கள் இப்பொழுது என்னிடம் பேசிக்கொண்டிருக்கிறார்.

**Sri N. R. THIAGARAJAN** : அவர்கள் வந்த பிறகு விவாதத்தை வைத்துக்கொள்ளலாம்.

**Mr. SPEAKER** : கம்யூனிஸ்டுக் கட்சி அங்கத்தினர்கள் மாத்திரம் தான் தொழிலாளர்களோடு சம்பந்தப்பட்டவர்களா ? அப்படிப்பட்டவர்கள் காங்கிரசிலே இல்லையா ? ஐ.என்.டி.யு.ஸி.-இல் இல்லையா ? தி.மு.க.-வில் இல்லையா ?

**Sri N. R. THIAGARAJAN** : திரு. பக்கிரிசாமி பிள்ளை அவர்கள் கூட இல்லை.

**Mr. SPEAKER** : இப்பொழுதுதான் போனார். வந்துகொண்டிருக்கிறார். திரு. சின்னதுரை இருக்கிறாரே.

(ஸ்ரீ வி. கே. கோதண்டராமன் எழுந்தார்.)

**Mr. SPEAKER** : நான் தான் சொல்லிவிட்டேனே. நீங்கள் என்ன சொல்லப் போகிறீர்கள் ?

**Sri. V. K. KOTHANDARAMAN** : காங்கிரஸ் தரப்பிலே 152 பேர்களில் பத்து பதின்மூன்று பேர் தான் இங்கே இப்பொழுது இருக்கிறார்கள். நண்பர் அவர்களுக்குக் கணக்குத் தெரியவில்லை போலும். எங்கள் கட்சியில் நான்கு பேர்களில் மூன்று பேர்கள் முனிசிபல் கவுன்சில் தேர்தல் சம்பந்தமாக போயிருக்கிறார்கள். மற்றவர்கள் ஊரில் இல்லை. நான் ஒருவன் தான் ஊரில் இருக்கிறேன். இங்கேயும் இருக்கிறேன்.

**Mr. SPEAKER** : இதெல்லாம் எதற்காகச் சொல்லவேண்டும் ? நான்தான் சொல்லிவிட்டேனே—நீங்கள் இங்கே இருக்கிறீர்கள் என்று.

* **Sri T. S. RAMASWAMY PILLAI** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தத் தொழில் மான்யக் கோரிக்கையைப் பொறுத்த அளவிலே சர்க்கார்க் கட்சித் தரப்பிலே ஒரு நண்பர் சொன்னார்—இங்கே தொழிலாளர்பற்றிய மான்யம் விவாதத்தில் இருக்கும்போது அதிகமான அங்கத்தினர்கள் இல்லையே என்று. உண்மையிலேயே அது வருந்தத் தக்க விஷயந்தான். ஆனால், நான் நினைக்கிறேன் தொழிலமைச்சராக இருக்கக்கூடியவர் அனுபவத்திலும் அனுதாபத்திலும் அறிவிலும் ஆற்றலிலும் மிகச் சிறந்து விளங்கக்கூடியவர் ; ஆகையால் தொழிலாளர்களுடைய பிரச்னைகள் அவருக்கே நன்றாகத் தெரியும் என்ற காரணத்தினால் அதிகமான அங்கத்தினர்கள் இங்கு இல்லையோ என்று. அது ஒரு காரணமாக இருக்கலாம். அல்லது வேறு காரணங்களும் இருக்கலாம்.

14th March 1959] [Sri T. S. Ramaswamy Pillai]

அவர்கள் சமர்ப்பித்த அறிக்கையிலும் சரி, சென்ற இரண்டு ஆண்டுகளாக தொழில் மந்திரி நடந்துகொண்டுவரக்கூடிய முறையிலும் சரி, அவர் பல நல்ல காரியங்களைச் செய்திருக்கிறார் என்பதை நான் ஒத்துக்கொள்கிறேன். குறிப்பாக, பல நல்ல சட்டங்கள் இந்த மன்றத்திலே நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. உதாரணமாக, பிரசவ கால லீவ், பிரசவ கால அலவன்ஸ், ஹோட்டல் தொழிலாளர்களுக்கென சட்டம் இதுபோன்ற முன்னேற்றமான சட்டங்களை எத்தனையோ நிறைவேற்றியிருக்கிறார்கள். இன்னும் அதுபோன்று பல முன்னேற்றமான சட்டங்களையும் அவர் கொண்டுவர வேண்டியிருக்கிறது.

குறைந்தபட்ச சம்பளத்தைப் பொறுத்தவரையில் சட்டத்தின் அட்டவணையில் பல தொழில்கள் சேர்க்கப்பட இருக்கின்றன. உதாரணமாக நம் ராஜ்யத்திலே ஆலோசனைக் கமிட்டி கூடி, 16 தொழிற் துறைகளிலுள்ள தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச சம்பளம் நிர்ணயிக்கப்பட வேண்டுமென்று கூறியிருப்பதாக இங்குள்ள அறிக்கை கூறுகிறது. உப்பளத் தொழிலாளர்களைப் பொறுத்த அளவில் அவர்களுக்கு முக்கியமாக குறைந்தபட்சச் சம்பளம் உடனடியாக நிர்ணயிக்கப்படவேண்டும்.

அதேபோல், விவசாயத் தொழிலாளர்களை எடுத்துக்கொண்டால், நம்முடைய ராஜ்யத்தில் அவர்கள் பெருவாரியாக இருக்கிறார்கள். குடிசைகளிலே வாழக்கூடிய கோடானுகோடி விவசாயத் தொழிலாளர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு இன்றைய தினம் குறைந்தபட்ச சம்பளம் நிர்ணயிக்கவேண்டுமென்று பல இடங்களிலிருந்து கோரிக்கைகள் வந்துகொண்டிருக்கின்றன. நம்முடைய சட்ட சபையிலும் எல்லாக் கட்சிகளும் கூறியாய்விட்டது. இப்பொழுது அதை நிறைவேற்றுவதற்காக முன் வருகிறோம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அதைப்பற்றி நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். பாராட்டுகிறேன். அதை எவ்வளவு சீக்கிரமாகக் கொண்டுவரமுடியுமோ அவ்வளவு சீக்கிரமாகக் கொண்டுவரவேண்டுமென்று நான் வற்புறுத்திக் கூற ஆசைப்படுகிறேன். அதைப்பற்றி சில சந்தேகங்கள் இருந்தன. நோடிபிகேஷன் பண்ணிவிட்டாலும் நடைமுறையில் கொண்டுவருவது சிரமமான காரியம் என்பதையும் நான் ஒத்துக்கொள்கிறேன். சில ராஜ்யங்களில்கூட நடந்திருக்கிறது. நடைமுறையில் நடத்திக்கொண்டு வருகிறார்கள் என்பதை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். எவ்வளவு சிரமம் இருந்தபோதிலும் அதற்கான கமிட்டிகள் நியமித்து அதை அமுல் நடத்தவேண்டுமென்று வற்புறுத்திக்கூற ஆசைப்படுகிறேன். இங்கு சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கையிலே கூட சீக்கிரம் கொண்டுவருவதற்கு அரசாங்கம் ஆலோசித்துக் கொண்டிருப்பதாகவும் வெகு சீக்கிரத்தில் குறைந்தபட்சச் சம்பளம் நிர்ணயிக்கப்படும் என்று அறிந்து நாங்கள் சந்தோஷப்படுகிறோம்.

உப்பளத் தொழிலாளர்களைப் பொறுத்தவரையில் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் இன்று அவதியிலே இருக்கிறார்கள். அந்தத் தொழில் மிக லாபகரமாக உள்ள தொழில். அது இன்று க்ஷீணித்துக் கொண்டு வருகிறது. அந்தத் தொழிலாளர்களுடைய நிலைமை நாளுக்கு நாள், மிகவும் கேவலமான நிலைமையில் போய்க்கொண்டிருப்பதும் அவர்களுடைய சம்பளம் மிகவும் குறைந்திருப்பதும் தெரிந்ததே. அதனால் அவர்களுக்கு கூட்டாக பேரம் நடத்தக்கூடிய நிலைமை (கலெக்டிவ் பார்க்கெயினிங் பவர்) இல்லாமல் இருக்கிறது. சாதாரண விவசாயத் தொழிலாளர்களைப் போலவே இவர்களும் இருக்கிறார்கள். நோடிபிகேஷன் செய்யப்பட்ட 16 தொழில் துறைகளில் உப்பளத் தொழிலாளர்களும் கூட வருகிறார்கள் என்று அறிகிறேன். அவர்களைப் பொறுத்தும் உடனடியாக கமிட்டி ஏற்படுத்தவேண்டும். இதற்குமுன்னால் கன்யாகுமரி ஜில்லாவில் ஒரு மினிமம் வேஜஸ் கமிட்டி இருந்து, அது ரிப்போர்ட் சமர்ப்பிப்பதற்கு முன்னால் ரீ-ஆர்க்கனைசேஷன் வந்துவிட்டது. ஆகையால், இன்றையதினம் கன்யாகுமரி ஜில்லாவில் உப்பளத் தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச கூலி நிர்ணயிக்கவேண்டுமென்று ஏங்கிக்கொண்டிருக்கிறார்கள். அதையும் வெகு சீக்கிரமாகக் கொண்டுவரவேண்டுமென்று மிகவும் பணிவுடன் வேண்டிக்கொள்கிறேன்.

[Sri T. S. Ramaswamy Pillai] [14th March 1959

அடுத்தது போனஸ் விஷயம். சில ராஜ்யங்களில் போனஸை "டெபர்ட் வேஜ்" என்று அவர்கள் எற்றுக்கொண்டிருக்கிறார்கள். ஆகையால், தொழிலாளர்களுக்கு போனஸ் நிச்சயமாக கிடைக்கும் என்ற நிலைமை, ஒரு வருஷம் கழிந்துவிட்டாலும் நிச்சயமாகக் கிடைக்கும் என்ற நிலைமை இருக்கிறது. அதைப்பற்றி இரண்டுவிதமான கருத்து இருக்கிறது. லாபத்தில் பங்கு என்பது ஒன்று. மற்றொன்று சம்பளமாகக் கருதப்பட்டு பின்னால் கிடைக்கக்கூடிய சம்பளம் என்ற நிலைமை இரண்டாவது.

அது எப்படி இருந்தபோதிலும் பின்னால் சம்பளம் கிடைக்கும் என்று இருக்கிறார்கள். முக்கூட்டு கமிட்டி போட்டு அதை நிர்ணயிப்பதற்கு முன்னால் இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன்னால் என்ன கொடுத்திருக்கிறார்கள் என்பதை கண்டு பிடித்து அந்த முறையில் கொடுத்தால் நன்மையாக இருக்கும். ட்ரான்ஸ்போர்ட் தொழிலாளர்கள் பொறுத்த அளவில் இதனால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். கன்யாகுமரி ராஜ்யத்தில் இதற்கு முன்னால் தொழிலாளர்கள் போனஸ் வாங்கிக்கொண்டு வந்தார்கள். ஆனால் இங்கே கொடுக்கப்படவில்லை. இங்கே இருக்கிறவர்களுக்கு குறைந்த பட்சம் ஒரு மாதமாவது கொடுக்க முன் வரவேண்டும். அப்படி இல்லாமல் இருப்பதால் அவர்களுக்கு நிச்சயமாக மன வருத்தம் இருக்கும். ஆகவே அவர்களுக்கு மன வருத்தம் எற்படாத நிலைமையில் அவர்களுக்கும் கொடுக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். அந்த முறையில் அந்த முறையைக் கையாள வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதே போன்று வேலை நிர்ணயத்தைப்பற்றி, ஆக்ஸிடெண்டை பொறுத்த மட்டில், என்போர்ஸ்மெண்ட் அப் லாஸ் பொறுத்த மட்டில் பார்க்கும்போது சென்ற மூன்று வருஷங்களாக "லாஸ் அப் மான் டேஸ்" நிறைய வளர்ந்து கொண்டே வருவதைப் பார்க்கிறோம். ஆக்சிடெண்டையும் பார்க்கும்போது அது வளர்ந்துகொண்டே இருப்பதைப் பார்க்கிறோம். "மான் டேஸைப்" பார்த்தால், **1956**-ல் நான்கு லட்சத்தி இருபத்தி ஓராயிரமும், **1957**-ல் எழு லட்சத்தி இருபத்தி இரண்டு ஆயிரமும், **1958**-ல் எழு லட்சத்தி தொண்ணூற்றி இரண்டு ஆயிரமும் இருக்கிறது. இதைப் பார்க்கும்போது எவ்வளவு நாட்கள் தொழிலாளர்கள் வேலை செய்யாத நாட்கள் இருப்பதைப் பார்க்கிறோம். இதை நீக்குவது அரசாங்கத்தினுடையவும், தொழிலாளர்களுடைய பிரதிநிதிகளுடையவும் கடமையாகும். ஆகவே இதில் அதிகப்படியான கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

மற்றுமொரு விஷயத்தைப்பற்றி நாம் ஒன்று கவனிக்க வேண்டும். தொழிலாளர்களுடைய இயக்கம் பல வருஷங்களாக நடைபெற்று வருகிறது. அகில இந்திய தலைவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து தொழிலாளர்களுக்கு நன்மை செய்யவேண்டுமென்ற அளவில் துப்பாக்கி முனையில், தடியடி மத்தியில் பல போராட்டங்களை நடத்தி ரத்தம் சிந்தி தொழிலாளர்கள் இயக்கம் நடத்தி சங்கங்களை அமைத்துக்கொள்வது என்று எற்பாடு செய்தார்கள். அப்படி வெற்றி கண்டதன் பயனாக சில உரிமைகளைப் பெற்றார்கள். அப்படி வெற்றி கண்டு சங்கங்களை அமைத்துக்கொண்டிருக்கிறார்கள். இதை கனம் அமைச்சர் அவர்களே ஒத்துக்கொள்ளுவார் என்றே நினைக்கிறேன். அப்படி இருந்தும் இன்றைய நிலைமையைப் பார்த்தால் தொழிலாளர்கள் முதலாளிகளுடைய தயவில் நிற்கவேண்டியதாக இருக்கிறது. அந்த நிலைமைதான் இன்றைக்கு இருக்கிறது. தொழிலாளர்கள் முதலாளிகளுடைய அனுதாபத்தில் இருக்க வேண்டியதாக இருக்கிறது. இந்த நிலைமையை நீக்குவதற்கு இன்றைக்கு ஒரு சட்டம் இல்லை என்றால் தொழிலாளர்களுடைய சங்கம் ஒன்றும் செய்ய முடியாது. தொழிலாளர்கள் ஒன்று சேருவதற்கு வேண்டிய உரிமை இருக்க வேண்டும். அப்படிப்பட்ட உரிமை இருந்தால்தான் அவர்களுடைய சங்கம் வளர்ந்து வரக்கூடும். தொழிலாளர்களை இஷ்டப்படி வேலையை விட்டு நீக்கக்கூடிய அளவில் இருக்கக்கூடாது. தொழிலாளர்களுக்கு பாதுகாப்பு அளிக்கக் கூடிய நிலைமையில் சட்டம் இருக்கவேண்டும். ஆனால் இப்பொழுது அரசாங்கம் அப்படிப்பட்ட சட்டங்களை இயற்றும் நிலையில் இல்லாமல் இருக்கிறார்கள். சட்ட பூர்வமாக ஒன்றும் செய்ய முடியாத நிலையில் சர்க்கார்

14th March 1959] [Sri T. S. Ramaswamy Pillai]

இன்று இருக்கிறார்கள். இதற்கு ஒரு உதாரணம் கூட சொல்லலாம். சென்னை நகரில் இதைப்பற்றிய ஒரு நிகழ்ச்சி நடந்தது. அதாவது வொர்க்கிங் ஜெர்னலிஸ்ட் அசோசியேஷன், பத்திரிகை தொழிலாளர்கள் சம்பந்தமானது. ஹிந்து ஆபீஸ் பற்றியது என்று கருதுகிறேன். (கனம் சபாநாயகரைப் பார்த்து) மன்னிக்க வேண்டும். குறிப்பிட்டவரைப்பற்றி சொல்லுவதற்கு. ஹிந்து ஆபீசில் ஒரு சங்கத்தின் காரியதரிசியை வேலையை விட்டு நீக்கிவிட்டார்கள். டிஸ்மிஸ்கூட செய்து விட்டார்கள். அவர் ஒரு தொழிற்சங்க காரியதரிசியாக இருந்ததால் அவரை டிஸ்மிஸ் செய்து விட்டார்கள். அதற்கு பரிகாரம் தேடிக்கொள்ள முடியாத நிலையில் இருந்தார். அந்த நிலைமை மாறவேண்டும். தொழிற்சங்கங்களுக்கு வேண்டிய உரிமை இருக்கவேண்டும். இப்பொழுதுள்ள நிலைமையில் அவர்களுக்கு வேண்டிய உரிமை இல்லாமல் இருக்கிறது. அந்த அடிப்படையில் சட்டத்தை மாற்றி அமைக்க வேண்டியதாக இருக்கிறது. சங்கம் வைத்துக்கொண்டாலும் ஒன்றும் செய்ய முடியவில்லை. இப்படிப்பட்ட சங்கங்களுக்கு பாதுகாப்பு கொடுக்க வேண்டியது அரசாங்கத்தினுடைய கடமை. தொழில் சங்கங்கள் நல்ல முறையில் அமையவேண்டும். அதற்கு வேண்டிய சட்டங்களையும் திருத்தி அமைக்க வேண்டும். இதற்கு டாப் ப்ரையாரிட்டி கொடுக்கவேண்டும். இண்டஸ்ட்ரியல் டிஸ்ப்யூட்ஸ் ஆக்ட் ஸ்டாண்டிங் ஆர்டர் ஆக்ட் இவைகள் நல்லமுறையில் நடைபெறுவதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். அந்த முறையில் சட்டத்தை திருத்தி அமைக்க வேண்டும். இந்த வருஷம் இந்தச் சட்டசபையில் அப்படிப்பட்ட திருத்தச் சட்டம் கொண்டுவந்து நிறைவேற்றினாலும் சரி, இல்லாவிட்டால் அடுத்த கூட்டத்திலாவது சீக்கிரமாகக் கொண்டு வந்து நிறைவேற்றும்படியாக மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக "பார்ட்டிஸிபேஷன் இன் தி மானேஜ்மெண்ட்." அதாவது தொழிலாளர்கள் மானேஜ்மெண்டில் பங்கு கொள்ள வேண்டும் என்பது. இந்த முறையையும் நாம் கொண்டு வர வேண்டும். இதை நடை முறையில் கொண்டு வருவதற்கு பரீட்சார்த்தமாக இரண்டு இடங்களில் நடைமுறைக்குக் கொண்டு வந்து பரீட்சை செய்து பார்க்கப்பட்டிருக்கிறது. முதலாவதாக சிம்சன் க்ரூப் கம்பெனியிலும், இரண்டாவதாக ட்ரான்ஸ்போர்ட்டிலும் கொண்டு வந்தார்கள். இவைகளில் தோல்வி அடைந்திருப்பதாகத் தெரிய வருகிறது. காரணம் தொழிலாளர்களுக்கும் மானேஜ்மெண்டுக்கும் கருத்து வேற்றுமை இருந்த காரணத்தால் அது தோல்வி அடைந்ததாகத் தெரிய வருகிறது. கனம் அமைச்சர் அவர்கள் இதில் தலையிட்டு சில யோசனைகளைக் கூறியிருக்கிறார். அந்த யோசனைப்படி அது நல்ல முறையில் நடைபெற வேண்டும் என்று நான் பிரார்த்தித்துக் கொள்ளுகிறேன். இது நல்ல முறையில் நடைபெறவேண்டும். இதையே மற்ற ராஜ்யங்களிலும் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். நமக்கு எல்லா வசதிகளும் இருக்கின்றன. அந்த வசதிகளை பயன்படுத்திக்கொண்டு இதை நல்ல முறையில் நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டும். தொழிற் சங்கங்கள் நல்ல முறையில் நடைபெறுவதற்கு வசதி செய்து கொடுக்க வேண்டும். அதற்கு மதிப்பு கொடுக்க வேண்டும். இங்கே சகல வசதிகளும் இருக்கின்றன. இங்கே தொழில் துறையில் இருக்கிற அமைச்சருக்கு இது விஷயமாக நல்ல அனுபவம் இருக்கிறது. ஆற்றல் படைத்தவராக இருக்கிறார். அதனால்தான் இங்கே அதை நல்ல முறையில் நடைபெறுவதற்குக் கொண்டு வருவதற்கு வசதி இருக்கிறது. அவருடைய யோசனையைக் கேட்டு நடந்தால் தோல்வி அடைய முடியாது. திருப்திகரமாக நடக்கும் என்று எதிர் பார்க்கிறேன். இதை நடைமுறைக்குக் கொண்டு வந்து இந்த அரசாங்கம் மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாக இருக்கவேண்டும்.

அடுத்தபடியாக ட்ரான்ஸ்போர்ட்டை எடுத்துக்கொண்டால் ஒரே வேலையை செய்யக்கூடியவர்களுக்கு ஒரேவிதமான சம்பளம் கொடுக்க வேண்டும். சென்னை நகரத்தில் நடைபெறுகிற ட்ரான்ஸ்போர்ட்டையும் கன்யாகுமரியில் நடைபெற்று வருகிற ட்ரான்ஸ்போர்ட்டைப் பார்த்தால் இது நன்றாகத் தெரிய வரும். கன்யாகுமரியில் இரண்டு மூன்று வருஷங்களாக ஒரே அடிப்படையில் கொடுத்து வருகிறார்கள். இங்கே சென்னை நகரில் விலைவாசி அதிகமாக இருந்தாலும் இங்கே ட்ரைவர்களுக்குக் கொடுக்கக்கூடிய சம்பளம்

40 முதல் 60 வரையிலும் கண்டக்டர்களுக்கு கொடுக்கக் கூடிய சம்பளம் 30 முதற்கொண்டு 45 வரையில் கொடுக்கிறார்கள். ஆனால் கன்யா குமரியில் அதே வேலை பார்க்கக்கூடியவர்களுக்கு இரண்டு மடங்கு கொடுக்கிறார்கள். அதாவது ட்ரைவர்களுக்கு 50 முதற்கொண்டு 120 வரைக்கும், கண்டக்டருக்கு 40 முதற்கொண்டு 100 வரையிலும் கொடுக்கிறார்கள்.

THE HON. SRI R. VENKATARAMAN : அங்கே புதியதாக வருகிற வர்களுக்கு இங்குள்ள இதே ஸ்கேல்படிதான் அவர்களுக்கும் கொடுக்கப்படுகிறது.

SRI T. S. RAMASWAMY PILLAI : சென்னை நகரத்தில் கொடுக்கக்கூடிய முறைப்படி புதியதாக வரக்கூடியவர்களுக்கு கொடுக்கப்படுகிறது என்று சொல்வதால் அவர்களுக்கு குறைவாக இருக்கிறது. அதனால் அவர்களுக்குள் மனக் கசப்பு ஏற்படுகிறது. இந்த நிலைமை இருக்கக்கூடாது. ஒரே வேலையைச் செய்யக்கூடியவர்களுக்கு ஒரே மாதிரியாக சம்பளம் கொடுக்கப்பட வேண்டும். இல்லா விட்டால் தொழிலாளர்களுடைய மத்தியில் மனக்கசப்பு ஏற்படுகிறது. அப்படி ஏற்படுத்தாமல் இங்கே இருக்கிறவர்களுக்கும் அதிகப்படியான சம்பளம் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

*SRI K. ANBAZHAGAN : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, தொழிலாளர்களுக்கான இலாகாவைப் பொறுத்து வழங்கப்படுகிற மானியத்தை யொட்டி கொடுக்கப்பட்ட வெட்டுப் பிரேரேபணையை ஆதரித்து நான் சில வார்த்தைகளை மொழிய விரும்புகிறேன். தொழிலாளர்களுடைய நலத்தை பாதுகாக்க வேண்டிய பொறுப்பு இந்தத் காலத்தில் அரசாங்கத்திற்குத்தான் என்பதையும் தனிப்பட்ட முதலாளிகள் எந்த அளவு இதை உணர்ந்தவர்களாக இருந்தாலும் அவர்களுடைய நாணயத்தை நம்பி தொழிலாளர்கள் இருக்க மாட்டார்கள் என்பதை ஆளும் கட்சி உணர்ந்து இருப்பார்கள் என்றே கருதுகிறேன். தொழிலாளர்களுடைய நலனை பாதுகாக்க வேண்டுமென்ற கருத்தை ஆளும் கட்சியிலுள்ள தொழிலாளர்களுடைய இலாகா அமைச்சர் அவர்கள் மனதில் வைத்துக்கொண்டு அந்தப் பணியில் ஈடுபட வேண்டுமென்று வேண்டிக்கொள்ளுகிறேன்.

12 noon. அமைச்சர் அவர்கள் இந்த அளவு தொழிலாளர்களுடைய நலத்தைப் பாதுகாக்க வேண்டியவராக இருக்கிற காரணத்தால்தான் எதிர்க்கட்சித் தலைவர்கள் இந்த அமைச்சரிடத்தில் நல்ல நம்பிக்கை வைத்து "நாம் சில நேரத்தில் இங்கு இல்லாவிட்டாலும் அமைச்சர் அவர்கள் தொழிலாளர் நலத்தை நன்றாகக் கவனிப்பார்" என்ற காரணத்தினால்தான் இங்கு இல்லாதிருக்கக்கூடும். ஆனால் காங்கிரஸ் கட்சியில் இருக்கக்கூடிய கனம் தியாகராஜன் அவர்கள், அமைச்சரிடத்தில் போதுமான நம்பிக்கை இல்லாததன் காரணமாக எதிர்க்கட்சித் தலைவர் இல்லாத நிலைமையில் மானிய விவாதம் போய்க்கொண்டிருப்பதன் விளைவு வேறுவிதமாகப் போய்விடுமோ என்ற கவலையைத் தெரிவித்தார்கள். ஆனால் கனம் தியாகராஜன் இப்பொழுது சபையில் இல்லை. தொழிலாளர்களைக் கவனிக்க வேறு இடம் தேடிப் போயிருக்கிறார்கள் போலிருக்கிறது.

MR. SPEAKER : அவர் எல்லாத் தலைவர்களைப் பற்றியும் சொல்லவில்லை. கம்யூனிஸ்ட் கட்சித் தலைவரைப் பற்றி மட்டுந்தான் சொன்னார்.

SRI K. ANBAZHAGAN : இன்றைய தினம் சென்னை மாநிலத்தில் உள்ள தொழிலாளர்கள் எண்ணிக்கையில் எந்த அளவு வளர்ந்திருக்கிறார்கள் என்பதைப் பார்க்கும்போது அதையொட்டி இந்த நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் எந்த அளவு குறைந்திருக்கிறது என்பதை ஒருவாறு ஊகிக்கமுடியும். அந்த முறையில் அவர்கள் கணக்குப் பார்க்கும் போது தொழிலாளர்கள் தொழில் துறையில் ஈடுபடுத்தப்பட்டிருப்பது 1956–57ம் ஆண்டில் இருந்து ஒரே அளவில்தான் இருந்து கொண்டிருக்கிறார்கள் என்பதைத் தான் நாம் காண முடிகிறது. அதே நேரத்தில் தனிப்பட்ட சிறு வியாபாரத் துறையில் ஈடுபட்டிருக்கக்கூடிய ஊழியர்கள் ஒரு 5,000 பேர் அதிகப்பட்டிருக்கிறார்கள். 1957—58-ம் ஆண்டில் அமைச்சர் அவர்கள் சற்றுப் பெருமிதம் கொள்ளக்கூடிய விதத்தில் ஏறத்தாழ

14th March 1959] [Sri K. Anbazhagan]

25,000 பேர் தொழில் துறையில் புதிதாகச் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். புதிதாக 25,000 பேர் இந்த ஆண்டில் சேர்க்கப்பட்டிருந்தாலும் கூட அதே நேரத்தில் "ஷாப் அண்டு எஸ்டாபிளிஷ்மெண்ட்" என்று சொல்லக்கூடிய அந்த வகையில் ஏறத்தாழ 1,500 தொழிலாளர்கள் வேலை இழந்திருக்கிறார்கள். ஒரு பக்கத்தில் குறைகிறது. இன்னொரு பக்கத்தில் ஏறுகிறது. மொத்தத்தில் சராசரியாகப் பார்க்கும்போது 25,000 பேர்தான் ஒரு ஆண்டில் அதிகமாக வேலை பெற்றிருக்கிறார்கள். நம் நாட்டைப் பொறுத்தவரை—நான் தமிழ் நாட்டைக் குறிப்பிடுகிறேன் 300 லட்சம் மக்கள் இருக்கிறார்கள். அவர்களில் பெரும் பகுதியினர் விவசாயத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். விவசாயத் தொழிலில் ஈடுபட்டிருக்கிற காரணத்தினால் பலருக்குப் போதுமான வருவாய் வர வாய்ப்பில்லை. போதுமான வேலை கிடைப்பதற்கும் வாய்ப்பில்லை. **Insufficient work** என்று சொல்லக்கூடிய நிலையில் அவர்கள் கூலி போதாமல் திண்டாடுகிறார்கள். மொத்தத்தில் வேலை வாய்ப்பு இல்லாமல், கூலி இல் லாமல் திண்டாடிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் நல் வாழ்வு அளிக்கவேண்டியதாக அரசாங்கம் இருக்கும் நிலையில் இந்தத் தொழில் துறையில் ஆண்டுதோறும் 25,000 பேருக்கு வேலை வாய்ப்புக் கொடுத்தால் போதுமா என்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

தொழில் துறையில் 25,000 பேருக்கு 1957–58-ம் ஆண்டு புதிய வேலை வாய்ப்பு கிடைத்திருக்கிறது என்று கூறுவது நம்முடைய நாடு வளம் பெற்று வருவதாக அர்த்தம் இல்லை; வளர்ச்சியுற்று வருவதாக அர்த்தம் இல்லை. குறைந்தது ஆண்டு ஒன்றுக்கு லட்சம் பேருக்காவது வேலை கிடைக்கும்படியான அடிப்படையான திட்டத்தை அமைச்சர் அவர்கள் மேற்கொண்டாகவேண்டும். குறைந்தது ஒரு லட்சம் பேருக்காவது ஆண்டு தோறும் வேலை கிடைக்கும் வாய்ப்பு ஏற்பட்டால்தான் 50 லட்சம் பேராவது இந்தத் தொழில் துறையில் ஈடுபட கிட்டத்தட்ட 25 ஆண்டு காலம் ஆகலாம். முதல் ஆண்டில் ஒரு லட்சம் பேர் என்றால் வர வர தொழில் வளரு மானால் ஆண்டு ஒன்றுக்கு 2 லட்சம் பேர், 4 லட்சம் பேர் என்று தொழி லாளர் எண்ணிக்கை வளர்ந்து கொண்டே போகும். நெய்வேலித் திட்டம் ஒழுங்காக நிறைவேற்றப்பட்டு நாம் நினைக்கிற அளவுக்குப் பயன்படுகிற கால கட்டத்தை ஐந்தாண்டு காலத்திற்குள் உண்டாக்குவதன் மூலம், லட்சம் பேருக்கு மட்டுமல்ல—2 லட்சம், 4 லட்சம் என்று புதிதாக மக்களை இந்தத் தொழில் துறையில் ஈடுபடுத்தக்கூடிய நிலைமையை நம்முடைய அர சாங்கம் உண்டாக்கியாக வேண்டும்.

வேலையில்லாத் திண்டாட்டம் எந்த அளவுக்கு நம்முடைய நாட்டில் இருக்கிறதென்பதை நாம் கவனிப்போமானால்—எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ் சேஞ்சில் 1957–ம் ஆண்டில் பதிவு செய்து கொண்டவர்கள் எண்ணிக்கை 160,505 பேர். இவர்களால் வேலையில் வைத்திருக்கக் கூடியவர்களின் எண்ணிக்கை 24,168. கிட்டதட்ட 15 சதவிகிதம் பேருக்குத்தான் வேலை தேடித் தந்திருக்கிறார்கள். நான் குறிப்பாகச் சொல்வேன். இவ்வளவு பேருக்குக் கொடுத்திருக்கக்கூடிய வேலையில் நிரந்தரமாக வேலைகிடைத் வர்கள் மிகக் குறைவு. பெரும்பாலோர் 15 நாட்கள், 1 மாதம் வேலை பார்த்துவிட்டு அடுத்த 3 மாதத்திற்குள்ளாக மீண்டும் பதிவு செய்து கொள்ள வேண்டிய நிலையில் இருக்கிறார்கள். நல்ல வேளையாக 3 மாதத்திற்கு ஒரு முறை பதிவு செய்யவேண்டுமென்று சொல்லி இருக் கிறார்கள். அவ்வாறு அவர்கள் பதிவு செய்துகொள்ளவேண்டுமென்று கூறுவதற்குக் காரணம் வேலை கிடைத்தவர்கள் இங்கு தெரிவிக்காமல் போனால் பதிவு செய்து கொண்டுள்ள மற்றவர்களுக்குக் கஷ்டமாக இருக் கிறது என்பதுதான். ஆகவே அவர்கள் 3 மாதத்திற்கு ஒரு முறை வேலை கிடைக்காதவர்கள் பதிவு செய்து கொள்ளவேண்டுமென்ற சொல்லு கிற காரணம் சற்றுத் திறமையாகச் சொல்லப்படுகிறது என்று கருதுகிறேன் இங்கு பதிவு செய்துகொண்டு அவர்கள் மூலமாக வேலை கிடைப்ப வர்களுக்குப் பெரும்பாலும் நிரந்தரமான வேலை கிடைப்பதில்லை இடைக் கால வேலைகளாகத்தான் கிடைக்கிறது. 15 நாள், 1 மாதம் என்று தான் அரசாங்க சார்புடைய அலுவலகங்களில் கூட வேலை கிடைக்கிறது

[Sri K. Anbazhagan] [14th March 1959

ஆகவே அவர்கள் ஒரு மாத காலம் வேலை செய்துவிட்டுத் திரும்பி விடுகிற காரணத்தால் 3 மாதத்திற்கு ஒரு தடவை பதிவு செய்துகொள்ள வேண்டுமென்று வைத்திருக்கிறார்கள், என்று சொல்லலாம். அவர்கள் மூலமாக எவ்வளவு பேருக்கு நிரந்தரமாக வேலை கிடைத்திருக்கிறது என்பதைக் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளு கிறேன்.

1958-ம் ஆண்டில் எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்சு ஆபீசில் பதிவு செய்து கொண்டிருக்கிறவர்களின் எண்ணிக்கை **196,661**. அவர் களில் **26,730** பேருக்கு வேலை கிடைத்திருக்கிறது. **1957**-ம் ஆண்டை விட **1958**-ம் ஆண்டில் வேலை வாய்ப்பு தேடித் தரும் வாய்ப்பு குறைந் திருக்கிறது. வேண்டுமானால் அலுவலகங்கள் விரிவடைந்திருக்கலாம். பல இடங்களில் புதிதாக எம்ப்ளாய்மெண்ட எக்ஸ்சேஞ் ஆபீஸ்கள் அதிக மாகத் திறக்கப்பட்டிருக்கலாம். ஆனால் அதே நேரத்தில் **13·6** சத விகிதத்தினருக்குத்தான் அவர்கள் வேலை தேடித் தந்திருக்கிறார்கள். **1957**-ம் ஆண்டில் **15** சதவிகிதம் பேருக்கு வேலை தேடித் தந்திருக் கிறார்கள். ஆனால் **1958**-ம் ஆண்டில் **14** சதவிகிதம் கூட இல்லை. அதற்கும் குறைந்திருக்கிறது. அமைச்சர் அவர்கள் இதைத் தயை கூர்ந்து நோக்கவேண்டும். ஆண்டுதோறும் வேலை பெறுபவர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்தல் வேண்டும்.

எவ்வளவு பேர் பதிவு செய்து கொண்டிருக்கிறார்கள் ? எத்தனை பேருக்கு வேலை வாய்ப்பு கிடைத்திருக்கிறது? வேலை கிடைப்பவர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்திக் கொண்டு வந்தால்தான்—நான் சொல் வேன்—நிச்சயமாக நம்முடைய நாட்டில் நன்மை ஏற்பட முடியுமே தவிர, இந்த முறையில் குறைந்து போய்க்கொண்டிருக்கிறது என்று சொன்னால் நம்முடைய மாநிலத்தில் வேலை வாய்ப்பு தேடித் தருவதற்கான புதிய தொழிற்சாலைகள் போதுமான அளவுக்கு உருவாகவில்லை என்று தான் சொல்ல வேண்டும். இந்த நாட்டு மக்களுடைய சராசரி வருமான த்தை உயர்த்த நாம் தவறியிருக்கிறோம்.

இன்றையதினம் வேலை இல்லாதவர்கள் தொழிலாளர் வர்க்கத்தில் தான் மிகுதியாக இருக்கிறார்கள். தொழிலாளர் வர்க்கம், முதலாளி வர்க்கம் என்று பேசுவதை அரசாங்கம் விரும்பாவிட்டாலும், இந்த நாட்டில் அதிகமாக வேலை இல்லாமல் இருக்கக்கூடியவர்கள் தொழிலாளர் கள்தான். ஏழைகளிடையில் தொழிலாளர்களிடையில் 4 பேருக்கு வேலை இருந்தால் 4 பேருக்கு வேலை இல்லாத நிலைமைதான் இருக்கிறது. போதுமான ஊதியம் கிடைக்காமல் துன்பப்பட்டுக்கொண்டிருக்கிறவர்களே அந்த ஏழை மக்கள்தான். அந்த ஏழை மக்கள் வேலையில்லாமல் கஷ்டப்படுகிற காரணத்தினால்தான் நம்முடைய தேச சராசரி வருமானம் தேய்ந்துகொண்டே போகிறது. ஒரு தொழிலாளி சம்பாதிக்கக்கூடிய சம்பளத்தில் 2 ஆண்கள், 3 பெண்கள் என்று வாழவேண்டிய நிலைமையில் இருந்து கொண்டிருக்கிறது என்பதை அமைச்சர் அவர்கள் எண்ணிப் பார்க்கவேண்டும்.

வேலை வாய்ப்பு அதிகப்படச் செய்வது போலவே, வேலைக்குத் தக்க ஊதியம் கிடைக்கவும் வழி வகைகள் செய்யவேண்டும். இன்றையதினம் பல தொழில் துறையில் இருப்பவர்களுக்கு குறைந்தபட்ச கூலி தீர்மானிக் கப்பட்டிருக்கிறது. ஆனால் குறைந்த பட்சம் கூலி தீர்மானிக்கப்பட்டிருக்கிற காரணத்தால் சிலருக்கு நியாயமாகக் கிடைக்கவேண்டிய கூலி கிடைக்காமல் போய்விடுகிறது. குறைந்த பட்சக் கூலியை நிர்ணயிப்பது அரசாங்கத்தினுடைய கடமையாக இருந்தாலும் **(fair wage)** நியாயமான கூலி கிடைக்க அவ்வப்போது தக்க நடவடிக்கைகளை அரசாங்கமே மேற்கொள்ளவேண்டும். தொழிலாளர்களே அவர்களுடைய கூட்டுச் சக்தியால், முயற்சியினால் தாங்களே ஒரு சங்கம் அமைத்து வேண்டுகோள் அனுப்பினால் அவர்களுக்கு நியாயமான கூலி கிடைக்க வழி செய்கிறோம் என்பதைவிட எந்தெந்த நேரத்தில் "மினிமம் வேஜஸ்" குறைந்தபட்சக்கூலி இன்றைய வாழ்க்கைத் தரத்திற்குத் தகுந்தது என்று தோன்றுகிறதோ அந்தந்தத் துறையில் நியாயமான வழிவகைகளை அரசாங்கம் கண்டாகவேண்டும் என்று கேட்டுக்

14th March 1959] [Sri K. Anbazhagan]

கொள்ளுகிறேன். அதற்குள்ள முக்கியமான காரணம்—இந்த நாட்டைப் பொறுத்த வரை தொழிலாளர்கள் தாங்கள் சங்கங்களாகச் சேர்ந்து இயங்குவது என்பது எல்லாத் துறையில் இருப்பவர்களுக்கும் வழக்கமாக இல்லை. சில துறைகளில்—மில்களில் வேலை செய்பவர்கள், குறிப்பிட்ட சில தொழில் துறையில் இருப்பவர்கள் சங்கமாகச் சேர்ந்து பணியாற்றுகிறார்கள். அவ்வாறு சங்க அடிப்படையில் ஈடுபடாத பல ஆயிரக்கணக்கான தொழிலாளர்களுக்கு, பல லட்சக்கணக்கான தொழிலாளர்களுக்கு அரசாங்கந்தான் பாதுகாப்பு அளிக்கவேண்டும். சங்கம் மூலமாக அவர்கள் தங்கள் கோரிக்கைகளைக் கொண்டு வருவார்கள் என்று எதிர்பார்ப்பது சற்றுக் கடினம். அதே போல கடையில் ஊழியம் செய்பவர்களுக்கு அளிக்கப்பட்டிருக்கும் பாதுகாப்பு போதுமான அளவுக்கு இல்லை. அங்கே இருக்கக் கூடிய ஊழியர்கள் சிறிய அதிகாரிகள் மீது குறைபடுகிறார்கள் வேறு சில துறைகளில் பெரிய அதிகாரிகள் மீது குற்றம் கூறுகிறார்கள். ஆனால் இந்தத் துறையைப் பொறுத்தவரை தங்களுடைய உரிமை பறிபோவதைப் பற்றிவேதனையுற்று "ஷாப் இன்ஸ்பெக்டர் போதுமான அளவு எங்களைக் கவனிப்பதில்லை ; எங்களைக் கண்காணிப்பதில்லை ; முதலாளிகளின் கண்காணிப்பு அவர்களுக்குக் கிடைத்துவிடுகிற காரணத்தினால் கடைகளில் வேலை செய்கிற எங்கள் நிலைமையைக் கண்காணிக்க அவர்களுக்கு நேரமே இல்லை" என்று அவர்கள் சொல்லுகிறார்கள். அந்த நிலைமையை மாற்றியமைக்க வேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அமைச்சர் அவர்கள் ஒரு கருத்தை ஏற்கனவே தெரிவித்திருக்கிறார்கள். ஷாப் சிப்பந்திகள் ஒரு சங்கமாகச் சேர்ந்து தங்கள் உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டுமென்று சொன்னார்கள். சங்கமாக இருந்து பாதுகாப்புப் பெறுவது ஒரு வகையில் அவசியந்தான். ஆனால் சங்கம் என்ற ஒன்று இல்லாவிட்டாலும் கூட அந்த ஷாப் சிப்பந்திகளுக்கு அரசாங்கம் பாதுகாப்பு அளிக்கவேண்டியது அவசியம் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன். அதுபோல தொழிற்சாலைகளில் ஏற்பட்டிருக்கும் விபத்துக்களுடைய எண்ணிக்கையைப் பொறுத்த வரையில் 1955-ஆம் ஆண்டிலே ஏற்பட்டிருக்கக் கூடிய விபத்துகளைவிட ஏறத்தாழ இரண்டு மடங்குக்கு மேலே 1958-ஆம் ஆண்டிலே ஏற்பட்டிருக்கிறது. இதில்தான் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்பதை கொடுக்கப்பட்டிருக்கும் புள்ளி விவரங்களை—1955-ம் ஆண்டிலே ஏற்பட்ட விபத்து 7,395, 1956-ஆம் ஆண்டிலே 10,530, 1957-ஆம் ஆண்டிலே 13,721 என்று படிப்படியாக ஏறிக்கொண்டே வந்திருப்பது 1958-ஆம் ஆண்டிலே 16,577 ஆக உயர்ந்திருப்பதை ஆராய்ந்து அறிந்து கொள்ள முடிகிறது. இந்த அளவு வளர்ச்சி நான்கு ஆண்டுகளில், தொழிற்சாலைகளில் உள்ள தொழிலாளர்களின் எண்ணிக்கை வளரக் காணோம். புதுப் புது ஆலைகள் ஏற்படுவது இந்த அளவுக்கு வளரக் காணோம். விபத்துகளின் வளர்ச்சி அதிக அளவு பெருகியிருக்கிறது.

இதற்கு மூன்று காரணங்கள் இருக்கவேண்டும். ஒன்று, மில் முதலாளிகளின் அக்கறை தொழிலாளர்களைப் பொறுத்த வரையில் மிக அதிகமாகக் குறைந்திருப்பது ஒரு காரணமாக இருக்கலாம். இரண்டாவது இந்தத் துறையில் அதிகாரிகளின் கண்காணிப்பு குறைந்து விட்டது என்பது ஒரு காரணமாக இருக்கலாம். மூன்றாவது தொழிலாளர்களுக்கு தங்கள் வாழ்க்கையில் அக்கறை குன்றி வேதனை அதிகரித்திருக்கிறது என்பதையும் ஒரு காரணமாகக் கொள்ளலாம். தொழிலாளர்களுடைய வாழ்க்கையில் வேதனை குன்றி வாழ்வில் வெறுப்புத் தோன்றுவதைத் தடுப்பது ஜனநாயக சர்க்காரின் முதற் கடமை. அதிலும் மக்கள் நன்மையைக் கருதுகிற அந்தத் தொழிலாளர்களுடைய வாழ்க்கையிலே அதிக அக்கறை காட்டுவதற்கு எடுத்துக்காட்டாக இன்னும் திறமையாக அதிகாரிகள் மேற்பார்வையிடுவதற்கு திட்டவட்டமாக நடவடிக்கை எடுத்தால் இந்த விபத்துக்களை குறைக்கலாம். இன்னொன்று, இப்படி உயிரை இழந்த தொழிலாளர்களுடைய குடும்பத்திற்கு அதிகமான நஷ்ட ஈடு கொடுக்க வேண்டும் என்பதாக மில் முதலாளிகளை வற்புறுத்தினால் இப்படிப்பட்ட விபத்துக்கள் அதிகமாக ஏற்படாதவாறு அவர்களே தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடியும். மூன்றாவதாக தொழிலாளர்களுடைய வாழ்க்கையில் நாளுக்கு

[Sri K. Anbazhagan] [14th March 1959

நாள் பெருகி வருகிற வேதனையைக் குறைப்பதற்குத் தக்க நடவடிக்கையும் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று சொல்வேன். இந்த ஆலைகளைக் கண் காணிக்கிற அதிகாரிகள் யார் என்பது முக்கியமல்ல. இந்த அதிகாரிகள் தாங்கள் செய்ய வேண்டிய கடமையை நன்கு உணர்ந்து இவ்வாலைகளைச் சரியான முறையில் கண்காணிப்பு செய்வதற்கு வேண்டிய நடவடிக்கைகளை அமைச்சர் அவர்கள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இன்றைய தினம் தொழில் துறையில் தொழிலாளர்களுக்கும், முதலாளிகளுக்குமிடையே இருக்கிற உறவு முறை சீர்பெற்று வருகிறதென்று நான் கருதுவேன். மாணவர்களிடையேயும், தொழிலாளர்களிடையேயும் மாற்றுக் கட்சியினர் அதிகமாகத் தூண்டுதல் பிரசாரம் செய்வதன் காரணமாக ஒழுங்கு தவறியிருக்கிறார்கள் என்று அமைச்சர் அவர்கள் அடிக்கடி பேசி வருவதைப் பார்க்கிறோம். அப்படிப்பட்ட கருத்து தவறு என்று சொல்லிக்கொள்வேன். தொழில் துறையில் இன்று இருக்கிற உறவு அதிகமாகப் பாதிக்கப்படவில்லை. அப்படி பாதிக்கப்படாமல் இருப்பதற்குக் காரணம்—நாட்டு மக்களிடையே வளர்ந்திருக்கிற மனப்பான்மை—ஆளும் கட்சியனர் அதை ஒத்துக்கொள்ள விரும்பினாலும், விரும்பாவிட்டாலும்—எந்தப் போராட்டத்திலும் வேண்டுமென்றே ஈடுபடுவதில்லை. சில கட்சிகள் வேண்டுமென்றே தூண்டி விடுகிறார்கள் என்று சொன்னாலும் கூட போராட்டம் நடத்த வேண்டும் என்பதற்காக வேண்டுமென்றே தொழிலாளர்கள் யாரும் ஈடுபடுவதில்லை. தொழிலாளர்களைப் பொறுத்த வரையில் அந்த அளவு உறவைக் காப்பாற்றி வருகிறார்கள். ஆனால் அப்படிப்பட்ட அவசியம் ஏற்படவேண்டும் என்கிற நிர்ப்பந்தம் உண்டாகிறபோது கூட அவர்கள்—தொழிற்சங்க முறையில் இயங்குவதற்கு முன் வருகிறார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு கருத்தை வற்புறுத்திச் சொல்லிக் கொள்வேன். ஜனநாயகத்தை நாம் ஏற்றுக்கொண்டு செயல்படுகிற வரையில் ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம் தான் இருக்க வேண்டுமென்று வற்புறுத்த யாருக்கும் உரிமை கிடையாது. ஒரு தொழிலில் நூற்றுக்கு 51 பேர்களுக்கு மேல் தொழிலாளர்கள் இருக்கக் கூடிய ஒரு சங்கம் இருந்தால் போதும், அரசாங்கம் அவர்களை மட்டுந்தான் ஏற்றுக் கொள்வார்கள் என்கிற ஒரு கொள்கையை வகுத்திருக்கலாம். அந்தக் கொள்கை ஜனநாயக நாட்டில் தொழில் துறையில் எல்லோருக்கும் முழுவதும் ஒத்து வரும் என்று எனக்குப் புலனாகவில்லை. தொழிற்சங்கங்கள் அரசியல் கட்சிகளால் நடத்தப்படுகிற நிலைமை இருக்கிற வரைக்கும்—தொழிற் சங்கங்களை அரசியல் கட்சிகள் தங்களுக்குச் சாதகமாகப் பயன் படுத்திக்கொள்கிற நிலை இருக்கிற வரைக்கும்—நாட்டிலே ஜனநாயக அடிப்படையில் நிர்வாகம் திறம்பட நடப்பதற்கு ஒன்றுக்கு மேற்பட்ட கட்சிகள் இயங்க வேண்டியது அவசியம் என்கிற கொள்கையை ஒப்புக்கொள்கிற வரைக்கும் ஒரு தொழிலுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட தொழிற்சங்கம் இருக்கத்தான் செய்யும். நான்கு பேர்கள் ஒன்று சேர்கிற இடத்திலேயே நான்கு பேர்களுடைய அபிப்பிராயமும் வேறு வேறாக இருக்கும்போது—நூறு பேர்களுடைய தொழிற்சாலையில் 25 தொழிலாளர்களுக்காவது மற்றவர்களுக்கு இல்லாத தனிக்குறைகள் இருக்க முடியும். அவர்கள் தனியாகச் சேர்ந்து ஒரு சங்கத்தை அமைத்துக்கொள்வதற்கு அவசியம் இருக்க முடியும். இயற்கையாகவே அப்படிப்பட்ட வேறுபாடுகள் எதுவும் இன்றி ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம என்று அமையுமானால் அதை நான் வரவேற்கிறேன். அப்படி இல்லாத நிலைமையில் நூற்றுக்கு 25 தொழிலாளர்கள் ஒன்றாகச் சேர்ந்து ஒரு சங்கத்தை அமைத்துக்கொண்டாலும் கூட அந்தத் தொழிற் சங்கத்தையும் அரசாங்கம் அனுமதிக்க வேண்டுமே தவிர, அவர்களையும் கூப்பிட்டுக் கலந்து காரியங்களை செய்ய வேண்டுமே தவிர—சர்க்கார் ஒரு தொழிற் சங்கத்தைத்தான் அனுமதிப்பார்கள் என்றோ, நூற்றுக்கு 40 பேர்களுக்கு மேல் இருக்கக் கூடிய சங்கத்தைத்தான் அனுமதிப்பார்கள் என்றோ கொள்கையைக் காட்டி, கணக்கைக் காட்டி தொழிற் சங்கங்களைத் தடுக்கிறது என்று வருவது ஜனநாயகத்திற்கு உகந்தது அல்ல. அது தேவையும் அல்ல. வேண்டுமானால் சிறிது காலம் பொறுத்திருந்து அவர்களுடைய சர்வாதிகார ஆட்சி முழுதும் செயல்படுகிற நிலையை அடைந்தவுடன் செயல் படுத்திக்கொள்ள முடியும். அப்போது வேண்டுமானால்

14th March 1959] [Sri K. Anbazhagan]

அதை ஏற்றுக்கொள்ளுங்கள், அது வரையில் 25 பேர்களுக்குமேல் இருக்கக் கூடிய தொழிற் சங்கங்கள் ஒன்றுக்கு மேற்பட்டு இருந்தாலும் அதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

அதற்கு அடுத்து நான் தெரிவித்துக்கொள்வது இத்துறையில் முக்கிய மாக நல்லதொரு கொள்கை வகுக்கப்படவேண்டும். அவர்களுடைய ஊதி யம், அவர்களுக்குக் கொடுக்கிற படி இவற்றில் திட்ட வட்டமான கொள்கை வகுத்திருக்கவேண்டும். அவர்களுக்கு ஊதியம் உயர உயர வீணுகச் செல வழித்து விடுவார்கள் என்று ஆரம்பிக்கிற வாதம் எங்கே போய் முடிகிற தென்று பார்க்கையில்—தொழிலாளிக்கு ஒரு நியாயம் முதலாளிக்கு ஒரு நியாயம் என்ற அடிப்படையில் ஒரு கொள்கையில் ஏற்படுகிற முரண் பாட்டைத்தான் புரிந்து கொள்ள முடியவில்லையென்று சொல்வேன். நேற்றைய தினம் நிதி அமைச்சர் அவர்கள் பேசிய பேச்சு அப்படிப்பட்ட தொரு கருத்து தோன்றுவதற்குக் காரணமாக அமைந்தது என்று கூறிக் கொள்கிறேன். சாதாரணமாக தொழிலாளர்களுக்கு, ஊழியர்களுக்கு ஊதியம் உயர உயர அவை வீணுகிப் போய் விடுகிறது அது சேமிப்பு ஆகவில்லை என்று கருதுகிறுர்கள் என்றுல் அதே நேரத்தில் பெரிய பெரிய பஸ் முதலாளிகளும், மில் முதலாளிகளும் எவ்வளவு பணம் சேர்த்தாலும், கோடி கோடியாகக் குவித்தாலும் அது சேமிப்பாகத்தான் ஆகிறது என்று கருதுகிறுர்களா என்பதற்கு விளக்கம் தேவை. அவர்களிடத்திலே கோடிக் கணக்கில் சேர்கிற பணம் எந்த வகையில் இந்நாட்டில் பெருந்தொழில் களை வளர்ப்பதற்குத் துணை செய்கிறது, அரசாங்கத்தின் நல்ல லட்சியத்தை வளர்ப்பதற்கு எந்த வகையில் உதவி புரிகிறது என்று எனக்குப் புரிய வில்லை. நியாயம் என்று சொன்னுல் இத்துறையில் தலை நிலையில் இருக்கிறவர்களில் இருந்து, கடை நிலையில் இருக்கிறவர்கள் வரையில் ஒரு நிலையான கொள்கை பின்பற்றப்படவேண்டும். இடை இடையில் மாற்றம் இருக்கிறது என்றுல் அதை மாற்றம் என்று என்னுல் ஒப்புக்கொள்ள முடியாது. அது தடுமாற்றம்தான். இந்தத் தடுமாற்றம் இருக்கிற வரை யில்—ஏழைக்கு ஒரு நியாயம், பணக்காரனுக்கு ஒரு நியாயம், ஆலைத் தொழிலாளிக்கு ஒரு நியாயம், ஆலை முதலாளிக்கு ஒரு நியாயம், பஸ் கண்டெக்டருக்கு ஒரு நியாயம், முதலாளிக்கு ஒரு நியாயம்—என்று ஆளுக்கு ஒரு நியாயம், சந்தர்ப்பத்திற்கு ஒரு நியாயம் என்று பேசப் படுகிற வாதம் ஆளும் கட்சியினருக்குப் பொருத்தமாக இருக்கலாம். நாம் பேசுகின்ற இந்தத் தத்துவம் நாட்டு மக்களால் விரும்பப்படாதது, ஏற்றுக்கொள்ளப்படாதது என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

கடைசி வேண்டுகோள், இப்போது தொழிலாளர்களுக்கு வீடு கட்டித் தரவேண்டும் என்கிற திட்டத்தை இந்த அரசாங்கம் பல கோணத்தில் இருந்து நிறைவேற்றி வருகிறது. ஆனுல் அது போதுமானதாக இல்லை. சாதாரணமாக சென்னையில் இருக்கிற தொழிலாளர்களை எடுத்துக்கொண் டாலும்—சேரி ஒழிப்புத் திட்டத்தை எடுத்துக்கொண்டாலும்—தனியார் களுக்குக் கொடுக்கப்படுகிற கடன் தொகையை எடுத்துக் கொண்டாலும், ஸிட்டி இம்ப்ரூவ்மெண்டு டிரஸ்டை எடுத்துக் கொண்டாலும் இதற்காக ஒதுக்கப்படுகிற பணத்தில் போதுமான வேண்டிய காரியங்களை நிறை வேற்ற முடியாது. மத்திய சர்க்காரிடத்திலிருந்து இத்திட்டத்திற்கு அதிக மாகக் கடன் பெற்று உதவி செய்யவும் வேண்டும்.

அடுத்த ஆண்டிலே லைப் இன்ஷூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆப் இந்தியா கொடுக்கக் கூடிய பண உதவியைக்கொண்டு சில பல வீடுகள் கட்டும் உத் தேசம் இருப்பதாகக் கேள்விப்படுகிறேன். ஆனுல் லைப் இன்ஷூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆப் இந்தியாவினுல் எந்த அளவு நிதி இதற்காக ஒதுக்கப் படவேண்டுமென்று கேட்டால் நிச்சயமாகச் சொல்வேன், சென்னை நகரத் தையும் சேர்த்து தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில் ஏறக்குறைய 5 கோடி ரூபாயாவது ஒதுக்கப்படவேண்டும். அப்படி ஒதுக்கப்பட்டால் தான் சீக்கிரத்திலே இந்த வீடு கட்டும் திட்டமானது வெற்றி பெற முடியுமே தவிர இந்த ஆண்டிலே 20 லட்சம் ஒதுக்கினேம் என்றுலோ, 40 லட்சம் ஒதுக்கினேம் என்றுலோ, 700 வீடுகள் கட்டிக்கொடுத்தோம் என்பதாலோ, தொள்ளாயிரம் வீடுகள் கட்டிக் கட்டிக்கொடுத்தோம் என்ப தாலோ நாட்டு மக்களுக்கு திருப்தி ஏற்படப் போவதில்லை. தேவையும் பூர்த்தியாகப்போவதில்லை. இன்றைக்கு இந்தத்துறையில் ஒதுக்கப்படுகிற

[Sri K. Anbazhagan] [14th March 1959

பணம் போதாது. இன்னும் அதிகத் தொகையைக் கடனாகவோ, மானிய மாகவோ பெற்று இத்திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்ற வேண்டு மென்று கேட்டுக்கொண்டு நான் முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

* **Sri P. S. CHINNADURAI :** மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர் களே, நான் எண்ணிக்கொண்டிருக்கிற சோஷலிஸம் ஒரு நாளும் வரப் போவதில்லை என்று சர்க்கார் கட்சித் தலைவர் இந்த மன்றத்தில் குறிப் பிட்டிருப்பதை நான் மீண்டும் நினைவுக்குக் கொண்டு வர விரும்புகிறேன். இந்தக் கருத்திலே, இந்தச் சொற்களிலே முதலாளிகளின் சாயலை நான் நன்றாக உணர்கிறேன். சரிந்து கொண்டிருக்கிற முதலாளித்துவம் மீண்டும் தன்னைக் காப்பாற்றிக்கொள்வதற்கு எப்படிப்பட்ட முயற்சிகளையும் கையாள்வதற்குத் துணிந்திருக்கிற நிலையில்—இன்றைக்கிருக்கிற முத லாளித்துவம் விடுகின்ற எக்களிப்பை என்னால் அந்த வார்த்தைகளில் நன்றாக உணர முடிகிறதென்று நான் குறிப்பிட விரும்புகிறேன். இப்படிப் பட்ட நிலையில் சோஷலிஸ தத்துவத்தை ஏற்றுக்கொண்டிருக்கிறோம் என்கிற ஒரு சர்க்காரிடமிருந்து, எம்மாதிரியான நன்மைகளை—முன்னேற் றத்தை தொழிலாளர்கள் எதிர்பார்த்து பெற முடியும் என்பதைக் கேட்க ஆவலுறுகிறேன். ஏன் இவ்வாறு சர்க்கார் கட்சித் தலைவர் கூறினார் ?

ஏன் இவ்வாறு கூறுகிறார்கள். இது சாமானியமான விஷயம் அல்ல. தனியார் துறையில் தொழில்களுக்கு அதிகமான இடம் ஒதுக்கியிருக்கிறார் கள். எந்தத் தொழில் துறையை எடுத்துக்கொண்டாலும் தனியார் துறையை ஆரம்பிப்பதற்கு வசதி செய்து கொடுக்கிறோம், வாருங்கள் வாருங்கள் என்று வருந்தி வருந்தி அழைக்கிறார்கள். அவ்வாறு அழைக் கும்போது அவர்கள் இஷ்டம்போல் அந்தத் தொழில்களை ஆரம்பிக்கலாம். ஆனால் தொழிலாளர்கள் ஒன்று சேர்ந்து தம் உரிமையைக் கோர முடி யாது. இத்தகைய கொள்கை தொழிலாளர்களைச் சுரண்ட முதலாளி களுக்கு பச்சைக்கொடி காட்டுவதுபோல் இருக்கிறது. முதலாளிகள் சம் பந்தமாக என்ன கொள்கையை அனுசரிக்க வேண்டுமென்று பாரதப் பிரதமர் கூறியுள்ளார். சமீபத்தில் நடந்த தொழில்துறை மாநாட்டிலே பேசிய பாரதப் பிரதமர் நேரு அவர்கள் குறிப்பிட்டதை உங்கள் நினைவிற்கு கொண்டுவர நினைக்கிறேன். சர்க்கார் கட்சித் தலைவர் அவர்கள் இங்கு இல்லை. இதை நமது அமைச்சர் அவர்கள் அவர்களுக்கு எடுத்துரைப் பார் என்று நினைக்கிறேன்.

**'Vested interests progressively will have no place in this world and any vested interest which comes in the way of fellowman will have still less place. No one wants to attack any one's interest. But in India differences in wealth are terrible, even examples of conspicuous spending. We see differences in the spending capacities of the people. Now can any country, much less politically democratic country, tolerate all that '.**

இந்த வார்த்தைகளைப் பேசினார்கள்.

இம்மாதிரி தொழில் துறைகளை பொதுத்துறையில் ஒதுக்கியிருக்க வேண்டும். கூடியவரை தனியார் துறையில் இருக்கக்கூடாது. இதை எல்லாம் பார்க்கும்போது எல்லாம் புலனாகும். இரண்டாவது ஐந்தாண்டு திட்டத் திலே எந்தெந்தத் துறைகள் யார் யாருக்கு ஒதுக்கப்பட்டிருக்கின்றன. இன்னின்ன தொழிகள் செய்ய வேண்டுமென்று தீர்மானம் செய்யப்பட்டு இருக்கிறது என்று சொன்னார்கள். பஸ், லாரி போக்கு வரத்தை ராஜ்ய அரசாங்கம் நடத்த வேண்டுமென்ற கொள்கை வலியுறுத்திக் கூறப் பட்டிருக்கிறது. ஆனால் சர்க்கார் கட்சித் தலைவர் இங்கே பேசும்போது எவ்வளவு எடுத்துச் சொன்னாலும், போக்கு வரத்து சாதனங்களை சர்க்கார் நடத்துவதற்கில்லை என்றே கூறுகிறார்கள். அதற்காக பாரதப் பிரதமர் அளித்துள்ள பதிலை இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

14th March 1959] [Sri P. S. Chinnadurai]

**Mr. Nehru said: While there might be little fluctuation between production and consumption in some of the consumer goods, there could be no fluctuation in basic things like power, transport, etc. Private enterprise could not assure any such balance. Only planning in a scientific way could bring about the necessary balance. Basic industries would have to be developed in a planned and balanced way and not accidentally. All this could not come out of private fancy.**

புஸ் போக்கு வரத்தை அரசாங்கம் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று எதிர்க்கட்சியைச் சேர்ந்தவர்கள் வற்புறுத்துகிறார்கள். அதைத்தான் ஏற்றுக்கொள்ள மறுக்கிறார்கள் சர்க்கார். இப்போது சர்க்கார் கட்சித் தலைவர்' பாரதப் பிரதமர் குறிப்பிட்டதை என்னவாக எடுத்துக் கொள்ளப்போகிறார் என்று கேட்க விரும்புகிறேன். பாரதப் பிரதமர் குறிப்பிட்ட கொள்கையை ஏற்றுக் கொள்வதற்கில்லை என்று கூறப்போகிறாரா ? தொழில் மந்திரி அவர்களுக்கு முதலாளிகளிடம் அனுதாபம் மிகுந்துகொண்டே போகிறது. நான் பன்முறை கூறியிருக்கிறேன், எப்படிப்பட்ட தொழில் அமைச்சர் எப்படி மாறிக்கொண்டிருக்கிறார்கள் என்று. தவறான இடத்திலே கட்டிக் கொடுக்கப்பட்ட நல்ல பெண் புக்ககத்துக் கொடுமையை உணர்ந்தாலும்கூட வெளிப்படையாகக் கூறுவதற்கு இயலாதவளாக இருப்பதைப்போல், அவர் இருக்கிறார். தொழில் மந்திரியிடத்தில் உண்மையாகவே அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். தொழில்துறையை தனியார் துறைக்கே ஒதுக்கி இருக்கவேண்டுமென்று மூச்சுவிடாமல் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். அப்படிச் சொல்லிக் கொண்டிருந்தாலும்கூட தொழிற்சாலையை ஆரம்பிப்பதற்கு முதலாளிகள் மறுக்கிறார்கள். அலுமினியம் தொழிற்சாலையை ஆரம்பிப்பதற்கு தனியார் முன்வர மறுக்கிறார்கள். இருக்கும் தொழில்களையெல்லாம் அரசாங்கம் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று மக்கள் பெரிதும் எதிர்ப்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த நாளிலே சர்க்கார் என்ன செய்கிறார்கள் என்றால் பழைய தொழிற்சாலைகளை எல்லாம் ஏற்றுக்கொள்ளாமலிருப்பது மட்டும் அல்ல, புதிய தொழிற்சாலைகளையும் தனியார் துறைக்கே விட்டுவிடத் தயாராயிருக்கிறார்கள். என்ன உதவி வேண்டுமானாலும் செய்கிறோம் என்று கூப்பிடுகிறார்கள். ஆனால் அவர்கள் அதிக கிராக்கி பண்ணுகிறார்கள். பல தொழில்களை எப்படியாவது ஆரம்பிக்கவும் தொழிலாளர்களுக்கு இங்கு வேலை கொடுக்கவும் முயற்சி செய்துகொண்டுள்ளனர் முதலாளிகள். இந்த முயற்சிக்கு நாம் தடை போடாமல் முதலாளிகளுக்கே புதிய தொழில்களை ஒதுக்கிக் கொடுக்கவேண்டுமென்று சர்க்கார் கட்சித் தலைவர் காரணம் சொல்ல ஆரம்பிக்கிறார்கள். அப்படி ஒரு கொள்கையை அனுசரிப்பதன் காரணமாக எந்த அளவுக்கு முதலாளிகள் நம் ராஜ்யத்தில் உரம் பெற்று வருகிறார்கள் என்பதை சற்று கவனிக்க வேண்டும்.

தொழில் மந்திரி கொடுத்திருக்கும் தகவலைப் பார்த்தால் தொழில் தகராறுகள் இதே ஆண்டில் அதிகரித்திருப்பதை நாம் பார்க்கிறோம். முந்தைய ஆண்டில் **8,586** தொழில் தகராறுகள் இருந்தன. **1958**-ம் ஆண்டிலே **9,255** தொழில் தகராறுகள் ஏற்பட்டுள்ளன.

**THE HON. SRI R. VENKATARAMAN** : தொழிலாளர்கள் ரொம்ப விழிப்பாக இருக்கிறார்கள் என்று ஆகுமே தவிர தகராறு ஜாஸ்தியாக போய்விட்டது என்று அர்த்தம் அல்ல.

***SRI P. S. CHINNADURAI** : தொழில் தகராறு என்னவென்றால் ஒரு தொழிலாளி வேலையிலிருந்து நீக்கப்பட்டால் அந்தத் தொழிலாளியை எடுத்துக்கொள்ளவேண்டுமென்ற கோரிக்கை வருகிறது. தொழிலாளிகளுக்கும், முதலாளிகளுக்கும் உள்ள ஏற்றத்தாழ்வை குறைத்து ஒரு சுபிட்ச ராஜ்யத்தை ஏற்படுத்தவேண்டுமென்று சொல்லப்படுகிறது. **கூறப்படும்** வார்த்தைகளுக்கு ஏற்றவாறு நமது சிந்தனை **செயல்படுகிறதா ?** பண்டித நேரு அவர்கள் கூறுவதைக் **கேளுங்கள் :**

[Sri P. S. Chinnadurai] [14th March 1959

**'We get tied to dogmas and words and forget that in a changing world, ideas change, conditions change and we change with it and yet our minds are locked up in prison.'**

சமதர்மம் தன்னுடைய கொள்கை என்று கூறுகிறபோது வாய்தான் அவ்வாறு கூறுகிறதே ஒழிய, நிதி அமைச்சருடைய எண்ணம் சிறைப் படுத்தப்பட்டிருக்கிறது என்று நான் கூறுகிறேன். முதலாளிகளுக்கு அதிகப்படியான சலுகை கொடுத்திருக்கிறார்கள். அந்த அளவு முதலாளிகள் வளர்ந்துபோயிருக்கிறார்கள். இதற்கு பிளீச்சிங் பாக்டரி ஒரு சரியான எடுத்துக்காட்டாகும். தொழில் மந்திரி என்னவெல்லாம் செய்யமுடியுமோ அதை சுமுகமாக செய்ய முயற்சி எடுத்துக்கொண்டார். இதைச் சுமுகமாக தீர்த்து வைப்பதற்கு தொழிலாளர்களுக்கு மீண்டும் வேலை வாய்ப்பு ஏற்படுத் திக் கொடுப்பதற்காக என்னவெல்லாம் செய்ய வேண்டுமோ அந்த முயற்சி களெல்லாம் எடுத்துக்கொண்டார்கள். ஆனால் முடிவு என்ன? இதை
12-30 p.m. தொழில் மந்திரி அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். இந்த மன்றத்தில் இவ்வாறு அறிக்கை கொடுக்கப்பட்ட பிற்பாடுகூட முதலாளிகள் அழைக்கப் பட்டு அவர்களுக்கு மீண்டும் சொல்லப்பட்டது: "நீங்கள் நியாயமாக நடந்து கொள்ளுங்கள், தொழிலாளர்களை மீண்டும் வேலைக்கு எடுத்துக் கொள்ளுங்கள், சுமுகமாக நடந்து கொள்ளுங்கள்" என்று அவர்களுக்கு மீண்டும் சொல்லப்பட்டது. ஆனால் அவர்கள் அதையெல்லாம் ஏற்றுக் கொண்டார்களா? ஏற்றுக்கொள்ளவில்லை. அந்தத் தொழிலாளர்களுக்கு மீண்டும் வேலை கிடைக்கச்செய்ய, இந்த ராஜ்ய அமைச்சர்களில் செல்வாக்குள்ள அமைச்சர்கள் என்று சொல்லப்படும் அமைச்சர்கள் அத்தனை பேரும் முயன்று பார்த்தார்கள். இவர்கள் அத்தனை பேரும் முயல்வது என்பது மந்திரி சபை முழுவதுமே சேர்ந்து முயலுவது ஆகும் என்று நான் கருதுகிறேன். இவர்கள் அவ்வளவு யோசனைகளைச் சொல்லியும் முதலாளிகள் அவைகளை யெல்லாம் ஏற்றுக்கொள்ள மறுத்திருக்கிறார்கள் என்றால் அவர் களுடைய துணிச்சலை நாம் பார்க்க வேண்டும். எப்படிப்பட்ட காலகட்டத்தில் நாம் வாழ்கிறோம், எப்படிப்பட்ட நிலைமையில் முதலாளிகள் நமக்கு பதிலிறுத்து விட்டுப் போகிறார்கள் என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். சர்க்காரின் தொழில் இலாகா சம்பந்தப்பட்ட வரையில் எனக்குக் குறை இல்லை. அந்த இலாகாவினர் என்ன செய்ய முடியும் தங்களால் எவ்வளவு தூரம் முடியுமோ அவ்வளவு தூரம் அவர்கள் முயற்சி எடுத்துக்கொண்டிருக் கிறார்கள்.

(**Deputy Speaker in the Chair.**)

சட்டங்களின் வரம்பிற்குட்பட்டு மாத்திரமன்றி வரம்பிற்கு அப்பாற்பட்டும் அவர்கள் தொழிலாளர்கள் நலனுக்காகப் பாடுபட்டிருக்கிறார்கள். சில காரியங்களை, சமூக நீதிக்கொப்ப செய்ய வேண்டும் என்று மக்கள் கருதுகிறார்கள். அவைகள் சட்ட வரம்பிற்கு அப்பாற்பட்டவை. அப்படிப்பட்ட காரியங்களைச் செய்யவும் அவர்கள் முயன்றிருக்கிறார்கள். தொழில் அமைச்சர் முதல் தொழில் இலாகாவில் கீழேயுள்ள கடைசி அதிகாரி வரையில் இவ்வாறு நன்றாகப் பணியாற்றியிருக்கிறார்கள் என்று நான் கூறுவேன். அவர்கள் திறமையாகக் காரியங்களைச் செய்ய முற் பட்டிருக்கிறார்கள். நாம் அனுஷ்டிக்கும் தொழில் கொள்கையைத்தான் நான் குறை கூறுவேன். அது குறையுள்ளதாக இருக்கிறது. தொழில் கொள்கையின் விளைவுதான் இந்தப் பிரச்னைகள். இந்த சர்க்கார் அனுஷ் டிக்கும் தொழில் கொள்கையின் காரணமாகத்தான், இவர்களுடைய முயற்சிகளெல்லாம் வீணாகப் போகின்றன. முதலாளிகள் பிடிவாதமாக இருந்துவிட்டால் யாரும் அவர்களை அசைக்க முடியாது. அதற்கு இடம் கொடுக்கிறது நாம் அனுஷ்டிக்கும் தொழிற் கொள்கை. மேட்டுப்பாளையம் யூனைடெட் ப்ளீசர்ஸ் கம்பெனியின் போக்கு இந்த அரசாங்கத்திற்கு ஒரு அறைகூவல். அது இந்த அரசாங்கத்திற்கு மட்டுமன்றி இந்த ராஜ்ய மக்களுக்கும் ஒரு அறைகூவல். ஏனென்றால் இந்த அரசாங்கத்தின் அமைச்சர்கள் மக்களின் பிரதிநிதிகள். "நாங்கள் பெரும்பாலான மக்க ளால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். ஆகவே நாங்கள் எல்லோரும் மக்கள் பிரதிநிதிகள்" என்று கனம் அமைச்சர்கள் அடிக்கடி பெருமைப்பட்டு கொள்கிறார்கள். அவர்கள் அவ்வாறு மக்கள் பிரதிநிதிகள் என்று கூறு வது உண்மையானால், அது இந்த ராஜ்ய மக்களுக்கே ஒரு அறைகூவல்.

14th March 1959] [Sri P. S. Chinnadurai]

இந்த அரசாங்கம் தொழில்களைப் பெருக்க விரும்புகிறது. தொழில்களை பெருக்கும் விஷயத்தில் இந்த அரசாங்கம் 3 லட்சம் பேர்களாக இருக்கும் தொழிலாளர்களை நம்பவில்லை. மிகவும் குறைந்த எண்ணிக்கையிலுள்ள முதலாளிகளையே அரசாங்கம் இதற்கு நம்புகிறது. இந்த ராஜ்யத்தில் தொழிற்சாலை முதலாளிகள் ஆயிரம் பேர்கூட இல்லை. இன்னும் பார்த்தால், நமது ராஜ்யத்தில் பெரு முதலாளிகள் இன்னும் மிகக் குறைவாக இருப்பார்கள். அவ்வளவு குறைந்த எண்ணிக்கையிலுள்ள ஒரு சில முதலாளிகளுக்குச் சலுகை காட்ட வேண்டிய நிலைமையில், அவர்களுடைய ஒத்துழைப்பு இல்லாமல் போனால் தொழில்கள் வளராவோ என்ற அச்சத்தில் அவர்கள் சொல்வதற்கெல்லாம் அடிபணியும் நிலையில் இன்று இந்த ராஜ்ய சர்க்கார் இருக்கிறது. இந்த சர்க்கார் சமதர்மத்தில் நம்பிக்கை கொண்டிருந்தாலும், உண்மையிலேயே, முதலாளித்துவமே ஆளக்கூடிய நிலையை உண்டுபண்ணியிருக்கிறார்கள். நாளுக்கு நாள் அது வளர்ச்சியடைந்து வருகிறது. இவ்வாறு நான் கூறுவது மதிப்பிற்குறிய அமைச்சர்களுக்கு வருத்தமாக இருக்கலாம். உண்மையிலேயே இங்கே ஆட்சி நடத்துவது நீங்களா, உங்கள் கட்சியா, அமைச்சரவையா, அல்லது முதலாளிகளா என்று கேட்கிறேன். இங்கே ஆட்சி நடத்துவது உங்கள் அமைச்சரவை என்றால், மேட்டுப்பாளையம் யுனைடெட் ப்ளீசர்ஸ் கம்பெனியார் தொழிலாளர்களை மீண்டும் வேலைக்கு எடுத்துக்கொள்ள மறுத்த போது உங்களால் என்ன செய்ய முடிந்தது? முதலாளிகள் கண்ணீர் விட்டால் அரசாங்கத்திற்கு இரக்கம் ஏற்படுகிறது. ஒருவர் கண்ணீர் விட்டால், கண்ணீரைப் பார்த்தவுடன், இரக்கப்படுவது மனித இயல்புதான்.

**DEPUTY SPEAKER: The hon. Member has got only one minute.**

***Sri P. S. CHINNADURAI**: முதலாளிகள் விடும் கண்ணீரைப் பார்க்கும்போது நம் அமைச்சர்களின் உள்ளத்தில் இரக்கம் பிறக்கிறது. கண்ணீரைப் பார்க்கும்போது இரக்கப்படுவது மனித இயல்பு தான். அதை நான் ஒத்துக்கொள்கிறேன். ஆனால், முதலாளிகள் எதற்காகக் கண்ணீர் விடுகிறார்கள்? தொழிலாளர்களை வாட்டுவதற்காக; தொழிலாளர்களை மீண்டும் கசக்கிப் பிழிவதற்காக; தொழிலாளர்களை வேலையிலிருந்து நீக்கி தெருவில் நாய்களைப் போல் சுற்றச் செய்வதற்காக கண்ணீர் விடுகிறார்கள்; இதற்கெல்லாம் அனுமதி வேண்டும், இதற்கெல்லாம் எங்களுக்கு சுதந்திரம் வேண்டும் என்று முதலாளிகள் கண்ணீர் விடுகிறார்கள். அதைக் கண்டு நீங்கள் இரக்கப்படுகிறீர்கள். ஆனால், தொழிலாளர்கள் விடும் கண்ணீரைப் பார்த்து, தொழிலாளர்களின் குடும்பங்கள் விடும் கண்ணீரைப் பார்த்து நீங்கள் இரக்கப்படுகிறீர்களா? தொழிலாளர்களுடைய கண்கள், கண்ணீர் விடுவதற்கும் வகையற்றிருக்கும் நிலையில் இருக்கின்றன, அவைகள் அவ்வளவு வற்றிப் போயிருக்கின்றன; அவர்கள் அவ்வளவு மெலிந்திருக்கிறார்கள். நான் இவ்வாறு கூறுவது உண்மையா இல்லையா என்று பார்க்கவேண்டுமானால் என்னுடன் வாருங்கள், அவர்களைக் காட்டுகிறேன். தொழிலாளர்களுக்கு எவ்வளவு காலம் கொடுமை இழைத்திருக்கிறது; மேட்டுப்பாளையம் யுனைடெட் ப்ளீசர்ஸ் கம்பெனி; ஒரு இடத்தில் மட்டுமா தொழிலாளர்கள் கொடுமைப் படுத்தப்பட்டிருக்கிறார்கள்! அக்கொடுமையை அழிக்க உங்களுக்குத் தாம் இருக்கிறதா, திறன் இருக்கிறதா? இந்த ராஜ்யத்தை ஆளுவது நீங்களா, அல்லது மேட்டுப்பாளையம் யுனைடெட் ப்ளீசர்ஸ் கம்பெனி முதலாளியா? இக்கொடுமைகளை அழிக்கவும் தடுக்கவும் உங்களுக்கு செயல் திறன் இல்லையானால் இந்த சர்க்காரை நடத்துவதைக் காட்டிலும் தயவு செய்து, வெளியே வந்துவிடுங்கள் என்று உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். அவ்வாறு செய்துவிடுங்கள். இல்லாவிட்டால், தொழிற் சங்கங்கள் செய்வது, தொழிலாளர்கள் செய்வது, நியாயமானதல்ல என்று சொல்லிவிடுங்கள் அவ்வாறு சொல்லிவிட்டால் அதற்கப்புறம் அதைப் பற்றி நான் பேசவில்லை. தொழிலாளர்கள் செய்வது நியாயம் என நீங்கள் ஒத்துக்கொள்வது உண்மையானால், முதலாளிகள் செய்திருப்பது அநியாயம் என்று நீங்கள் ஒத்துக்கொள்வது உண்மையானால், தொழிலாளர்

[Sri P. S. Chinnadurai] [14th March 1959

களுக்கு நீதி வழங்கத்தக்க நியாயமான காரியங்களைச் செய்ய அதற்கான நடவடிக்கைகளை எடுக்க முன்வாருங்கள் என்று சொல்லிக் கொள்கிறேன். அத்தகைய காரியங்களைச் செய்ய உங்களுக்குத் திறன் இல்லாத வகையில் ஒரு தொழிற் கொள்கையை அனுஷ்டிப்பதை நிறுத்தும் வரையில், "நாங்கள் தொழில் இலாகாவை திறம்பட நடத்துகிறோம், எங்கள் அனுதாப மெல்லாம் உங்களுக்குத்தான்" என்று கூறிக் கொண்டிருப்பதில் ஒரு பலனும் இல்லை. தொழில் இலாகாவிற்கான மானியத்தைப் பொறுத்தவரையில், உங்கள் தொழில் இலாகா எவ்வளவு தான் திறமையாக இயங்கினாலும், நீங்கள் எவ்வளவுதான் நல்லெண்ணத்தோடு இருந்தாலும், நீங்கள் குறைபாடுள்ள தொழிற் கொள்கையை அனுஷ்டிப்பதால், முதலாளிகள் தொழிலாளிகளைக் கசக்கிப்பிழிய இடம் கொடுத்துக் கொண்டிருக்கிறீர்கள் என்ற ஒரே காரணத்தாலேயே இந்த வெட்டுப் பிரேரணையை ஆதரிக்கிறேன் என்று கூறி என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த மானியக் கோரிக்கையின்போது முதலாளிகள் சார்பில் யாரும் பேசாமல் எல்லோரும் ஒத்துழையாமை பண்ணியது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. இந்த மானிய கோரிக்கை தொழிலாளி-முதலாளி உறவு சம்பந்தமான, தொழிலாளி, முதலாளி இவ்விருவரையும் குறித்த இலாகாவிற்கானது. இந்த மானிய கோரிக்கை தொழிலாளர்கள் என்ற ஒரு பிரிவினரை மட்டும் குறித்த கோரிக்கை அல்ல. முதலாளிகள் சார்பில் பேச விரும்பும் அங்கத்தினர்கள் முதலாளிகளுக்கு உள்ள குறைகளை எடுத்துச் சொல்ல இதுதான் சந்தர்ப்பம். இந்த சந்தர்ப்பத்தை அவர்கள் ஏன் பயன்படுத்திக்கொள்ளாமல் விட்டு விட்டார்கள் என்று எனக்குத் தெரியவில்லை.

SRI K. ANBAZHAGAN : முதலாளிகளுக்குக் குறைகள் இல்லாததால்.

* THE HON. SRI R. VENKATARAMAN : அவர்களுக்குக் குறைகள் இல்லை என்று நான் சொல்ல முடியாது. அவர்கள் தங்கள் குறைகளைக் கடிதங்கள் மூலமாகவும் நேரில் பார்த்துச் சொல்லும் யோசனைகள் மூலமாகவும் எங்களிடம் அடிக்கடி சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். அக்குறைகளைச் சொல்வதற்குரிய சந்தர்ப்பம் இதுதான், அவைகளைச் சொல்வதற்குரிய இடமும் இது தான். அவைகளைச் சொல்லக் கூடியவர்கள் இந்த விவாதத்தில் பங்கெடுத்துக்கொள்ளாதது எனக்கு ஆச்சரியத்தையே அளிக்கிறது.

இந்த மானிய கோரிக்கையின் பேரில் எல்லோரும் கட்சி பேதமின்றி பேசினார்கள். அதை நான் ரொம்பவும் வரவேற்கிறேன். எதிர்க் கட்சிக்காரர்கள் மாத்திரமே சர்க்காரைக் குறைகூறினார்கள் என்பதில்லை; காங்கிரஸ்காரர்களும் எந்த விதமான பாகுபாடும் இல்லாமல் குறைகளை எடுத்துச் சொன்னார்கள். அந்த குறைகள் சொல்லப்பட்டது. இந்த இலாகாவை நன்றாகக் கண்காணிப்பதற்கு எனக்கு உபயோகமாக இருக்கும். அக் குறைகளை கனம் அங்கத்தினர்கள் எடுத்துச் சொன்னதால் அவைகளை நீக்குவதற்கு நான் முயலுவேன்; அக்குறைகளை கனம் அங்கத்தினர்கள் சொன்னது, அவைகளுக்கான பரிஹாரங்களைத் தேடுவதற்கு எனக்கு உதவுகிறது என்பதால் அவர்கள் குறைகள் கூறியதை நான் வரவேற்கிறேன்.

இப்போது, சில முக்கியமான பிரச்னைகள் சம்பந்தமாக பதில் கூற விரும்புகிறேன். முதலாவது, நமது ராஜ்யத்தில் தொழிலாளர்களின் எண்ணிக்கை அதிகரிக்கவில்லை என்று கணக்குகளும் புள்ளி விவரங்களும் எடுத்துக் காட்டுகின்றன என்று கனம் அங்கத்தினர் ஸ்ரீ அன்பழகன் கூறினார். நான் கொடுத்திருக்கும் புள்ளி விவரங்களிலுள்ள தொழிலாளர்களின் எண்ணிக்கை, பாக்டரிச் சட்டப்படி பாக்டரிகளில் இருக்கும் ரெஜிஸ்டர்

14th March 1959] [Sri R. Venkataraman]

செய்யப்பட்ட தொழிலாளர்களின் எண்ணிக்கை ஆகும். அதைத் தவிர கிராமியத் தொழிலாளர்கள், குடிசைத் தொழிலாளர்கள் முதலிய வர்கள் இருக்கிறார்கள். இவர்கள் பாக்டரிச் சட்டப்படி ரெஜிஸ்டர் செய்யப் படாதவர்கள். மேலும் பாக்டரிச் சட்டப்படி ரிஜிஸ்டர் செய்யப்படுபவர்களில் கூட, "டெம்பரரி வர்கர்ஸ்", "காஷுவல் வர்கர்ஸ்" இவர்கள் இந்த லிஸ்டில் சேர்க்கப்படவில்லை. இன்று ஏராளமான வீடுகளும் பாக்டரிகளும் கட்டப்பட்டு வருகின்றன; இந்தத் துறையில் அதிக மான வேலை வாய்ப்புகள் இருக்கின்றன. பில்டிங் வர்கர்ஸ் இருக்கிறார் கள்; இவர்களுடைய எண்ணிக்கையும் இந்த லிஸ்டில் சேர்க்கப்படவில்லை.

இன்னும் பல திட்டங்கள் நடந்துகொண்டிருக்கின்றன. குந்தா திட்டம் போன்ற திட்டங்கள், வைகை அணைத்திட்டம் இவைகள் எல்லா வற்றிலும் பல தொழிலாளர்கள் வேலை செய்து வருகிறார்கள். அவர் களுடைய எண்ணிக்கையும் சேரவில்லை. ஆயிரக்கணக்கான தொழிலாளர் கள் இன்று பீடித் தொழிலில் வேலை செய்து வருகிறார்கள். அவர் களுடைய எண்ணிக்கையும் சேர்க்கப்படவில்லை. நாலு லட்சத்திற்கு மேற் பட்டவர்கள், கைத்தறித் தொழிலாளர்கள், பாக்டரிச் சட்டத்தின்கீழ் வராததால் அவர்கள் எண்ணிக்கையும் சேர்க்கப்படவில்லை. இதையெல் லாம் ஒட்டித்தான் முன்பு இந்த சபையில் பதில் சொல்லும்போது 2,84,000 பேர்களுக்கு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் வேலை வசதிகள் செய்து கொடுக்கவேண்டுமென்றும், அது நம் ராஜ்யத்தில் நிறைவேற்றப்படுமென்றும் சொன்னேன். பாக்டரியை எடுத்துக்கொண் டால் 26,000 பேர்களுக்கு ஒரு வருடத்தில் வேலை வாய்ப்பு கொடுத் திருக்கிறோம். தொழில்துறைகள் எல்லாம் அதிகமாக வெளியில் இருக் கின்றன. அவர்களை எல்லாம் சேர்த்துப் பார்க்கிறபோது நமது எண் ணிக்கை நாம் 284,000 பேர்களுக்கு வேலை வாய்ப்பு செய்து கொடுத் திருப்பது தெரியவரும்.

Sri K. ANBAZHAGAN : அமைச்சர் அவர்கள், தொழிற்சாலைகள் என்று சொல்லும்போது வேறு இன்னின்ன தொழில்களின் மூலமும் வேலை வாய்ப்பு அளிக்கப்பட்டிருக்கிறது என்று சொல்கிறார்கள். அவ் வேலைகள், நிரந்தரமாக நீடிக்கக் கூடியதா? தொழிற்சாலைகளிலுள்ள வேலைகளோடு அவைகளை ஒப்பிடமுடியுமா ?

* The Hon. Sri R. VENKATARAMAN : உலகத்தில் எந்த நாட்டை எடுத்துக்கொண்டாலும் ஒரு குறிப்பிட்ட காலத்தில் எவ்வளவு பேர்கள் வேலை செய்கிறார்கள், எவ்வளவு பேர்கள் வேலையில்லாமல் இருக்கிறார்கள் என்றுதான் கணக்கிட்டுச் சொல்லமுடியும், ஒருவர் ஒரு வேலையில் ஆயுள் முழுவதும் நீடித்திருப்பார் என்று சொல்ல முடியாது. எந்த நாட்டிலும் புள்ளி விவரங்கள் எப்படி தயார் செய்கிறார்கள் என்றால், 31 டிஸம்பர் 1957 என்று சொன்னால், அல்லது 31 டிஸம்பர் 1958 என்று வைத்துக்கொண்டால் ஒரு குறிப்பிட்ட காலத்தில் எவ்வளவு பேர்கள் வேலையில் இருக்கிறார்கள் என்றுதான் சொல்ல முடியும். பின்னர், சிலர் இறந்து போயிருக்கலாம், சிலர் வேலையை இழந்திருக்கலாம், ஆகவே குறிப்பிட்ட ஒரு தேதியில் எவ்வளவு பேர்கள் வேலையில் இருக்கிறார்கள், எவ்வளவு பேர்களுக்கு வேலையில்லை என்பதைத்தான் சொல்லமுடியும். அப்படி புள்ளி விவரங்கள் போடும்போது, நமது ராஜ்யத்தில் ஓரளவு வேலை வாய்ப்பு அதிகரித்திருக்கிறது என்றுதான் நான் சொன்னேன். இது போதும் என்று நான் சொல்லவில்லை. எனது அபிப்பிராயம், இது போதவே போதாது. நமது ராஜ்யத்தில் நிலவளமும், நீர்ப்பாசன வசதிகளும் குறைவாகவே இருக்கிறது. ஆகவே நமது ராஜ்யத்தில் இன் னும் அதிகமான பேர்களை தொழில்களில் ஈடுபடுத்தவேண்டுமென்பது தான் சர்க்காரின் நோக்கம். எங்களுக்கு கொடுத்துவிட்ட வேலையை நாங்கள் செய்துவிட்டோம் என்ற அர்த்தத்தில் சொல்லவில்லை. ஆனால் வேலை வாய்ப்புகள் அதிகரிக்கவில்லை என்று சொல்லும் குற்றச்சாட்டு சரியான தல்ல. கடந்த ஆண்டில் 194 பாக்டரிகள், அதிகமாக பாக்டரிகள் திறக்கப் பட்டிருக்கிறது. ஐந்நூற்று ஐம்பது சில்லறை பாக்டரிகள் திறக்கப்பட்டன.

[Sri R. Venkataraman] [14th March 1959

முந்நூற்று ஐம்பத்தாறு சில்லறை பாக்டரிகள் மூடப்பட்டன. எஞ்சி உள்ள, அதிகம் வந்திருக்கிற பாக்டரிகள் **194.** ஓரளவு வேலை வசதிகள் அதிகரித்திருக்கிறது என்பதைத்தான் நான் இதனால் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அடுத்தபடியாக, நம் ராஜ்யத்தில், புள்ளி விவரம் சம்பந்தமாக இருப்பதைச் சொல்லிவிட்டு பின்னர் பொதுவான விஷயத்திற்கு வருகிறேன். நமது ராஜ்யத்தில், ஆக்ஸிடன்ட்ஸ் அதிகரித்துவிட்டது, அதில் பெரிய வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது என்று அன்பழகன் அவர்கள் சொன்னார்கள். பாக்டரிகளில் ஆக்ஸிடென்ட்ஸ் அதிகமாவதற்குக் காரணம் புதிதாக "அன்ஸ்கில்ட் லேபர்" பாக்டரிகளுக்கு போவதினால்தான் ஆக்ஸிடென்ட்ஸ் ஏற்படுகிறது. புதிய பாக்டரிகளில்தான் இது அதிகமாகயிருக்கிறது, பழைய பாக்டரிகளில் இல்லை. புதிதாக "அன்ஸ்கில்ட் லேபர்" வந்து சேருகிறபோது மில்களில் வேலை செய்து பழக்கம் இல்லாத காரணத்தினால், இயந்திரங்களில் வேலை செய்து பழக்கம் இல்லாத காரணத்தினால் "ஆக்ஸிடென்ட்ஸ்" ஏற்படுகிறது. இரண்டாவதாக, புதிய பாக்டரிகளில் யூனியன்கள் கிடையாது. தொழிற்சங்கம் இருந்தால் பாக்டரிகளில் ஆக்ஸிடென்ட்ஸ் வராமல் அவர்கள் பார்த்துக்கொள்ளவும், குறைபாடுகள் இருந்தால் அவைகளைப்பற்றி பாக்டரி இன்ஸ்பெக்டருக்கு எழுதியனுப்பியோ அல்லது முதலாளிகளிடம் எடுத்துச் சொல்லி வாதாடி, இன்னின்ன குறைபாடுகள் இருக்கின்றன, அவைகளைத் தீர்க்கவேண்டுமென்று சொல்லி அந்தக் குறைபாடுகளைத் தீர்ப்பார்கள். புதுத் தொழிற்சாலைகளில் யூனியன்கள் இல்லாமல் இருப்பதால் அங்கு நடப்பதை கண்காணிக்க முடியாமல் இருக்கிறது. இருந்தாலும் அங்கும் பாக்டரி இன்ஸ்பெக்டர்கள் நேரில் சென்று அதை நன்கு பார்வையிட வேண்டுமென்று சென்ற வருடத்தில் நான் எச்சரிக்கை செய்தேன். சென்ற வருடத்தில் உயிர் இழந்த தொழிலாளர்களின் எண்ணிக்கை திடீரென்று அதிகமாகப் போய்விட்டது. பாக்டரி இன்ஸ்பெக்டர்கள் இதை நன்கு கண்காணிக்கவேண்டுமென்று உத்தரவு போட்டதின் காரணமாக இன்று அதில் குறைவு ஏற்பட்டிருக்கிறது என்பதை நான் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். அடுத்தபடியாக, சின்னதுரை அவர்கள் சொன்னார்கள், தொழில் தகராறுகள் எல்லாம் இப்பொழுது அதிகமாகிவிட்டதென்று. தொழில் தகராறுகள் அதிகமாகப் போகவில்லை. தொழிலாளர்களின் கோரிக்கைகள்தான் அதிகமாகப் போயிருக்கிறது. தொழிலாளர்களின் கோரிக்கைகள் சென்ற ஆண்டு **8,586** ஆக யிருந்தது, **1958**-ல் **9,552** கோரிக்கைகள் போட்டிருக்கிறார்கள். இது, தவறு என்று நான் சொல்லவில்லை. தொழிலாளர்கள் கோரிக்கைகள் போடுவது தவறு என்று சொன்னால்தான் இதை இழிவாக எடுத்துக் கொள்ள வேண்டும். தொழிலாளர்கள் அப்படி கோரிக்கைகள் போட்டு அவர்கள் ஓரளவு அதில் வெற்றியும் அடைந்திருக்கிறார்கள் என்பதற்கு அடுத்த புள்ளிவிவரங்களை பார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். சென்ற ஆண்டு **569** தொழில் தகராறுகள் கன்ஸிலியேஷன் மூலம் தீர்க்கப்பட்டிருக்கிறது. ஆனால் **58**-ல் **718** தொழில் தகராறுகள் கன்ஸிலியேஷன் மூலம் தீர்க்கப்பட்டிருக்கின்றன. ஆகவே, தொழிலாளர்களின் கோரிக்கைகள் சுமுகமாக தீர்க்கப்பட்டிருப்பது அதிகரித்திருப்பதை நான் எடுத்துக் காட்ட விரும்புகிறேன். அது சம்பந்தமாக பணியாற்றிய கன்ஸிலியேஷன் ஆபீஸர்களுக்கு இன்னும் ஊக்கம் அளிக்கவேண்டுமென்ற முறையில் அவர்கள் தொடர்ந்து இந்த பணியைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். வேலை நிறுத்தங்கள் ஓரளவு அதிகப்பட்டிருக்கிறது என்று எடுத்துக்காட்டினார்கள். வேலை நிறுத்தங்கள் அதிகரிப்பதற்கு பல காரணங்கள் இருக்கின்றன. ஒன்று, சரியான தொழிற்சங்கம் இல்லாத காரணத்தினால்கூட திடீர், திடீரென்று வேலை நிறுத்தங்கள் ஏற்பட்டுவிடுகின்றன. என்னென்ன காரணங்களிற்காக வேலை நிறுத்தம் ஏற்பட்டிருக்கிறது என்பதை எல்லாம் தனியாகக் கேள்வி போட்டால் அதை பரிசீலனை செய்து அவை எப்படி ஏற்பட்டன என்று சொல்லிவிடலாம். தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்யலாமா கூடாதா என்ற பிரச்னைதான் அடுத்த கேள்வியாக வரும். தொழில் தகராறுகளை தீர்ப்பதற்கு சர்க்கார் இரண்டு காரியங்கள் செய்யலாம். ஒன்று, நீங்களே சமரசமாக தீர்த்துக்கொள்ள முயற்சி செய்யவேண்டுமென்று சொல்லலாம். அல்லது அதை கோர்ட்டுக்கு அனுப்பிவிடலாம். கோர்ட்டிற்கு அனுப்பி தீர்ப்பு வந்தால், அதை உடனடி அமுல் செய்யவில்லை என்று **strike**, சர்க்கார்

14th March 1959] [Sri R. Venkataraman]

கோர்ட்டிற்கு விடவில்லையென்றால் அதற்கும் strike என்று இருக்கிறது.. சர்க்காருக்கு நோட்டீஸ் கொடுக்காமல் செய்யப்படும் strikes-ம் இதில் சேர்க்கப் பட்டிருக்கின்றன. என்னென்ன காரணங்களுக்காக இவையெல்லாம் ஏற் பட்டிருக்கிறது என்று பரிசீலனை செய்து பார்த்தால் அப்பொழுதுதான் அதற்குள்ள காரணங்கள் தெரியும். ஒன்று மாத்திரம் சொல்ல விரும்பு கிறேன். இன்று சர்க்கார் பலவித சட்டங்கள் வகுத்திருக்கிறார்கள். தொழி லாளர்கள் நியாயமாக தங்கள் குறைகளைப் போக்கிக்கொள்ள பல வழி வகைகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஒன்றிரண்டு விஷயங்களில் ஒரு காரி யம் செய்யமுடியாமல் இருக்கலாம். ஆனால் பொதுவாக இன்று நம் ராஜ்யத்தில் இருக்கிற நிலைமையைப் பார்த்தால் வேலை நிறுத்தம் செய் வதற்கு எந்தவிதமான அவசியமும் இல்லாமல் தங்கள் குறைகளைப் போக்கிக்கொள்ள வசதிகள் எல்லாம் இன்று இருக்கிறது. அதை தொழி லாளர்கள் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். அவ்வாறு பயன்படுத்திக் கொண்டால் வேலை நிறுத்தத்திற்குள்ள அவசியமே நமது ராஜ்யத்தில் இருக்காது என்பதை நான் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ள விரும்பு கிறேன். அடுத்தபடியாக, இன்று மிக முக்கியமாக நம்மை எதிர்நோக்கி யிருக்கும் ஒரு பெரிய பிரச்னை, சில கோர்ட் தீர்ப்பால் ஏற்பட்டிருக்கிற நெருக்கடி. ஹைகோர்ட்டில் சமீபத்தில் கொடுக்கப்பட்ட ஒரு தீர்ப்பின் காரணமாக ஸ்டாண்டிங் ஆர்டர் பிரகாரம் ஒருவரை வேலையிலிருந்து நீக்கிவிட்டால் அது சரியா தவறா என்று கவனிப்பதற்கோ, கண்காணிப்ப தற்கோ, தொழில் கோர்ட்டுக்கு உரிமையில்லை என்ற ஒரு தீர்ப்பு ஹைக்கோர்ட்டால் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதேவிதமான ஒரு தீர்ப்பு 47-ம் வருடத்தில் ஒரு முறை கொடுக்கப்பட்டு அதற்குப்பிறகு அதன் பேரில் ஒரு அப்பீல் நடந்தது. அப்பீல் கோர்ட்டில் அவர்கள் தீர்மானித்தது என்னவென்று சொன்னால் தொழில் கோர்ட்டுகள், சாதாரண சிவில் கோர்ட்கள் அல்ல, சிவில் கோர்ட்களுக்கு தொழிலாளர்களுக்கும் முதலாளி களுக்கும் என்ன ஒப்பந்தம், "what is the contract?" என்பதைத்தான் நிர்ணயம் செய்யமுடியும். ஆனால் தொழில் கோர்ட்டிற்கு, தொழிலாளர் களுக்கும் முதலாளிகளுக்கும் எந்தவிதமான ஒப்பந்தம் இருக்கவேண்டும், "what should be the contract" என்று நிர்ணயம் செய்யக் கூடிய உரிமையிருக்கிறது என்று தீர்ப்பு கொடுத்தார்கள். இந்தத் தீர்ப்பை ஒட்டித்தான் பல விஷயங்களிலே தொழிலாளிகளுக்கும் முதலாளிகளுக்கும் ஒப்பந்தப்படி எந்தவிதமான நிலைமை இருந்தாலும் அதை மாற்றி அமைக்கவேண்டும் என்று தொழிலாளர்கள் கோரிக்கை விடுகின்றபொழுது, அதை கோர்ட்டுகளுக்கு அனுப்பிக்கொண்டிருந்தோம். இப்பொழுது வேலையிலிருந்து நீக்கப்பட்டவர்கள் ஸ்டாண்டிங் ஆர்டர்ஸ் பிரகாரம் நீக்கப்பட்டால், அது ஒப்பந்தப்படி செல்லுபடியாகும் என்று சொல்லப்படுகிறது.

நமது ராஜ்யத்தில் இருக்கக்கூடிய எல்லா தொழில் தகராறுகளை எடுத்துக்கொண்டால், ராஜ்யத்தில் ஏற்படக்கூடிய வேலை நிறுத்தங்களை எடுத்துக்கொண்டாலும், "பர்ஸானல் காஸுக்காக", (personnel causes) தனிப்பட்ட நபர்களின் காரணமாகத்தான் அதிகமான தகராறு களும், அதிகமான வேலை நிறுத்தங்களும் ஏற்படுகின்றன. இந்தக் கஷ் டத்தை நீக்கவேண்டும் என்பதற்காக, நாம் புதியதாகப் போடுகின்ற எல்லா சட்டங்களிலும் யாராவது ஒரு தொழிலாளி காரணம் இல்லாமல், "வித்தௌட் ரீஸனபிள் காஸ்" வேலையிலிருந்து நீக்கப்பட்டால், அவர் நேரடியாக சர்க்கார் நியமிக்கிற அதிகாரியிடம் அப்பீல் செய்து, அதுபற்றி தீர்மானம் செய்துகொள்ளலாம் என்ற ஷரத்தைப் போட்டிருக்கிறோம். சமீபத்தில் நிறைவேற்றப்பட்ட பீடித் தொழிலாளர்கள் சட்டம், ஹோட்டல் தொழிலாளர்கள் சட்டம் ஆகிய சட்டங்களில் இந்த ஷரத்து இருக்கிறது. இதேவிதமாக நாம் ஒரு சட்டத்தை இயற்றிவிட்டால், பெரிய அளவுக்கு நமது ராஜ்யத்தில் இருக்கக்கூடிய தொழில் தகராறுகள், "பர்ஸானல் காஸஸ்" (personnel causes) சம்பந்தமான தகராறுகள், தனி நபரைக் குறித்த தகராறுகள் ஏற்படாது என்று சர்க்கார் நினைக்கிறது. இது "கன்கரெண்டு லிஸ்டில்" இருப்பதன் காரணமாக இதைப்பற்றி இந்த சர்க்கார் மத்திய சர்க்காருக்கு எழுதியிருக்கிறது. விரைவிலே இதற்கான சட்டமும் செய்யப்படலாம் என்பதை நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

[Sri R. Venkataraman] [14th March 1959

தொழில் தகராறு பற்றிய தீர்ப்புகளை அமுல் நடத்துவது பற்றி கனம் அங்கத்தினர்கள் தெரிவித்தார்கள். இதற்கு ஒரு "இம்ப்ளிமெண்டேஷன்" கமிட்டி போடவேண்டும், எந்த அளவுக்கு போடப்பட்டிருக்கிறது என்றெல்லாம் பக்கிரிசுவாமிப் பிள்ளை அவர்கள் கேட்டார்கள். கமிட்டிகள் போடுவது எந்த அளவுக்கு உபயோகமாக இருக்கும் என்பது பற்றி எனக்கு சற்று சந்தேகம் இருக்கிறது. காரணம் என்னவென்று சொன்னால், தொழில் தகராறுகள் பற்றிய தீர்ப்புகளை நிறைவேற்றாவிட்டால், அவர்கள் மீது நாம் சட்டப்படி நடவடிக்கை, பிராஸிகியூஷன் முதலியவை, எடுக்கலாம். ஆனால் எந்த அளவுக்கு இந்தத் தீர்ப்புகள் அமுல் நடத்தப்படவில்லை என்று பார்க்கிறபொழுது, கோர்ட்டுகளிலே "ஸ்டே ஆர்டர்" வாங்கின இடங்களில்தான் அதிகமாக அமுல் நடத்தப்படவில்லை என்ற நிலைமை ஏற்படுகிறது. ஹை கோர்ட்டிலோ, அல்லது சுப்ரீம் கோர்ட்டிலோ ஸ்டே ஆர்டர் வாங்கியதின் காரணமாக அமுல் நடத்தப்படவில்லை. கோர்ட்டின் தடை உத்தரவினால், அதை அமுல் நடத்தக்கூடிய அதிகாரம் சர்க்காரிடமிருந்து எடுக்கப்பட்டுவிட்டதன் காரணமாக, அந்தத் தீர்ப்புகள் "இம்ப்ளிமெண்டேஷன்" செய்யப்படாமல் இருந்துகொண்டு வருகின்றன. ஆகவேதான் இதில் நாம் எந்தவிதமான மாறுதலும் செய்ய முடியாது. இன்றைக்கு நமது அரசியல் சட்டத்திலே இருக்கக்கூடிய உரிமையை நாம் செய்கின்ற எந்தவிதமான சட்டத்தினாலும் பறித்துவிட முடியாது. கோர்ட்டுக்குச் செல்லுவதற்கு உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த உரிமை எப்படி மாற்றப்படவேண்டுமென்று சொன்னால், பெரிய அளவுக்கு தொழிலாளர்களும், முதலாளிகளும் நேரடியான சமரசங்கள் செய்துகொள்ள வேண்டும். அல்லாமல், சட்டத்தை அணுகுகின்ற காலத்தில் சட்டத்தில் இருக்கக்கூடிய எல்லாவிதமான உரிமைகளையும் இரு சாராரும் தங்கள் தங்களுக்கு உகந்தவாறு உபயோகப்படுத்துவார்கள் என்பதை தடுக்க முடியாது. எனவேதான், சர்க்காரைப் பொறுத்த அளவில், கூடுமானவரையில் இம்மாதிரி தகராறுகளை நேரடியான சமரசப் பேச்சுகளின் மூலம் நீங்கள் முடித்துக்கொள்ள வேண்டும், கோர்ட்டுகளுக்குப் போவதை தவிர்க்க வேண்டும், அவ்வாறு நேரடியாக சமரசப் பேச்சுக்களின் மூலம் முடித்துக்கொள்ளுவதினால்தான் தொழிலில் அமைதி வளர்வது மாத்திரமல்லாமல், ஓரளவுக்கு திறமை, முன்னேற்றமும் ஏற்படும் என்று வற்புறுத்தி வருகிறது. ஆகவேதான், நான் மீண்டும் வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். தொழில் தகராறுகள் ஏற்படுகின்ற காலத்தில் முதலாளிகளும் தொழிலாளிகளும் நேரடியாக சமரசம் பேசினால், தொழிலாளர்கள் தங்கள் குறைகளைச் சொல்லுவார்கள், தங்களுக்கு அதிகமான கூலி வேண்டும் என்று கேட்பார்கள். அதே போல முதலாளிகளும் "ஆப்ஸண்டிஸம்" அதிகமாக இருக்கிறது. அல்லது வேலைத் திறமை குறைவாக இருக்கிறது, அதை அதிகரிக்கவேண்டும் என்று தெரிவிப்பார்கள். ஆகவே, முதலாளிகள் சொல்லுவதை தொழிலாளர்கள் ஏற்றுக்கொண்டு தொழிலாளர்கள் சொல்லுவதை முதலாளிகள் ஏற்றுக்கொண்டு பிற நாடுகளில் கூட்டு ஒப்பந்தங்கள் ஏற்படுவதின் காரணமாகத்தான் அங்கு கூலி உயர்வும் ஏற்படுகிறது, தொழில் திறமையும் அதிகரிக்கிறது. ஆனால் நம்முடைய நாட்டில் கூட்டு ஒப்பந்தத்தில் நம்பிக்கை வைக்காமல், கோர்ட்டில் அதிகமான நம்பிக்கை வைப்பதின் காரணமாக, கோர்ட்டிலே கொடுக்கின்ற தீர்ப்பிலே அவர்கள் திறமை அதிகரிப்பது பற்றியோ, அல்லது அவர்கள் "ஆப்ஸண்டிஸம்" குறைப்பது பற்றியோ, வேறு துறையிலே முன்னேற்றத்திற்கான வழிவகையைப் பற்றியோ எந்தவிதமான தீர்ப்பும் கொடுப்பதில்லை. கொடுப்பதற்கும் அவர்களால் முடியாது. ஆகவே என்ன ஏற்படுகிறது என்று சொன்னால் அதிகமான கூலி கொடுத்தால்கூட, நேரடியான ஒப்பந்தத்தின் மூலம் கிடைக்கக்கூடிய சலுகைகளை இந்த நாட்டில் இருக்கக்கூடிய முதலாளிகள் இழந்துகொண்டிருக்கிறார்கள் என்பதை வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். அதை ஒட்டியாவது இன்னும் அதிகமான நேரடியான ஒப்பந்தங்களில் ஈடுபடவேண்டும், இதில் சட்டப் பிரச்னையை எப்பொழுதும் பார்த்துக்கொண்டிருக்கக்கூடாது என்பதை வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

ராஜ்யத்தில் நாம் தொழிலாளர்கள் இன்ஷூரன்ஸ் திட்டத்தை வேகமாக விஸ்தரித்துக்கொண்டு வருகிறோம். கடந்த வருஷம் போதிய டாக்டர்கள் கிடைத்திருப்பார்களேயானால் ராஜ்யம் பூராவும் இன்ஷூரன்ஸ் திட்

14th March 1959] [Sri R. Venkataraman]

டத்தை விஸ்தரித்திருக்க முடியும். 1958-வது வருஷத்தில் போதிய டாக்டர்கள் கிடைக்காத காரணத்தினாலே இன்றைக்கு சென்னை ராஜ்யத்தில் 9 இடங்களிலேதான் இந்தத் திட்டம் விஸ்தரிக்கப்படாமல் இருக்கிறது. அதை இந்த வருஷம் நிச்சயம் விஸ்தரித்துவிடமுடியும் என்று நம்புகிறேன். இந்த இன்ஷூரன்ஸ் திட்டத்தை 9 இடங்களுக்கும் விஸ்தரித்து விடுவோமானால், இந்தியாவிலேயே முதல் முதலாக நம் ராஜ்யம் தான் ராஜ்யம் பூராவும் தொழிலாளர்களுடைய இன்ஷூரன்ஸ் திட்டத்தை அமுல் நடத்தியவர்களாவோம். அதற்குப் பிறகுதான் அவர்கள் குடும்பத்திற்கு ஏற்பாடு செய்யவேண்டும். ஏனென்றால், பல இடங்களில் அவர்கள் தங்களுக்கு சட்டப்படி கிடைக்கவேண்டிய வசதிகளே கிடைக்கவில்லை என்று வருந்திகொண்டிருக்கும்பொழுது, கிடைத்திருக்கிற இடத்திலேயேதான் மேலும் வசதியைப் பெருக்குவது முடியும் என்ற காரணத்திற்காக, வசதியை பெருக்குவது அவ்வளவு சரியாகாது. இந்த ராஜ்யத்தில் வெகு சீக்கிரம் ராஜ்யம் பூராவும் இந்தத் திட்டத்தை அமுல் நடத்துவதற்கு முயற்சி செய்துகொண்டிருக்கிறோம். அது முடிந்தவுடன் குடும்பத்தினருக்கு நாமே முதலாவதாக செய்ய முடியும் என்று நான் நினைக்கிறேன். குடும்பத்திற்கும் விஸ்தரிப்பதற்கு நாம் தயார் என்று மத்திய சர்க்காருக்கும், அந்த போர்டுக்கும் தெரிவித்திருக்கிறோம். அந்த முறையிலே வெகு சீக்கிரம் அதையும் நிறைவேற்ற முடியும் என்று எதிர்பார்க்கிறேன்.

பீடித் தொழிலாளர்கள் சட்டம், ஹோட்டல் தொழிலாளர்கள் சட்டம் இவைகள் இன்னும் அமுலுக்கு வரவில்லை என்பதற்கு சர்க்காரிலே குறை ஒன்றும் இல்லை. நடைமுறையில் இருக்கக்கூடிய விதிகள் தான் இதற்குக் காரணம். முதலில் அதை பிரசுரிக்கவேண்டும். அதற்குப் பிறகு "அப்ஜெக்ஷனுக்கு" 6 வாரங்கள் டைம் கொடுக்க வேண்டும். பிறகு "பைனலைஸ்" செய்யவேண்டும். டேபிள் மேல் வைக்கவேண்டும். இம்மாதிரியான பலவிதமான கட்டுப்பாடுகள் இருக்கின்றன. இந்தக் கட்டுப்பாடுகளின் காரணமாகத்தான் ஓரளவு காலதாமதம் ஏற்பட்டிருக்கிறது. ஏப்ரல் மாதத்திற்குள் இந்த விதிகளெல்லாம் பிரசுரமாகி சட்டம் அமுலுக்கு வந்துவிடும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

வீடுகள் கட்டிக்கொடுக்கும் திட்டத்தில் நாம் ஓரளவு முன்னேற்றம் கண்டிருக்கிறோம். ஆனால் அது போதாது. மத்திய சர்க்கார் இதற்காக கொடுத்த 75 லட்சம் ரூபாய்க்கு நாம் இந்த வருஷத்திலேயே அதற்கு வேண்டிய சாங்ஷன் எல்லாம் செய்துவிட்டோம். இனிமேல் வருகின்ற இரண்டு வருஷங்களுக்கு பணம் இல்லை என்று கூடச் சொன்னேன். இன்னும் ராஜ்ய சர்க்கார் சென்ற ஆகஸ்டு மாதத்தில் முதலாளிகளையும், தொழிலாளிகளையும் அழைத்து ஒரு மகாநாடு நடத்தியது. 1 p.m.

அதில் ஒவ்வொரு முதலாளியும், அதாவது ஆயிரம் தொழிலாளர்களை வைத்து வேலை செய்து கொண்டிருக்கின்ற முதலாளிகள் ஒவ்வொருவரும் குறைந்த பட்சம் வருடம் ஒன்றுக்கு 4 சதவிகிதம் வீடுகட்டி கொடுக்க வேண்டுமென்றுள்ள ஒரு திட்டத்தை சொன்னேன். ஆனால் மிகவும் வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்கிறேன். அந்தக் கூட்டத்திற்கு தொழிலாளர்கள் தலைவர்கள் யாரும் வரவில்லை என்பதை. இதே மாதிரி ஒரு கூட்டத்தை வருகின்ற ஏப்ரல் மாதத்தில் கூட்டப்போகின்றேன். அதற்காகவது நிச்சயமாக வருவார்கள் என்று நம்புகிறேன். கழிந்த ஆறு மாத காலமாக இதற்கு என்ன திட்டம் வகுத்திருக்கிறார்கள், இதில் எவ்வளவு தூரம் செயல்பட்டிருக்கிறார்கள் என்பதையெல்லாம் பரிசீலனை செய்யப்போகிறோம். இந்த முறையில் அவர்கள் வருடம் ஒன்றுக்கு நான்கு சதவிகிதம் தொழிலாளர்களுக்கு வீடு கட்டிக்கொடுப்பதற்கு முன் வாவில்லை யென்றால் நிச்சயமாக இதற்காக ஒரு சட்டம் பிறப்பிக்கப்படும் என்பதை திட்டவட்டமாக தெரிவித்துக்கொள்கிறேன். இந்தப் பொறுப்பை தட்டிக் கழித்துக்கொண்டு போக முடியாது. இவ்விதம் வருடம் ஒன்றுக்கு 4 சதவிகிதம் வீடு கட்டி கொடுப்பார்கள் என்றால் 12 வருடங்களுக்குள் இருக்கக்கூடிய தொழிலாளர்களில் 50 சதவிகிதம் தொழிலாளர்களுக்கு வீடு கட்டிக் கொடுக்க முடியும். ஆகவே முதலாளிகள் இதில் ஈடுபட

[Sri R. Venkataraman] [14th March 1959

வேண்டும் என்பதை நான் சென்ற கூட்டத்தில் வலியுறுத்திச் சொன்னேன். அதைத்தான் இப்போதும் நான் மீண்டும் வலியுறுத்திச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக (பிளான்டேஷன்) தோட்டத் தொழிலாளர்களுக்கு இருக்கின்ற குறைகள் பற்றி சொல்லப்பட்டன. இப்போது ஒவ்வொரு தோட்டமும் ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு மாற்றப்படுகின்ற பொழுது தொழிலாளர்களை நிறுத்துவதாக இருந்தால் அவர்களுக்கு சட்டப்படி "கிராட்டியிட்டி" கொடுக்க வேண்டுமென்றிருக்கிறது. இவ்விதம் "கிராட்டியிட்டி" கொடுத்து நீக்கிவிட்டால் அவர்களுக்கும் முதலாளிகளுக்கும் இருக்கின்ற ஒப்பந்தம் எல்லாம் போய் விடுகின்றது. இதில் புதிதாக வாங்குகின்ற சில முதலாளிகள் தொழிலாளர்கள் எல்லோரையும் எடுத்துக் கொள்வதில்லை என்கின்ற நிலைமையும் இருக்கிறது. சில தோட்டங்களில் கிராட்டியுட்டி கொடுக்காமல் பழைய தொழிலாளர்களையே நீடித்து வைத்துக் கொண்டும் இருக்கிறார்கள். இதில் சட்டப்படி நாங்கள் நடவடிக்கை ஒன்றும் எடுக்கவில்லை என்று சொன்னார்கள். பொதுவாக இப்படிப்பட்ட முதலாளிகளுக்கு ஒரு கோரிக்கையை தெரிவிக்க விரும்புகிறேன். அதாவது இவ்விதம் புதிதாக தோட்டங்களை வாங்குகின்ற பொழுது அதில் இருக்கக்கூடிய சிப்பந்திகளையே நீடித்து வைத்துக்கொள்வதற்கு முயற்சி செய்யவேண்டும். இல்லையென்றால் நிறுத்தப்படுகின்ற தொழிலாளர்களுக்கு இவர்கள் "கிராட்டியுட்டி" பணம் ஏராளமாக கொடுக்கவேண்டியிருக்கிறது. அது மட்டுமல்ல, இவ்விதம் கொடுக்கப்படுகின்ற பணத்தை தொழிலாளர்கள் சீக்கிரமாகவே செலவழித்து விடுகின்றனர். ஆகவே தோட்டத்தை நடத்துகின்றவர்களுக்கு இது நல்லதல்ல. கூடுமானவரை பழைய ஆட்களையே வைத்துக்கொள்வதற்கு முயற்சி செய்யவேண்டுமென்று தெரிவித்துக்கொள்கிறேன். அடுத்தபடியாக வேலை இழந்த "ப்ரொகிபிஷன்" குற்றம் முதலியவைகளில் ஈடுபட்டதின் காரணமாக வேலை இழந்த தொழிலாளர்களுக்கு வேலை திருப்பிக்கொடுக்கவேண்டுமென்று சொல்லுகின்ற விஷயத்தில் சர்க்கார் எந்தவிதமான உத்தரவும் பிறப்பிப்பதற்கில்லை என்பதை நான் முன்பே சொல்லிவிட்டேன். குற்றங்களை செய்வதற்காக தண்டிக்கப்பட்டு சிறைக்கு அனுப்பப்பட்டிருக்கிறார்கள் என்றால் அதற்காக அந்தத் தொழிலாளி விடுதலையாகி திரும்பி வரும் வரை அவருடைய வேலையை காலியாகவே வைத்து இருக்கவேண்டும் என்று சர்க்கார் முதலாளியிடம் சொல்வது என்பது சரியல்ல. ஆனால் தொழிற்சங்க தகராறுகள் காரணமாக ஏதாவது கேஸ் ஏற்பட்டு அதில் தொழிலாளிகள் ஈடுபடவேண்டியிருந்தால்—அந்த தகராறு எல்லாம் முடிந்த பின்னால்—இந்த கேஸ் வாபஸ் பெறவேண்டும் என்று சர்க்கார் சொல்லலாம். அவ்விதம் சொல்லி வாபஸ் செய்யப்பட்டிருக்கிறது. பலாத்காரமில்லாத இடங்களில் எல்லாம் இந்த முயற்சி செய்திருக்கிறோம். ஆனால் பலத்கார செயல்கள் இருக்கின்ற இடங்களில் எல்லாம் அதற்காக போடப்பட்டிருக்கிற கேஸ்களை எல்லாம் வாபஸ் பெற வேண்டும் என்று சொல்வது சரியல்ல. தொழில் தகராறு ஏற்படுகிற இடங்களில் எல்லாம் தொழிலாளர்களின் வேலைக்கு பாதுகாப்பு கொடுத்துக்கொண்டுதான் இருக்கிறோம். ஆகவே "பிரொகிபிஷன்" கேஸ் போன்ற வேறு பல காரியங்களில் ஈடுபட்டதின் காரணமாக தொழிலாளர்கள் நீக்கப்பட்டிருந்தால் அந்த வேலைகளை எல்லாம் காலியாக வைத்திருக்கவேண்டுமென்று முதலாளியிடம் சர்க்கார் சொல்ல முடியாது. முதலாளி வேண்டுமென்றால் காலியாக வைத்துக்கொள்ளலாம் என்றுதான் நான் சொல்லலாம்.

இன்னும் தோட்டத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்ற தொழிலாளர்களுக்கு எல்லாம் வீட்டுவசதி செய்து கொடுக்கவேண்டுமென்று பிளாண்டேஷன் ரூல்ஸில் சொல்லப்பட்டிருக்கிறது. இவற்றையெல்லாம் ஒரேயடியாக அமுல் நடத்தமுடியாது. கொஞ்சங்கொஞ்சமாகத்தான் அமுல் நடத்தமுடியும். அதோடு பிளாண்டேஷன் ரூல்ஸில் வைத்திய வசதிகள் செய்து கொடுக்க வேண்டும் என்றெல்லாம் நல்ல விதிகள் செய்யப்பட்டிருக்கின்றன. அந்த விதிகள் பிரகாரம் எல்லோரும் ஆசுபத்திரிகளை வைத்துக்கொள்வார்களானால் இந்த ராஜ்ய இன்ஷூரன்ஸ் திட்டத்தில் கிடைப்பதை விட அதிகமாக சலுகை கிடைக்கும் என்பதை பிளான்டேஷன் தொழிலாளர்

14th March 1959] [Sri R. Venkataraman]

களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். மற்றபடி பொதுவாக நம்முடைய ராஜ்யத்தில் லேபர் இலாகாவானது சிறந்த முறையில் வேலை செய்து வந்திருக்கின்றது. இதில் ஒவ்வொரு ஜில்லாவுக்கும் ஒவ்வொரு லேபர் ஆபீஸர் போட வேண்டுமென்று கனம் கோதண்டராமன் அவர்கள் சொன்னார்கள். இப்போது இரண்டு இடங்களை தவிர—அதாவது தஞ்சாவூர் திருச்சிராப்பள்ளி, சேலம் வடார்க்காடு—இந்த இடங்களில் மட்டும் தான் இல்லை. இந்த இடங்களில் எல்லாம் வேலை அதிகமாக இருக்குமானால் இங்கேயும் தனியாக ஆபீஸர்களை போடுவதைப்பற்றி பரிசீலனை செய்யலாம் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். மேலும், குறைந்த பட்சக் கூலி இன்னும் பல இடங்களில் நிர்ணயம் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டார்கள். இந்த அறிக்கையில் 4-வது பக்கத்தில் கொடுத்திருக்கின்றேன்.

**"Cotton ginning and pressing, salt pans, Match and Fire-works Manufactories and Hosiery Manufactories".**

இந்த மூன்று நான்கு தொழில்களில் உடனடியாக குறைந்த பட்சக்கூலி நிர்ணயம் செய்வதற்கு உத்தேசமிருக்கிறது. இன்னும் (பல்மோரா) பனை நார் தொழில் போன்ற தொழில்களுக்கும் குறைந்தபட்சக் கூலி நிர்ணயம் செய்யவேண்டுமென்று கனம் டி.டி. டானியல் அவர்கள் சொன்னார்கள். அதைப்பற்றியும் சர்க்கார் பரிசீலனை செய்யும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். இன்னும் ஷாப் சட்டத்தில் பல குறைபாடுகள் இருக்கின்றன, இதில் ஆங்காங்கு இருக்கின்ற இன்ஸ்பெக்டர்கள் எல்லாம் சரியாக கவனிப்பதில்லை என்று பலர் சொன்னார்கள். சரியாக கவனிக்காதது மட்டுமல்ல, அவர்கள் சட்டத்தை மீறுவதற்கும் ஒத்துழைக்கிறார்கள் என்ற குற்றச்சாட்டும் சொல்லப்பட்டது. இன்றைக்கு சர்க்கார் ஒரு காரியத்தை செவ்வையாக நடத்த வேண்டுமென்று சொன்னால், அதற்கான ஒத்துழைப்பானது அதன் மூலம் பலனடைகின்றவர்களிடமிருந்துதான் வரவேண்டும். இந்தியன் பீனல் கோட்கூட சரியாக நடத்தப்பட வேண்டுமென்று சொன்னால், இதனால் பாதிக்கப்பட்டவர்கள் கோர்ட்டில் கேஸ் போட்டால்தான் விசாரணை செய்யப்படும். அதன் மூலம் சரியாக நடத்த முடியும். சர்க்காருக்கு எந்தெந்த இடங்களில் எல்லாம் தவறுகள் நடக்கின்றன என்று தெரியாது. அதனால்தான் நாட்டில் தொழிற் சங்கங்கள் அதிகமாக வேண்டுமென்று சொல்லுகிறோம். சர்க்கார் போடக்கூடிய சட்டங்களை எல்லாம் அமுல் நடத்துவதற்கு தொழிற் சங்கங்கள் அவசியம். தவறுகள் எங்கே நடக்கின்றன என்பதை அவர்கள்தான் சொல்ல முடியும். போடப்படுகின்ற சட்டங்கள் எந்தெந்த இடங்களில் எல்லாம் சரியாக அமுல் நடத்தப்படுகின்றன, எந்தெந்த இடங்களில் எல்லாம் நடத்தப்படவில்லை என்பதை தொழிற் சங்கங்கள் தான் சொல்ல முடியும். அவ்வாறு சொல்வதின் மூலமாகத்தான் சர்க்கார் போடுகின்ற சட்டத்தை அமுல் நடத்த முடியும், இல்லாவிட்டால் தவறுகள் எங்கே நடக்கின்றன என்பதை கண்டுபிடிக்க முடியாது. ஷாப் சட்டம் அமுல் நடத்தப்படுவதில ஓரளவு குறைகள் இருக்கின்றன என்பது சர்க்காருக்குத் தெரியும். இருந்தாலும் கூட புகார்கள் தெரிவிக்கின்ற இடங்களில் எல்லாம் உடனடியாக பரிசீலனை செய்து வேண்டிய ஏற்பாடுகளை செய்கிறோம். பொதுவாக இவ்வாறு புகார்கள் வருவது ரொம்பவும் குறைவு என்பதை என்னால் சொல்ல முடியும். இதற்குக் காரணம் சட்டத்தில் இருக்கின்ற வசதிகளை எல்லாம் தொழிலாளர்கள் சரியானபடி கவனித்துக்கொள்ளாமல் இருப்பதினால் தான். கடைசியாக ஒரு வார்த்தை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். தொழிலாளர்கள் நல்ல முறையில் இன்றைக்கு முன்னேற்றம் காணவேண்டும் என்று சொன்னால் வெறும் சட்டங்கள் மாத்திரம் செய்தால் போதாது. அந்தச் சட்டங்களை எல்லாம் நியாயமான முறையில் முதலாளிகள் நல்ல மனதுடன் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் நல்லெண்ணத்துடன் அதை கடைப்பிடித்துவந்தால்தான் ஒழுங்காக காரியங்களை செய்ய முடியும். இதில் தொழிலாளர்கள் ஒருபுறம், தொழிலதிபர்கள் ஒருபுறம் என்று ஏதோ இரண்டு பேர்களும் முரண்பாடு உள்ளவர்களாக கருதிக்கொண்டிருந்தால், அதனால் தொழில் வளர்ச்சிக்கும் நன்மை கிடைக்காது, தொழிலாளர்கள் முன்னேற்ற மடைவதற்கும் வழி வகுக்காது. தொழில் அமைதி

இல்லாவிட்டால் உற்பத்தி பாதகம் ஆகி விடும் என்பது எல்லோருக்கும் நன்ருகத் தெரியும். சட்டத்தை நம்பி சட்ட பூர்வமாக நடக்கிறேம் என்று எல்லோரும் சொல்ல ஆரம்பித்து விட்டால் சமூகத்தில் அமைதிக்கே ரொம்பக் கஷ்டமாகப் போய்விடும். ஆகவே தான் தொழிலாளர்களே நான் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன், சட்டப் பிரச்னைகள் எப்படி இருந்தபோதிலும், நியாயமாக—நல்ல முறையில்—ஒத்துழைப்பைக் கொடுக்கவேண்டும். தொழில் வளம் பெருகுவதன் மூலமாகத்தான் தொழிலாளர் நலன் பெருகும். அதற்கு அடிகோல வேண்டிய பொறுப்பு இன்றைக்கு தொழிற் சங்கத் தலைவர்களிடத்தில் இருக்கிறது. பெருமளவுக்கு இன்றைக்கு அந்தப் பணியில் ஈடுபட்டு நல்ல சேவை செய்திருக்கிருர்கள் என்பதை எல்லோரும் ஒத்துக்கொள்ளவேண்டும். அதை யாரும் மறுக்க முடியாது. இருந்தாலும், ஏதாவது குறைபாடுகள் இல்லாமல் இருக்க முடியாது. அவைகளையும் போக்க வேண்டிய பெரு முயற்சியில் தொழிற் சங்கத் தலைவர்கள் ஈடுபடவேண்டும்.

அதே முறையில் முதலாளிகளைக் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். அவர்களுடைய சுய நன்மையையொட்டிக்கூட, சமூகத் தொழில் உறவு வைத்துக் கொள்வதுதான் நல்லது. சமூகத் தொழில் உறவு இருக்கும்போது தான் தொழில் வளர்ச்சியும், தொழில் நுட்பமும், தொழில் திறமையும் அதிகரிக்கும். அப்படியில்லாமல் இருந்தால் தொழில் வளர்ச்சியைப் பற்றிச் சிந்திக்க நேரமில்லாமல், தொழிலாளர் பிரச்னைகளைப்பற்றியே எப்போதும் சிந்திக்கும் நிலையில் நிர்வாகஸ்தர்கள் இருப்பார்களானுல், நாம் தொழில் வளத்தைப் பெருக்க முடியாது. அந்த நல்லெண்ணத்தைப் பெருக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

இரண்டு விஷயங்களை மட்டும் கனம் சின்னதுரை அவர்கள் வருத்தத்தோடு குறிப்பிட்டார்கள். சர்க்காருக்குச் சக்தியில்லை என்று சொன்னுர்கள். பக்கிரிசாமி பிள்ளை அவர்கள் சர்க்கார் பயப்படுகிறது என்று சொன்னுர்கள். இன்னும் யார் யாரோ ஏதேதோ சொன்னுர்கள். சர்க்கார் முதலாளிகளுக்குச் சொந்தமாய்ப் போய்விட்டது என்று சொல்லுகிருர்கள். இதெல்லாம் விவாதத்தில் சொல்லக்கூடிய வார்த்தைகள் என்றே பதில் சொல்லாமல் விட்டு விட்டேன். நீங்கள் இந்த மாதிரிச் சொல் வதைப்பற்றி இன்னொருவர் சந்தோஷப்பட்டால் அதைப்பற்றிப் பரவாயில்லை. பயந்து இருக்கிற சர்க்கார் தான் நல்ல சர்க்கார். திமிர் பிடித்த சர்க்கார் நல்ல சர்க்கார் அல்ல.

தொழில் கொள்கையைப் பொறுத்த மட்டில் இன்றைக்கு தொழில்களை தேசீய மயமாக்க வேண்டுமா என்பதைப் பற்றி அதிகமாகப் பேசப்பட்டது. தொழில் மான்யம் வரும்போது இதைப்பற்றி 'விளக்கமாகக் கூறுகிறேன். இவ்வளவு நல்ல முறையில் நடக்கிற இலாகாவிற்குப் பாராட்டுதல் தெரிவிக்கும் முறையில் வெட்டுப் பிரேரணையை வாபஸ் வாங்கிக் கொண்டு மான்யத்தை அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

HON. MEMBERS : விவசாயத் தொழிலாளர்களைப் பற்றி. . . .

THE HON. SRI R. VENKATARAMAN : நான் முன்பே ஒரு கேள்விக்கு பதிலளிக்கும்போது சொன்னேன். இந்த வருஷ இறுதிக்குள்ளாக விவசாயத் தொழிலாளர்களுக்குக் கூலி நிர்ணயம் செய்யப்பட்டு விடும்—நிச்சயமாகச் செய்யப்படும்—என்று சொல்லிக்கொள்கிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : அதிக பட்சம் 6 மாதங்களுக்கு மேல் தொழில் தகராறுகள் நீடிக்கக்கூடாது, தீர்க்கப்படவேண்டும், இந்த 6 மாதங்களில் 15 நாட்கள் சம்பளமாவது கொடுக்கப்படவேண்டும் என்பவைகளைப்பற்றியும், தொழிற்சாலைகளில் லேபர் வெல்பேர் ஆபீஸர்களுடைய போக்குப்பற்றியும், மூடி இருக்கக்கூடிய தொழிற்சாலைகளை சர்க்கார் திறந்து நடத்தவேண்டுமென்பதைப்பற்றியும், அமைச்சர் அவர்களுடைய அபிப்பிராயம் என்ன என்று தெரிந்து கொள்ள முடியுமா ?

14th March 1959]

THE HON. SRI R. VENKATARAMAN : ஒரு பெரிய விவாதத்திலே ஒவ்வொருவரும் சொன்ன எல்லாப் பிரச்சினைகளுக்கும் பதில் சொல்ல முடியாது. ஒன்றுக்கு மாத்திரம் நான் பதில் சொல்லி விடுகிறேன். மூடி இருக்கிற தொழிற்சாலைகள் எல்லாவற்றையும் சர்க்கார் எடுத்து நடத்தவேண்டுமென்ற கொள்கையை ஏற்க முடியாது—இதை எந்த ராஜ்யத்திலும் செய்ய முடியாது. மூடுவதற்குக் காரணமே அன்-இக்கனாமிக் யூனிட்ஸ் என்பதுதான். சரியாக வேலை செய்ய முடியாத காரணத்தினால்தான் மூடப்படுகிறது. ஏதோ பிடிவாதமாக மூடப்படுகிறது என்று சொன்னால், அதை எடுத்து நடத்த ஏற்பாடு செய்யலாம். அதற்கு வழிகள் சட்டத்தில் இருக்கின்றன. ஆனால் தனிப்பட்ட நபர்களால் நடத்த முடியவில்லை, பழைய மில்களாக இருக்கின்றன, ஓட்டை-உடைசலாக இருக்கின்றன, அல்லது கட்டுபடியாகாது இருக்கின்றன என்றால், அவைகளை சர்க்கார் எடுத்து நடத்தினால், அது யாருக்கு நஷ்டம் என்று கேட்கிறேன். அதனால் மக்களுக்குத்தான் நஷ்டம். பொது மக்களுக்கு நஷ்டமாக இருப்பதால்தான் அவைகளை எடுத்து நடத்த முடியவில்லை. சமீபத்திலே ஒரு மில்—காளீஸ்வரர் மில்—இதை யாரும் எடுத்து நடத்த முன் வர மாட்டேன் என்று சொல்லி விட்டார்கள். நான் கூட யார் யாருக்கோ சொல்லிப் பார்த்தேன்—ஒருவர் கூட முன்வர வில்லை—மாட்டேன் என்று சொல்லி விட்டார்கள். " ஹாட் பொட்டெட்டோ " மாதிரி—தொட்டால் கை வெந்து போகக் கூடியதாக—ஓட்டை-உடைசலாக இருந்தால் இவற்றை சர்க்கார் எடுத்துக்கொண்டு நடத்த முடியாது. அதைத்தான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

மற்றபடி, இதர விஷயங்களை சர்க்கார் பரிசீலனை செய்துதான் சொல்ல முடியுமே தவிர, கேட்டதற்கெல்லாம் உடனே ஏதாவது வரம் கொடுப்பதா ? நான் யோசனை செய்து தான் சொல்ல வேண்டும்.

DEPUTY SPEAKER : The question is—

' That the allotment of Rs. 30,29,700 under Demand XXIV —Labour including Factories—be reduced by Rs. 100 ".

The cut motion was put and lost.

DEPUTY SPEAKER : The question is—

" That the Government be granted a sum not exceeding Rs. 30,29,700 under Demand XXIV—Labour including Factories."

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8-30 a.m. on Monday, the 16th March 1959. 1-16 p.m.

The House then adjourned.

### IV.—PAPER LAID ON THE TABLE OF THE HOUSE.

*A.—Statutory Rules, Orders and Notifications.*

107. *Notification issued with G.O. No. 275, Local Administration, dated 9th February 1959, extending the term of office of the members of the Ambasamudram Panchayat, Tirunelveli District, under section 10 (1) of the Madras Village Panchayats Act, 1950.* [*Laid on the table of the House under section 113 (4) of* the Madras Village Panchayats Act, 1950 (Madras Act X of 1950).]